# தலைவிரித்து ஆடிய அராஜகம்!

**க**டந்த வெள்ளியன்று இரவு கலைஞர் நடத்தப்பட்ட விதத்தைக் கண்டு நாடே அதிர்ச்சியில் வாயடைத்து நிற்கிறது.

ஜெயலலிதா பதவியேற்ற நாளிலிருந்து சர்க்காரியா கமிஷன், புண்ணாக்கு ஊழல், புழுத்த அரிசி ஊழல் என்று சரமாரியாகக் கலைஞர் மீதும் தி.மு.க. அமைச்சர்கள் மீதும் குற்றச் சாட்டுகளைக் கூறி வந்தாலும், அந்தந்த குற்றச்சாட்டுகளுக்கு தி.மு.க. தரப்பிலிருந்து நெற்றியடியான பதில் தரப்பட்டது. அம்மாவை இது ரொம்பவே அப்செட்டாக்கி விட்டது. குறிப்பாக, புழுத்த அரிசி விவகாரத்தில் கலைஞர் உட்பட பல முன்னாள் அமைச்சர்களைக் கைது செய்துவிட வேண்டுமென்று துடித்தார் முதல்வர். ஆனால் ஒரு பானை சோறு கதையாக விழுப்புரத்தில் பொன்முடி வெளிப்படுத்திய உண்மை, மொத்த விவகாரத்தையும் பிசுபிசுக்க வைத்து விட்டது. விழுப்புரம் சன் தொலைக்காட்சி நிருபரைக் கைது செய்தது பெரிய விளைவுகளை உருவாக்காது என்று நினைத்தார் ஜெ. ஆனால் அதற்கு மாறாக தமிழகம் முழுக்க பத்திரிகையாளர்கள் ஒன்றுபட்டு நின்று போராட்டம் நடத்தினர். வேறு வழியின்றி நிருபர் சுரேஷை நிபந்தனையின்றி ஜாமீனில் விட வேண்டியதாகி விட்டது. தமது அதிகாரத்திற்கு விடப்பட்ட சவாலாக இதைக் கருதிய ஜெ. பத்திரிகையாளர் போராட்டத்திற்குப் பின்னணியாக



• ஜெயில் வாசலில் டி.ஆர். வீரபாண்டியார்



• மாறன் குடும்பத்தினர்...

கலைஞர்தான் இருக்கிறார் என்று முடிவுக்கு வந்து அவருக்கு அதிர்ச்சி வைத்தியம் கொடுக்க நினைத்தார். இரண்டாவது முறையாக தமது குருவாயூர் விஸிட்டை கேன்ஸல் செய்துவிட்டு காரியத்தில் இறங்கினார்.

கண்டதேவி கோயில் பிரச்னை சம்பந்தமாக வெளியூர் சென்றிருந்த புது டி.ஜி.பிக்கு வெள்ளியன்று காலையில் அவசர அழைப்பு கொடுக்கப்பட்டது. முதல்வர் இல்லத்தில், டி.ஜி.பி., போலீஸ் கமிஷனர் முத்துக்கருப்பன், புலனாய்வுத் துறை ஏ.டி.ஜி.பி. வெங்கடகிருஷ்ணன், சி.பி.சி.ஐ.டி. டி.ஐ.ஜி. முகமது அலி தலைமைச் செயலாளர் மற்றும் உள்துறை செயலாளர் கலந்து கொண்ட முக்கியமான கூட்டம் நடந்தது. "நீங்க என்ன செய்வீர்களோ தெரியாது; இன்று இரவுக்குள் கருணாநிதியைக் கைது செய்திட வேண்டும்" என்று கண்டிப்பான குரலில் அவர்களிடம் சொன்னார் ஜெ. அவரது கோபத்தைக் கண்ட அதிகாரிகள் குழு மண்டையை உடைத்துக் கொண்டு காரணத்தைத் தேடி அலைந்தது. மேம்பாலம் சம்பந்தப்பட்ட ஊழல், ஜெயிலில் முஸ்லிம் தீவிரவாதிகள் மீது தாக்குதல் நடத்தியது தொடர்பான வழக்கு, புழுத்த அரிசி விவகாரம் ஆகியவற்றில் எதைச் சொல்லி கலைஞரைக் கைது செய்யலாம் என்று யோசனை செய்ததில், பாலம் ஊழல் விவகாரத்தை எடுத்துக் கொள்வதென முடிவெடுக்கப்பட்டது. இரண்டு நாட்களுக்கு முன்னர்தான் அது பற்றி ஆராயத் துவங்கியிருந்தார்கள். உடனே மாநகராட்சியிடமிருந்து புகார் பெறப்பட்டு, தமிழகம் முழுதும் போலீஸ் அலர்ட் செய்யப்பட்டது.

முதல்வர் புது அமைச்சருக்குப் பதவிப் பிரமாணம் செய்து வைக்க ராஜ்பவனுக்குக் கிளம்பும்போதே கலைஞர் கைதுக்கான

• மத்திய சிறை வாயிலில்



முழுத்திட்டமும் தயாரிக்கப்பட்டுவிட்டது.

ஜெயலலிதா அவசரப்பட்டதற்கு மற்றொரு காரணம், ஜூலை நான்காம் தேதி சுப்ரீம் கோர்ட்டில் அவர் முதல்வரானதை எதிர்த்துப் போடப்பட்ட வழக்கு, விசாரணைக்கு வருகிறது. 'முதல்வராகத் தொடர தமக்குத் தடை ஏதும் விதிக்கப்படுமோ' என்ற பயம் காரணமாகத்தான் இந்த அவசர அதிரடி நடவடிக்கையாம்!

"ஏதோ ஒன்று நடக்கப் போகிறது" என்று தி.மு.க. பிரமுகர்களுக்கு வெள்ளியன்று இரவு பதினோறு மணிவாக்கில் தெரிந்து விட்டது. ஆனால் அவர்கள் எதிர்பார்த்தது ஸ்டாலினுடைய அரெஸ்ட் தான். எனவே அன்று இரவு ஸ்டாலின் வெளியூர் பயணமாகிவிட்டார். ஆனால் யாரும் எதிர்பாராதது கலைஞரின் கைது. தமது ஆலிவர் சாலை இல்லத்தில் நள்ளிரவு வரை புத்தகம் படித்துவிட்டுத் தூங்கிக் கொண்டிருந்த கலைஞரை, தமிழக போலீஸ் எத்தனை முரட்டுத்தனமாக நடந்து கொண்டு, காலை இரண்டு மணி அளவில் கைது செய்தது என்பது சன் தொலைக்காட்சி வாயிலாக எல்லோருக்கும் அச்சடித்தது போல் மனத்தில் பதிந்துவிட்டது. தலைவிரித்தாடிய அராஜகத்தைக் கண்டு உலகமெங்கும் உள்ளவர்கள் கொந்தளித்துப் போயிருக்கிறார்கள்.

கலைஞர் என்றாலே வேப்பங்காயாக நினைக்கும் போலீஸ் அதிகாரிகளை இந்தக் கைது படலத்துக்கு கமிஷனர் தேர்ந்தெடுத்தாராம். ஆலிவர் சாலையிலிருந்து, அண்ணா சாலை சி.பி.சி.ஐ.டி. அலுவலகம், பின்னர் கமிஷனர் அலுவலகம், வேப்பேரி காவல் நிலையம், அப்புறம் நீதிபதி வீடு என்று கலைஞரை வைத்துக் கொண்டு அலைந்திருக்கிறது போலீஸ். அவர் ஏதோ பகிரங்கப்படுத்தப்பட்ட குற்றவாளி போல நடத்தப்பட்டிருக்கிறார். "தங்கள் தலைவரைச் சந்திக்க வேண்டும்" என்று வற்புறுத்திய மத்திய அமைச்சர்கள் மாறனும், பாலுவும் காவலர்களால் கண்மூடித்தனமாகத் தாக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் மீதே வழக்குத் தொடரப்பட்டிருக்கிறது. வேப்பேரி காவல் நிலையத்திலிருந்து நேரடியாக அப்பல்லோவுக்கு மாறனைக் கொண்டு வந்தார்கள். கால்களில் செருப்பில்லை. சட்டை கசங்கி கிழிந்து காணப்பட்டது. மூக்கு கண்ணாடி உடைந்திருந்தது, கலைஞரின் ஒட்டு மொத்தக் குடும்பமும் மாறனின் பின்னால் வந்தது. எல்லோர் கண்களிலும் கண்ணீர். "அவர் கொஞ்சம் கூட அதிர்ச்சியைத் தாங்கும் நிலையில் இல்லை. இப்போது எங்கள் பயம் அவரது உடல்நிலையைக் குறித்து தான்" என்று நம்மிடம் கண்ணீர் மல்கக் கூறினார் கலைஞர் குடும்பப் பெண்மணி ஒருவர்.

இதற்கிடையில் கலைஞரை மருத்துவ சோதனைக்குப் பிறகே ஜெயிலில் அடைக்க வேண்டும் என்ற நீதிபதியின் ஆலோசனைக்கு முரணாக, நேரடியாக ஜெயிலுக்குக் கொண்டு வந்து விட்டது போலீஸ். அதை எதிர்த்து ஜெயில் வாசலிலேயே கனிமொழியுடன் அமர்ந்து விட்டார் கலைஞர். அருகிலுள்ள சேரிப் பகுதியில் இருந்து பெண்களும், ஆண்களும் ஜெயில் வாயிலருகே குவிந்து விட்டார்கள். ஜெ.வுக்கு ஏக அர்ச்சனை! அதற்குள் கலைஞர் மகள் செல்வியும் வந்து விட்டார். தந்தை தரையில் அமர்ந்திருப் பதைப் பார்த்தவுடன், அவருக்குக் கண்ணீர் பொத்துக் கொண்டு வந்து விட்டது. இதற் குள் ஜெனரல் ஆஸ்பத்திரியிலிருந்து டாக் டர்கள் குழு ஒன்று ஜெயிலுக்குள் சென்றது. காலையிலிருந்து மிகவும் சோர்வாக இருந்த கலைஞர் மதியம் மூன்று மணி அளவில்தான் ஒரு டம்ளர் மோர் சாப்பிட்டார். ஒரு மின் விசிறி கொண்ட, பத்துக்கு, பத்து அறையில் அடைக்கப்பட் டார் கலைஞர். ஒரு டிரங்கு பெட்டியில் புத்தகங்களும் கொடுக்கப்பட் டன.

கலைஞர் கைதைத் தொடர்ந்து சட்டம் ஒழுங்கு சவாலாகிப் போகலாம் என்று அரசு எதிர்பார்த்தது. ஆனால் சென்னையைப் பொறுத்த மட்டில் சில இடங்களில் பஸ்மீது தாக்குதல், சாலை மறியல் நடந்ததோடு சரி, மின்சார ரயில்கள் ஓடின. இதற்குக் காரணம் ஒவ்வொரு ஏரியாவிலும் உள்ள தி.மு.க. பிரமுகர்கள் விடியற்காலையிலேயே வீட்டில் கைது செய்யப்பட்டதுதான். தமிழகம் முழுக்க இருபதாயிரம் பேர் கைதானார்கள்! கைதி லிருந்து தப்பித்தவர்களும், நேரம் செல்ல, செல்ல தலைமறைவாகிவிட்டார்கள்.

"பிற்பகல் வாக்கில் அறிவாலயத்தில் கூடிய தமிழக தே.ஜ.மு. தலைவர்கள் கூட்டத்தில், ''தமிழ்நாட்டில் நடைபெறும் அராஜக ஆட்சிக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டு மானால் 356ஐப் பிரயோகிக்கவேண்டும்'' என்று கேட்டுக் கொள்ளப்பட்டது. "எந்த கால கட்டத்திலும், என்ன காரணத்திற்காகவும் 356ஐப் பிரயோகிக்கக் கூடாது'' என்பது தி.மு.கவினரின் அடிப்படைக் கொள்கை என்பது குறிப்பிடத்தக்கது. ஆனால் தலைவிரித் தாடிய அராஜகம் தொடர்ந்தால் தமிழகமே சிறைச்சாலை ஆகும் என்பதால் இந்த உச்ச கட்ட நடவடிக்கை தேவை என்றனர் தி.மு.க. பிரமுகர்கள்.

கலைஞர் கைது செய்யப்பட்ட அராஜகத் தைத் தவிர, மத்திய அமைச்சர்களைக் கைது செய்வதற்கு உள்ள சில விதிமுறைகள் காற்றில் பறக்க விடப்பட்டுவிட்டன.

இந்தப் போக்கைத் துவக்கத்திலேயே நிறுத்தாவிட்டால் நாளை தமிழகத்தில் என்ன நடந்தாலும் கேட்க முடியாத நிலை உண்டா கும் என்று மத்திய அரசு கருதுகிறது. பிரதமர் தலைமையில் நடந்த என்.டி.ஏ. கூட்டத்தைக்



தொடர்ந்து, மத்திய அரசு அதிகாரிகள் வருகை, ஜார்ஜ் பெர்னாண்டஸ் வருகை என்று ஜெயலலிதா அதிர்ச்சியடையத்தக்க விதத்தில் மத்திய அரசின் நடவடிக்கைகள் தொடருகின்றன.

இதன் காரணமாக சன் தொலைக்காட்சி மீது வன்முறை ஏவும் திட்டம் கைவிடப் பட்டது.

"தட்டிக் கேட்க மேலே மத்திய அரசு இருக்கிறது என்ற வகையில் ஒரு கடுமையான நடவடிக்கை தேவை. ஆட்சிக் கலைப்புக்குப் பிரதமர் தயங்கினால் ஆறு மாத காலம் சட்டமன்றத்தைச் செயலற்றதாக்கி வைக்க லாம்" என்று சொல்கிறார் ஒரு முன்னாள் தி.மு.க. அமைச்சர். முதல்கட்ட நடவடிக்கை யாக இப்போது கவர்னரை மாற்றி இருக்கிறார் கள்.

கலைஞர் கைதும், அதைத் தொடர்ந்து நடந்த சம்பவங்களும் தமக்கு இத்தனை எதிர்ப்பைக் கொண்டு சேர்க்கும் என்று ஜெ கருதியிருக்க மாட்டார். தமது ஆட்சியைக் காப்பாற்றிக் கொள்வதற்கான கடைசி நடவடிக்கையில் இறங்கியிருக்கிறார். மத்திய அமைச்சர் மீதுள்ள வழக்குகளை வாபஸ் வாங்குவது, போலீஸ் அதிகாரிகள் சிலரை சஸ்பெண்ட் செய்வது போன்ற நடவடிக்கை கள் மூலம் மத்திய அரசைச் சாந்தப்படுத்த முடியுமா என்று தமது ஆலோசகர்களுடன் யோசித்துக் கொண்டிருக்கிறாராம் ஜெயலலிதா.

— தில்லப்பா

படங்கள்: ராஜன்

# மௌனப் புரட்சியில் பெண்கள்!

நாடாளுமன்றத்திலும், சட்டமன்றத்திலும் பெண்களுக்கு 33சதவீத இடங்களை ஒதுக்கலாமா? கூடாதா? என்று சில வருடங்களாகத் தொடர்ந்து சூடான விவாதங்கள் நடந்து கொண்டே இருக்கின்றன. எந்த முடிவுக்கும் வராமல் தேர்தல்கள் மட்டும் வந்து போய்க் கொண்டிருக்கின்றன.

நாடாளுமன்றத்தில் மட்டுமில்லாது பொதுக் கூட்டங்களில், பத்திரிகைகளில், பெண்களின் அமைப்புகளில் விவாதங்கள் தொடர்கின்றன.

பெண்கள் அரசியலுக்கு வரலாமா, கூடாதா?

அரசியல் பெண்களுக்கான இடமா?

அப்புறம் வீட்டில் யார் சோறு சமைப்பார்கள்?

இந்தக் கேள்விகளுக்கு நடுவில் ஓசை இல்லாமல் ஒரு காரியம் நடந்து விட்டது. தமிழ் நாட்டில் மட்டும் கிட்டத்தட்ட 40,000 பெண்கள் திடீரென்று பொது வாழ்க்கையில் பதவிக்கு வந்துவிட்டார்கள்!

இவர்களெல்லாம் யார்? எங்கிருந்து வந்தார்கள்? எப்படி வந்தார்கள்?

தமிழ் நாட்டில் 1996ல் பஞ்சாயத்து அமைப்புகளுக்கான தேர்தல்கள் நடத்தப்பட்டன. கிராம பஞ்சாயத்து, பஞ்சாயத்து யூனியன், மாவட்ட பஞ்சாயத்து என்று மூன்று அடுக்குகளுக்கு நடந்த இந்தத் தேர்தலில், பெண்களுக்கு 33 சதவீத இட ஒதுக்கீடு அளிக்கப்பட்டதால், தேர்ந்தெடுக்கப்பட்ட மொத்தம் 1,16,747 உறுப்பினர்களில் 38,391 பெண் உறுப்பினர்கள் வர முடிந்தது.

"இவர்களெல்லாம் ஆண்களின் பினாமிகள் தான்."

"சட்டப்படி மூன்றில் ஒரு பங்கு இடங்கள் பெண்களுக்கு ஒதுக்கப்பட்டதால் தங்கள் வீட்டுப் பெண்களை ஆண்கள் தேர்தலில் நிற்க வைத்து விட்டார்கள்."

"உண்மையிலேயே இவர்களை இயக்குவது ஆண்கள்தான். பெண்களுக்கு ஒன்றும் தெரியாது."

பலர் மத்தியில் இப்படிப்பட்ட அபிப்பிராயம் பரவலாக நிலவுகிறது.

அதெப்படி அத்தனை பேரும் ஆண்களின் பினாமிகளாக இருந்துவிட முடியும்? உண்மையில் இந்தப் பெண்கள் எல்லாம் யார்? இவர்களின் அரசியல் பின்னணி என்ன? எப்படி இந்த



• தேவகுமாரி



• மாதங்கி

அமைப்புகளுக்கு வந்தார்கள்?

அவர்கள் குரல்களையே சற்று கேட்டோம்.

தேவகுமாரி, நகர மன்ற உறுப்பினர்: "எனக்கு வயசு நாப்பத்தெட்டு ஆச்சுங்க. பிள்ளைங்க எல்லாம் வளர்ந்து ஹாஸ்டல்ல தங்கி ப்ரொபஷனல் படிப்பு படிக்கறாங்க. எனக்குப் பொதுவாக சோஷியல் சர்வீஸ் செய்யறது ரொம்ப திருப்தியாக இருக்கும். எங்க வார்டை பெண்களுக்குன்னு அறிவிச்ச போது எல்லோரும் வந்து, நீங்க நில்லுங்கன்னு சொன்னாங்க. என் ஹஸ்பெண்ட் டாக்டராக இருக்கிறதால நிறைய பேருக்கு எங்க மேலே நல்ல அபிப்பிராயம் உண்டுங்க. சுயேச்சையாவே நின்னு ஜெயிச்சுட்டேன்."

"எனக்கு கட்சி சார்பு எதுவும் கிடையா

துங்க" என்கிறார் அன்புச் செல்வி.

"நான் பஞ்சாயத்துக்கு வர்றதுக்கு முன்னாடி இருந்தே ஒரு சேவை நிறுவனத்துக்காக எங்க ஏரியாவில் பெண்கள் அமைப்பு பிரதிநிதியாக வேலை பார்த்துக்கிட்டு இருந்தேன். அப்பத்தான் பஞ்சாயத்து தேர்தல்கள் பற்றிய அறிவிப்பு வந்தது. எங்க ஏரியாக்காரர்களும், நான் வேலை செய்யற அமைப்பும் கொடுத்த ஊக்கத்தில் சுயேச்சையாக நின்னு ஜெயிச்சேன்" என்பது தன்னார்வ அமைப்புகளின் ஊக்கத்தோடு வந்த அன்புச் செல்வியின் குரல்.

- இப்படி சுற்றிலும் உள்ளவர்களால் ஊக்குவிக்கப்பட்டு வந்தவர்கள் ஒரு புறமிருக்க அரசியல் கட்சிகளின் வேட்பாளராக வந்தவர்களும் உண்டு.

"எங்க நகராட்சித் தலைவர் பதவிக்கு நின்னவர் எங்க ஹஸ்பன்டோட கிளாஸ்மேட். இந்த வார்டை பெண்களுக்கென ஒதுக்கிய போது எங்க வீட்டுக்காரர் சொல்லித்தான் கட்சி மூலமா தேர்தல்ல நின்னு ஜெயிச்சேன்"- மாதங்கி, நகர்மன்ற உறுப்பினர்.

"நான் முருங்க மரக்கிளையை வெட்டிக்கிட்டு இருந்தேன். அப்ப கையெழுத்து போடச் சொன்னாங்க. சரி, வீட்ல சொல்றாங்கன்னு போட்டேன். மத்தபடி எனக்கு அரசியல் பத்தி பெரிசா எதுவும் தெரியாதுங்க"- சரசுவதி (அ.தி.மு.க.)


• சிவகாமி


• அன்புச் செல்வி

"நான் மீனவ குப்பத்துல பெண்கள் அமைப்பு தலைவியாக இருந்தேன். அப்ப தேர்தல் வந்தது. இந்த வார்டை பெண்களுக்கு ஒதுக்கிடு பண்ணியிருக்குன்னு சொன்னாங்க. நீ நின்னாத்தான் நாங்க ஒத்துழைப்பு தருவோம்னு மத்தவங்க சொன்னாங்க. அ.தி.மு.க. கட்சி மூலமா நின்னு ஜெயிச்சேன்"- கம்சராணி.

இந்த ஐந்து வருடத்தில் பஞ்சாயத்தில் உள்ள பெண்கள் பற்றி காந்தி கிராமப் பல்கலைக் கழகம் நிறைய ஆய்வுகள் செய்திருக்கிறது. அவற்றின்படி தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் ஐந்து வகையான போக்குகளிலிருந்து பெண்கள் அரசியலுக்கு வந்ததாகப் புள்ளி விவரங்கள் சொல்லுகின்றன.

- கணவன்மார் சொல்லி, அரசியல் அமைப்புகளின் ஒத்துழைப்போடு வந்தவர்கள் 65சதவீதம்.
- வீட்டிலுள்ள ஆண்கள் சொல்லி பஞ்சாயத்துக்கு வந்தவர்கள், தன்னார்வ அமைப்புகளால் ஊக்குவிக்கப்பட்டவர்கள். இந்த இரண்டு வகைகளிலுமாக 15 சதவீதம்.
- கட்சி மூலம் வந்தவர்கள், சுற்றிலும் உள்ளவர்களால் ஊக்குவிக்கப்பட்டு வந்தவர்கள் இந்த இரண்டு வகையையும் சேர்த்து 20 சதவீதம்.

ஆக, முற்றிலும் ஆண்களின் கைப்பாவைகளாக வந்தவர்கள்தான் இவர்கள் என்று சொல்லிவிடவே முடியாது.

கணவன்மார் சொல்லி வந்திருந்தாலும் கட்சி மூலம் வந்திருந்தாலும், மற்றவர்களின் ஊக்குவிப்பால் வந்திருந்தாலும் இவர்கள் இந்த நான்கு ஆண்டுகளாக என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்?

இவர்கள் சாதித்தது என்ன? சந்தித்த பிரச்னைகள் என்ன? எப்படி சமாளித்தார்கள்?

இதையெல்லாம் தெரிந்து கொள்வது இன்று அவசியம். ஏனென்றால் அடுத்த உள்ளாட்சித் தேர்தல்கள் இன்னும் நான்கு மாதங்களில் நடந்தாக வேண்டும்.

புதிய முதலமைச்சர் ஜெயலலிதா உள்ளாட்சித் தேர்தல்களை நடத்துவாரா? மாட்டாரா? என்று கூட சில சந்தேகங்கள், யூகங்கள், வரத் தொடங்கிவிட்டன. ஜெயலலிதா என்ன நினைக்கிறார் என்பது நமக்குத் தெரியாது. ஆனால் அவரே நினைத்தாலும் கூட அக்டோபரில் பஞ்சாயத்துத் தேர்தலை நடத்துவதையோ, அதில் தொடர்ந்து பெண்களுக்கு 33 சதவீத இடம் தருவதையோ நிறுத்தி வைக்கவே முடியாது.

காரணம் சட்டம்தான். ஐந்து ஆண்டுகளுக்கு ஒருமுறை உள்ளாட்சி தேர்தல் நடத்துவதையும் அதில் பெண்களுக்குப் பங்கேற்பையும் மாநில அரசு செய்தே ஆகவேண்டும் என்று சட்டத்தில் தனி ஷரத்தே இருக்கிறது.

அட, அப்படி ஒரு சட்டமா? அது எப்படி வந்தது?

அதைத் தெரிந்து கொள்ள, ஓசைப்படாமல் நடந்து கொண்டிருக்கும் இந்த மௌனப் புரட்சியின் முக்கியத்துவத்தையும் புரிந்து கொள்ள கடந்த வருடங்களில் பஞ்சாயத்து அமைப்புகளின் கதையை அடுத்த வாரம் பார்ப்போம். ○

வைகுந்த் பேட்டி

ஓய்வு பெற்ற காவல்துறை தலைவரான வெ. வைகுந்த், தமது 35 ஆண்டு கால போலீஸ் வாழ்க்கையை "நான் சமாளித்த சவால்கள்" என்று புத்தகமாகத் தொகுத்திருக்கிறார். பணி நிமித்தமாக, தமிழக முதல்வர்களுடன் தமக்கேற்பட்ட அனுபவங்களை ருசிகரமாக அதில் சொல்லியிருக்கிறார். ஜெயலலிதாவின் முந்தைய ஆட்சியின் போது, துணிச்சலாகத் தமது கருத்துக்களைச் சொன்னவர் இவர். வீரப்பன் வேட்டை துவக்கப்பட்டுள்ள நிலையில் வைகுந்த்தைச் சந்தித்தோம்.

# "தேவாரத்துக்கு அதிகாரமில்லை!"

"கூட்டு அதிரடிபடைக்குத் தேவாரத்தைத் தலைவராக நியமித்திருப்பது குறித்து..!"

**வைகுந்த்:** தேவாரம் வெற்றி பெற என் வாழ்த்துக்கள். வீரப்பன் காடுகள் தேவாரத்துக்கு அத்துப்படி என்ற வகையிலும், இந்தப் பணியில் அவருக்கு இருக்கும் முன் அனுபவம் காரணமாகவும் தேவாரம் நியமிக்கப்பட்டிருக்கிறார். ஆனால் இதில் உள்ள சிக்கல் என்னவென்றால் அவருக்குச் சட்டப்படி அதிகாரம் இல்லை. போலீஸ் சீருடை கூட அவர் அணிய முடியாது. தற்காப்புக்குத்தான் அவர் ஆயுதங்களை உபயோகிக்க முடியும். ஓய்வு பெற்ற போலீஸ் அதிகாரியான அவர், பணியில் இருக்கும் மற்ற அதிகாரிகளுக்கு ஆணை பிறப்பிக்க முடியாது. இந்திய போலீஸ் சட்டம் 17ம் பிரிவின் படி, 'ஸ்பெஷல் போலீஸ் அதிகாரி' என்று அவரைப் பொறுத்த மட்டில் தனியாக ஆணை போட்டால்தான் அதிகாரங்கள் வந்து சேரும். இது பற்றி அரசுதான் முடிவெடுக்க வேண்டும்.


• தேவாரம்

"முன்பு நடந்த தேடுதல் வேட்டைகளில் மனித உரிமைகள் மீறப்பட்டதாக நிறைய புகார்கள் எழுந்ததே!"

வீரப்பன் ராபின்ஹூட் பாணியில் செயல்பட்டு அப்பகுதி மக்களிடையே செல்வாக்கு பெற்றிருக்கிறான். அவனைப் பற்றிய அச்ச உணர்வு காரணமாகவும் செல்வாக்கு இருக்கக்கூடும். கிராம மக்களிடம் அடக்குமுறையை உபயோகிக்காமல், விஷயங்களைச் சேகரிக்க வேண்டும். வீரப்பன்தான் எதிரியே தவிர மலைவாழ் மக்களல்ல! இதற்கு முன்பு மனித உரிமை மீறல் புகார்கள் எழுந்துள்ளதை மனத்தில் வைத்து அதிரடிப்படை செயல்பட வேண்டும்.

"வீரப்பன் வேட்டை வெற்றி பெறுமா?"

முதலில் வீரப்பன் காட்டுப் பகுதியில்தான் இருக்கிறானா? என்பதே கேள்விக்குறியாக இருக்கிறது. ராஜ்குமார் கடத்தல் விவகாரத்தில் அவர் வீரப்பனின் பிணைக் கைதியாக இருந்தார் என்று சொல்வதை விட, வீரப்பன் தமிழ்த் தீவிரவாதிகளிடம் பிணைக் கைதியாக இருந்தான் என்று சொன்னால் அது மிகையாகாது. பல்வேறு காரணங்களுக்காக ராஜ்குமாரை விடுவிக்க வேண்டிய கட்டாயம் வீரப்பனுக்கு ஏற்பட்டது. ராஜ்குமார் விடுதலைக்குக் கைமாறாக

அதிகார பூர்வமற்ற முறையில், பாதுகாப்பான இடத்திற்கு வீரப்பன் 'நாடு கடத்தப்பட்டானா' என்ற வலுவான சந்தேகம் மக்கள் மனத்தில் எழுந்துள்ளது. அந்த சந்தேகத்திற்கு வலு சேர்க்கும் விதமாக ராஜ்குமார் ரிலீஸ் பற்றிய செய்தி ஒருவாரத்திற்குப் பின்னரே உலகிற்குத் தெரிய வந்தது என்ற புகார் எழுந்தது. அதை மேலும் உறுதிப்படுத்தும் விதமாக, இருபது நாட்களுக்குப் பின்னரே வீரப்பன் வேட்டை முந்தைய ஆட்சியாளர்களால் துவக்கப்பட்டது. மீண்டும் தேடுதல் துவங்கியது; ஆனால் அதற்குள் தேர்தல் வந்து விட்டது.

"ஜெயலலிதா ஆட்சியில் போலீஸ் அதிகாரிகள் நூற்றுக் கணக்கில் மாற்றப்பட்டிருக்கிறார்களே!"

ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். பணியில் நல்ல திறமையான, தகுதி வாய்ந்த, இலட்சியப் பிடிப்புள்ள பிரகாசமான இளைஞர்கள் சேருகிறார்கள். காலப் போக்கில் ஒரு சிலர் மிக அதிகமாக அரசியல்வாதிகளிடம் ஒட்டிக் கொண்டு நடுநிலை தவறி சோரம் போய்விடுகிறார்கள். ஆனால் அதுபோன்ற ஒரு சில கறுப்பு ஆடுகளைத் தவிர பெரும்பாலானோர் ஒரே நிலையில்தான் இலட்சியப் பிடிப்புடன் செயல்படுகிறார்கள். ஆட்சி மாற்றம் ஏற்படும்போது எல்லோரையும் சந்தேகக் கண்கொண்டு



• வைகுந்த்

பார்க்கக் கூடாது. அலகாபாத் நீதிபதியாக இருந்த முல்லா ஒரு முறை இது பற்றி அழகாகச் சொன்னார்: "ஒரு மீன் கூடையில் ஒரு மீன் அழுகியிருந்தால் கூட, மொத்த கூடையும் நாற்றமடிப்பது போல இருக்கும். அதற்காக மொத்த மீன்களையும் தூக்கிப் போட்டு விடக் கூடாது. அதுபோல தவறு செய்தவர்களை மட்டும் தண்டிக்கலாம்; கண்டிக்கலாம்" என்றார் நீதிபதி முல்லா. அதிகாரிகளின் உணர்வுகளையும் நாம் மதிக்க வேண்டும்; அவர்கள் தனிப்பட்ட பிரிவு அல்ல; சமூகத்தில் அவர்களும் அடக்கம். அரசியல்வாதிகள் முறைகேடான செயல்களைச் செய்யச் சொன்னால், அதன் சாதகபாதகங்களை எடுத்துச் சொல்லி விளக்க வேண்டும். அப்படி விளக்கினால் அவர்கள் மேலும் வற்புறுத்த மாட்டார்கள். இது என் அனுபவத்தில் நான் அறிந்து கொண்ட விஷயம்."

சந்திப்பு : ப்ரியன்

படம் : ராஜன்

"அவருக்குச் சட்டப்படி அதிகாரம் இல்லை. போலீஸ் சீருடை கூட அவர் அணிய முடியாது. தற்காப்புக்குத் தான் அவர் ஆயுதங்களை உபயோகிக்க முடியும். ஓய்வு பெற்ற போலீஸ் அதிகாரியான அவர், பணியில் இருக்கும் மற்ற அதிகாரிகளுக்கு ஆணை பிறப்பிக்க முடியாது."

**கடந்த மூன்றரை வருடமாக, அமரர் கல்கியின் கற்பனைக்கு ஈடுகொடுத்து, 'பொன்னியின் செல்வன்' கதைக்குப் படங்கள் வரைந்து கொண்டிருக்கும் சித்திரச் செல்வன் பத்மவாசனைச் சந்தித்து, 'பொன்னியின் செல்வனு'க்குப் படம் வரைந்த அனுபவத்தைப் பற்றிக் கேட்டபோது...**

"என் வாழ்க்கையில் கிடைச்ச பெரிய பாக்கியம். இந்த மாதிரி ஒரு கதையை, இனி யாராலேயும் எழுத முடியாது. இது நிச்சயம் கற்பனையா எழுதப்பட்ட கதையே இல்லை. சோழர் காலத்துல அமரர் கல்கி வாழ்ந்திருக்கணும். தன்னோட பூர்வ ஜென்மத்துல நடந்ததைத்தான் கதையா எழுதியிருக்கணும். எவ்வளவு கதாபாத்திரங்கள், எங்கெங்கோ நடக்கும் சம்பவங்கள், சரித்திர ஆதாரங்கள்! அத்தனையையும் கொஞ்சம் கூட குழப்பமில்லாமல் நகர்த்தி, அருமையா பின்னி, விறுவிறுப்பாகவும் சுவாரசியமாகவும் கதை எழுத முடியுமா? இராமாயணம், மகாபாரதம் மாதிரி இது தமிழ்நாட்டு காப்பியம். வெறும் கதை அல்ல; சோழர் காலத்துக் கல்வெட்டு" என்று உணர்ச்சிவசப்பட்டார் பத்மவாசன்.



'பொன்னியின் செல்வன்' தொடர்கதைக்குப் படம் வரையும் வாய்ப்புக் கிடைத்த போது, பத்மவாசனை விட குதூகலம் அடைந்தது அவரது அப்பா முத்துக்குமார சுவாமிதானாம்.

"இந்த மூன்றரை வருடமாக, என் அப்பா எனக்காக ரொம்பவே உழைத்திருக்கிறார். அவர் சங்கீத பூஷணம் தண்டபாணி தேசிகரின் பிரதம சிஷ்யர். கலா ரசிகர். 'பொன்னியின் செல்வனு'க்குப் படங்கள் போட ஏகப்பட்ட ரெஃபரென்ஸ் புத்தகங்களை எங்கெல்லாமோ தேடி வாங்கித் தந்தார். அவரிடம் ஒரு விஷயம் சொல்லி விட்டால் போதும். அது சரித்திரச் சான்றோ, ஓலைச்சுவடியோ, புத்தகமோ, புகைப்படமோ எதுவாக இருந்தாலும் அலைந்து திரிந்து கொண்டு வந்து கொடுத்து விட்டுத்தான் வேறு வேலை பார்ப்பார். இது போன்ற அப்பா யாருக்கும் கிடைக்கமாட்டாங்க" என்றார் பத்மவாசன் பெருமிதமாக. மகனுக்கு ஆதாரப் புத்தகங்கள் வாங்கித் தந்ததோடு மட்டுமல்லாமல், பெரிய பழுவேட்டரையருக்கு மாடலாக போஸ் தந்ததும் முத்துக்குமார சுவாமிதான்!

# சித்திரச்

"பெரிய பழுவேட்டரையர் இறக்கும் (நெடுமரம் சாய்ந்தது) பாகத்தை நான் வரைய ஆரம்பித்ததும், நான் பயன்படுத்திய உயர்ரக ஜெர்மன் பேனா, எழுதாமல் நின்று விட்டது. எவ்வளவோ முயற்சி



விக்கிறார்களாம்.

"இராமகிருஷ்ண மடத்தின் சுவாமிஜி ஆஷுதோஷா நந்தா, ஆல் இந்தியா ரேடியோ அறிவிப்பாளர் ஜெயராமன் இரு வரும் நிறைய தகவல்கள் தந்து, என்னுடைய ஓவியப் பணிக்கு உதவினார்கள். 'நந்தினி எப்படி இருப்பாள்? குந்தவை எப்படி இருப்பார்?' எனத் துல்லியமாக விவரித்து, குறிப்புகள் வைத்து அனுப்புவார் சுவாமிஜி. ஜெயராமன் ரசிகர், விசிறி என்பதையெல்லாம் தாண்டி அமரர் கல்கியின் பரம வெறியராக இருப்பவர். அவருக்கு அமரர் கல்கியின் எழுத்துக்கள் எல்லாமே தலைகீழ்ப் பாடம். சோழர்குல பரம்பரை, கோடிக்கரைப் பகுதியில் வளரும் மரங்கள், சோழமண்டலத்தைச் சுற்றியுள்ள நாடுகளின் வரைபடம், எல்லை, இப்படி எந்தவொரு சந்தேகம் கேட்

செய்தும் கடைசி வரை பேனா எழு தவே இல்லை. கெட்டுப் போன பேனாவை மேஜை மீது வைத்த போது, அது பழுவேட்டரையரின் உடல் கிடத்தப்பட்ட மாதிரியே தெரிந்தது. என்னையுமறியாமல் அழுது விட்டேன். அதே போல, ஆதித்த கரிகாலன் இறந்த காட்சியையும் வரைய முடியாமல், நெக்குருகி விட்டேன். இரவெல்லாம் அழுது கொண்டேதான் படத்தை வரைய முடிந்தது" என்றார்.

# செல்வன்!



பூர்ணம் விஸ்வநாதன், லால்குடி ஜெயராமன், நடிகர் சிவகுமார், வெ. இறையன்பு, எழுத்தாளர் சுஜாதா, டி.கே. சண்முகம், மறைந்த பத்திரிகையாளர் சாவி போன்றவர்கள் வாரா வாரம் இவர் போடும் படங்களை ரசித்துப் பாராட்டி, ஊக்கு

டாலும் சரித்திரக் காலச் சான்று தந்து விடுவார்'' என்று மனதார நன்றி சொன்னார்.

**ப**த்மவாசனின் மனைவி ராஜியைத் தனியே அழைத்துக் கேட்டால், அங்கே புன்னகை கலந்த புலம்பல்!

"தெய்வீகப் படங்கள் வரையும் போது அவர் உபவாசம் இருக்கிறது வழக்கம்தான். ஆனா பொன்னியின் செல்வனுக்கு வரைய ஆரம்பிச்சதுலேருந்து, வாரத்துல மூணு நாள் விரதமாகவே ஆகி விட்டது! ஏதாவது கல்யாணம், விசேஷம்னு கூப்பிட வருவாங்க. அவர் அழைப்பிதழைக் கையில் வாங்கிக் கொண்டு, ''ஞாயிற்றுக்கிழமையா?''ன்னு தயங்குவார். உடனே, "என்ன? பொன்னியின் செல்வன் இருக்கா? வர முடியாதா''ன்னு சிரிச்சுக்கிட்டே கேட்பாங்க..." என்றார் ராஜி.

''நிஜம்தான். ராஜிக்கு ரொம்பப் பொறுமை. நான் வேளா வேளைக்குச் சாப்பிட்டுட்டு, வரைஞ்சா போதும்பாங்க. மற்றபடி, எந்தத் தொந்திரவும் செய்ய மாட்டாங்க. சமயத்துல நான் படத்தோட அவுட் லைன் வரைஞ்சு, ஓரளவு பூர்த்தி செஞ்சு கொடுத்துடுவேன். ராஜியும், என்னோட தம்பிகளும் சேர்ந்து கறுப்பு தீட்டி, கோடுகள் வரைஞ்சு முழுமையடையச் செய்வாங்க. இப்படியொரு உறவும், சுற்றமும், நட்பும் கிடைக்கிறதே, பெரிய பலம்தான்'' என்றார் பத்மவாசன்.

''பொன்னியின் செல்வன்' கதை நடந்த காலத்தில் அமரர் கல்கியும் வாழ்ந்திருக்கணும். அப்படி இருந்தாத்தான் இப்படி கோர்வையா, நேரில் பார்த்த மாதிரி வர்ணிச்சு எழுத முடியும்னு சொன்னீங்களே! அப்படின்னா, அமரர் கல்கி எந்த கதாபாத்திரமா இருந்திருப்பார்னு நினைக்கறீங்க?''

''அசாத்திய புத்திக்கூர்மையும், வாக்குச் சாதுர்யமும் பார்த்தால், அநிருத்தர்தான் 'அமரர் கல்கி'யோன்னு தோணுது.''

— அனு

அட்டை வண்ணப்படம், படங்கள் : யோகா



# கல்கி-60



# வைர விழா கொண்டாட்டங்கள்!

பத்மவாசனின்

உயிரோட்டமான ஓவியங்களுடன்

# சிவகாமியின் சபதம்





பாஸ்கர் சக்தி எழுதும்

# பூ வாசம் வீடு

இளமை ததும்பும்

கிராமத்துக் காதல் தொடர்!

இன்னும்... 'அடேங்கப்பா!' போட்டிகள்

அசத்தும் பரிசுகள்

படிக்க, சுவைக்க, பாதுகாக்க

வாசகர்களே தயாராகுங்கள்

5.8.2001 ஆண்டு மலரில் ஆரம்பம்!

கிருஷ்ணாவும் பொய்
கருணாநிதியும் பொய்
நாயுடுவும் பொய்

தவிச்ச வாய்க்கு கிருஷ்ணா தண்ணி தானம் பண்ணுற தர்மப் பிரபுவே...

தார்




2001 ஜூலை 8
விஷு ஆனி 24
மலர் : 59
இதழ் : 49

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




# போலீஸ் ராஜ்ஜியம்!

ஜூன் 30 தமிழக வரலாற்றில் ஒரு கரும்புள்ளி. அத்துமீறல், அராஜகம், அகௌரவமான நடத்தை என்று வரிசையாக அபவாத மெடல்களைத் தனக்குத் தானே குத்திக் கொண்டது தமிழக காவல்துறை. ஒரு மூத்த அரசியல் தலைவரைப் பிடித்து, இழுத்துத் தள்ளி கைது செய்து சிறைப்படுத்தியிருக்கிறது.

இத்தகைய முரட்டுத்தனத்துக்கும் மூர்க்கத்துக்கும் என்ன காரணம்?... காவல் துறையின் கட்டவிழ்ந்த நடத்தைக்குப் பின்னணி பலமாக விளங்குவது ஆட்சியாளர்கள் வழங்கும் உரிமை தான்.

கருணாநிதியை எப்படியாவது கைது செய்து சிறையில் வைத்துவிட வேண்டும் என்பது ஜெயலலிதாவின் அரசியல் பழிவாங்கல் நோக்கம். தமது பதவிக்காலமே கேள்விக் குறியாகி நீதிமன்றத்தின் முடிவை எதிர்நோக்கியிருப்பதால், அவசர அவசரமாக கருணாநிதியைச் சிறைவைக்க வேண்டும் என்று செயல்பட்டிருக்கிறார் ஜெ. ஒரு சதித்திட்டமே தீட்டப்பட்டிருப்பது மிகத் தெளிவாகத் தெரிகிறது. வலிந்து இவ்வாறு திட்டம் தீட்டப்படும்போது, காவல் துறைக்கு அதை எப்படியேனும் நிறைவேற்றி




ஆட்சியாளர்களைத் திருப்திப் படுத்தவேண்டும் என்கிற அவசரம்; கட்டாயம்! அந்த அவசரத்தில் சட்டமும் நெறிமுறைகளும் காற்றில் பறக்கவிடப்பட்டுள்ளன.

காவல்துறையின் செய்கைகளை நியாயப்படுத்தியும் கருணாநிதியும் மாறனும் டி.ஆர்.பாலுவும் நாடகமாடினார்கள் என்று பழி சுமத்தியும், முதல்வர் அறிக்கை விடுத்திருப்பதில் ஆச்சர்யமில்லை. அவரிடமிருந்து வேறு எதையும் எதிர்பார்க்க முடியாது.

ஆனால், காவல்துறை தலைவர் ரவீந்திரநாத், 'கருணாநிதி கைதானதால் தமிழகத்தில் பெரிதாகக் கலவரமா வெடித்துவிட்டது? அப்படி எதுவும் நடக்கவில்லையே!' என்று தொலைக்காட்சியில் தோன்றிப் பேசியதை மன்னிக்க முடியாது. ஆயிரக்கணக்கானோர் கைதாகியிருப்பதும் நாடு முழுவதும் அதிர்ந்துபோயிருப்பதும் மறுக்க முடியாத உண்மை.

'எந்த வழக்கையும் சந்திக்கத் தயார், ஓடி ஒளிய விரும்பவில்லை' என்று மேயர் மு.க. ஸ்டாலின் கூறியிருப்பதுதான் அனைத்து நிகழ்வுகளுக்கிடையேயும் கௌரவமான, ஆறுதலான விஷயம்.

மூப்பனாருக்கும் ராமதாஸுக்கும் ஜெயலலிதா அரசைக் கண்டனம் செய்யும் தீரம் இப்போதுதான் பிறந்திருக்கிறது! இனியும் கண்டிக்காவிட்டால் மக்கள் மத்தியில் தலை நிமிர்ந்து நிற்க முடியாது என்கிற இக்கட்டு! தேர்தல் கூட்டணி அமைத்தபோது 'ஜெயலலிதா திருந்திவிட்டார்; ஏற்கெனவே தண்டனையை அனுபவித்துவிட்டார்' என்று சப்பைக்கட்டு கட்டியவர்கள், அவர் ஆட்சிக்கு வந்தால் இத்தகைய அசம்பாவிதங்கள் நேரும் என்று எதிர்பார்க்கத் தவறிவிட்டார்கள் என்பதைக் காட்டிலும், அரசியல் ஆதாயம் எதிர்பார்த்துத் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொண்டார்கள் என்றுதான் சொல்ல வேண்டும்!

தேசிய ஜனநாயக கூட்டணியின் தமிழக பிரிவு உடனடியாக இயங்கியதாலும்




மத்திய அரசு விழிப்புடன் இருந்ததாலும் இருவேறு ஆய்வுக் குழுக்கள் (மத்திய அரசின் உள்ளாட்சித்துறை குழு; தேசிய ஜனநாயக கூட்டணி அனுப்பிய குழு) தமிழகம் வந்து நிலைமையை ஆராய்ந்து மத்திய அரசுக்கு அறிக்கை தந்துள்ளன. இவை தவிர ஆளுனரின் சாரமற்ற வழவழா அறிக்கையும் மத்திய அரசுக்கு வழங்கப்பட்டுள்ளது.

வாஜ்பாய் அரசும் வேகமாக இயங்கி, சரியான முடிவெடுத்து, தமிழக ஆளுனர் ஃபாத்திமா பீவியைத் திரும்ப அழைக்க, அவர் ராஜினாமாவைச் சமர்ப்பித்துவிட்டார். மாறன், டி.ஆர்.பாலு ஆகிய மத்திய அமைச்சர்கள் நியாயமான குற்றச்சாட்டு எதுவுமின்றி கைது செய்யப்பட்டதை அனுமதித்ததோடு, அதை மத்திய அரசுக்குத் தெரிவிக்கவில்லை என்ற குற்றமும் ஃபாத்திமா பீவி பேரில் கூறப்பட்டிருக்கிறது.

356வது பிரிவின் கீழ் தமிழகத்தில் குடியரசுத் தலைவர் ஆட்சி கொண்டுவர வேண்டும் என தி.மு.க. கோருவது அநியாயம் என்று ஒதுக்கிவிட முடியாது. ஆனால் அவ்வாறு செய்வது தவறான முன்னுதாரணங்களுக்கு வழி வகுத்துவிடக்கூடும் என்பதால், மத்திய அரசு 356 விஷயத்தில் எச்சரிக்கை காட்டுகிறது. ஜெயலலிதா முதல்வராக இருப்பதில் சட்டச் சிக்கல் இருக்கிறது; ஆனால் அ.தி.மு.கவுக்குக் கிடைத்த பெரும்பான்மை சந்தேகத்துக்கிடமில்லாதது.

இந்நிலையில் மத்திய அரசு இயங்கியிருக்கும் முறை பாராட்டுக்குரியது. ஃபாத்திமா பீவியின் இடத்தில், வளைந்து கொடுக்காத, சார்புகளற்ற, மனவுறுதி படைத்த ஆளுனர் ஒருவரை நியமிக்க மத்திய அரசு முன்வர வேண்டும். தமிழகத்தை எதிர்நோக்கும் சட்டச் சிக்கல்களையும் தொடரக்கூடிய ஆட்சி அராஜகங்களையும் எதிர்கொள்ள 356 பிரயோகிக்காவிட்டாலும் பீகாரில் செய்ததுபோல இந்த சட்டசபையை ஆறுமாதங்களுக்குத் தாற்காலிகமாக அதிகாரமற்றதாகச் செய்ய மத்திய அரசு முன்வரவேண்டும். ○

அரிசியில் அரசியல் செய்ய நினைக்கும் முதல்வர், பொன்முடியைக் கைது செய்ததில் சிறிதும் ஆச்சர்யம் இல்லை.

ஆனால் சன் தொலைக்காட்சி நிருபர் சுரேஷைக் கைது செய்வது தேன்கூட்டில் கையை வைப்பது போலாகும் என்பதை இப்போது புரிந்து கொண்டிருப்பார் முதல்வர்.



● பத்திரிகையாளர்கள் போராட்டத்தில்...

# அரசியல் பண்பு ஆப்ஸென்ட்!

"விழுப்புரத்தில் நடந்தது போன்று மாநிலத்தின் மற்ற மாவட்டங்களிலும் நடக்கும். நமது திட்டம் பிசு, பிசுத்துப் போகும். எனவே சன் நிருபரைக் கைது செய்து, நமது அதிகாரத்தையும் அடக்குமுறையையும் காட்டினால்தான் இது அடங்கும்" என்று போலீஸ் அதிகாரிகள் முதல்வருக்கு அட்வைஸ் கொடுத்திருக்கின்றனர். இதனால் பலவித கொடுமையான செக்ஷன்களில் சுரேஷை உள்ளே தள்ள உத்தரவிட்டாராம்.

சுரேஷ் கைது பத்திரிகையாளர்கள்மீது ஒரு நேரிடையான அச்சுறுத்தல் என்பது புரிந்துபோய், மறுநாள் காலையில் முதல்வரைச் சந்தித்து சுரேஷை ரிலீஸ் செய்ய மனு கொடுப்பது என்று பத்திரிகையாளர்கள் முடிவு செய்தனர். இதில் பெரும்பாலும் செயல்பட்டது ஆங்கில பத்திரிகை மற்றும் தொலைக்காட்சி நிருபர்கள்தான். மறுநாள், பத்திரிகையாளர்கள், அவர் காது பட குரல் கொடுத்தும், கண்டு கொள்ளாமல் கிளம்பிவிட்டார் ஜெ. இதனால் கடுப்பான நிருபர்கள் கோட்டை வெளிச்சாலையில் முதல்வர் காரை மடக்க முயன்றனர். கமிஷனர் முத்துக்கருப்பன் இணைக் கமிஷனர் சைலேந்திரபாபு ஆகியோர் மிகவும் கடுமையாக நடந்து கொண்டார்கள். 'பயனீர்' ரேவதிக்கு உதட்டில் அடி. 'நக்கீரன்' பிரகாஷ் கீழே தள்ளப்பட்டார். பெண் நிருபர்கள் என்றும் பாராமல் பலத்தை பிரயோகித்தது போலீஸ். மறுநாள் வாயில் கறுப்புத்துணி கட்டி ஊர்வலம் போக முடிவு செய்யப்பட்டது. இதைக் கேள்விப்பட்ட முதல்வர், பத்திரிகையாளர்களின் ஒரு அமைப்பைச் சேர்ந்த தலைவரைச் சந்தித்தார். அவரின் நோக்கம் பிரித்தாளும் சூழ்ச்சியைக் கடைபிடித்து மறுநாள் நடக்கவிருந்த பத்திரிகையாளர் ஊர்வலத்தை பிசு, பிசுக்க வைப்பதுதான். ஆனால் இது வெற்றி பெறவில்லை. மறுநாள் கட்டுக் கோப்பாக ஊர்வலத்திற்கு வந்து கைதாகவும் தயாராகி விட்டார்கள் பத்திரிகையாளர்கள். இதில் கணிசமானவர்கள் பெண்கள். பிரச்னை சீரியஸ் ஆவதை உணர்ந்த அரசு நீதிமன்றத்தில் சுரேஷின் ஜாமீன் மனுவை எதிர்க்க வேண்டாம் என்று வழக்கறிஞர்களுக்கு யோசனை சொல்லிவிட்டது. சுரேஷ் ஜாமீனில் வெளியே வந்தாலும் நூற்றுக்கு மேற்பட்ட பத்திரிகையாளர்கள் கைது செய்யப்பட்டு விடுவிக்கப்பட்டனர் சுரேஷ் மீதுள்ள வழக்கை வாபஸ் வாங்க வேண்டுமென்று விடாப்பிடியாக உள்ளனர் பத்திரிகையாளர்கள். பத்திரிகை சுதந்தரத்தில் குறுக்கிட்டு தடைபோடும் முயற்சி செய்கிறார் ஜெயலலிதா, என்ற கண்டனம் எங்கும் எழுந்திருக்கிறது.

கோட்டையில் பத்திரிகையாளர்களிடம் ஒரு நிமிடம் நின்று மனுவை வாங்கியிருந்தால் பிரச்னைகள் தொடர்ந்திருக்காது. ஆனால் முதல்வரிடம் அதற்கான அரசியல் பண்பு இல்லை என்பது திரும்பத் திரும்ப நிரூபணம் ஆகிவருகிறது.

- தில்லப்பா

படம் : ராஜன்

# கலர் கலாட்டா!

மும்பையைச் சேர்ந்த அழகுக்கலை நிபுணர் லிப்பி லால். (என்னங்கடா பெயரு!) பிரபல அழகு சாதனப் பொருட்களைத் தயாரிக்கும் நிறுவனங்கள், தங்கள் தயாரிப்புகளை அறிமுகப்படுத்த இவரைத்தான் அழைக்கிறார்கள். சமீபத்தில் சென்னை வந்த லிப்பியைச் சந்தித்தோம்.

● மும்பையில் ஒரு பிரபலமான பேஷன் மற்றும் அழகு நிலையம். அங்கே அவ்வப்போது பல பிரபலங்களை அழைத்து 'லஞ்ச்' ஏற்பாடு செய்வார்கள். அந்தச் சமயத்தில், ஆரோக்கிய ஆலோசகர்கள், அழகுக்கலை நிபுணர்கள், யோகா பயிற்சியாளர் என்று யாரையாவது சிறப்பு விருந்தினராக அழைப்பார்கள். ஐந்தாண்டுகளுக்கு முன், என்னை அழைத்த அதே தினத்தில், மும்பையின் இன்னொரு பிரபல மேக்-அப் நிபுணரையும் அழைத்திருந்தார்கள். அங்கே சென்ற என்னை யாருமே கண்டு கொள்ளவில்லை. நானாக வலியப்போய் சிலருக்குப் பியூட்டி டிப்ஸ் கொடுத்த போது, யாருமே சீரியஸாகக் கேட்டுக் கொள்ளவில்லை. ஏமாற்றம் அடைந்தேன். காரணம், நான் அப்போது பிரபலம் அடையவில்லை. மும்பையில், மேல்தட்டு மக்களிடையே பாபுலாரிட்டிதான் முக்கியம். ஆனால், இரண்டாண்டுகளில் நிலைமை தலைகீழ். அதே அழகு நிலையத்தில் நான் பியூட்டி கன்சல்டன்ட் ஆகிவிட்டேன்!

● எம்.டி.வி. தொகுப்பாளினியும், மாடலும் ஆன நேகாவை வைத்துச் செய்முறை விளக்கம் தரும் நிகழ்ச்சி, டெல்லியில். தொகுப்பாளினி என்றாலே கையை, காலை, தலையை அசைத்துக் கொண்டே இருப்பதுதானே இலக்கணம்? ஆனால்,



• மாடலுடன் லிப்பி



• லிப்பி லால்

மேக்-அப் போடுகிற போது, மாடல் ஆடாமல், அசையாமல் உட்கார்ந்திருக்க வேண்டியது அவசியம். அதே நேரம், பார்வையாளர்களுக்குப் போரடிக்கக் கூடாது என்பதற்காக நான் பேசிக் கொண்டே இருப்பேன்! இடையே ஜோக் கூட சொல்வதுண்டு. அன்றைய மாடல் நேகாவுக்கு நகைச்சுவை உணர்வு அதிகம். நான் ஏதோ ஒரு ஜோக் சொல்ல, அவர் சட்டென்று குலுங்கிக் குலுங்கிச் சிரிக்க ஆரம்பித்து விட்டார். கையில் வைத்திருந்த லிப்ஸ்டிக் கன்னாபின்னாவென்று முகத்தில் கலர்பூச, ஒரே கலாட்டாவாகிவிட்டது. கலர் கலாட்டா!

● ஒரு மும்பை நிகழ்ச்சிக்கு ஏற்பாடு

செய்திருந்த மாடல், திடீரென்று வராமல் இருந்து விட்டார். அப்புறம் அவசரம் அவசரமாக, அந்த ஷாப்பிங் சென்டரில் பணிபுரியும் ஒரு பெண்ணையே மாடலாக்கி, நிகழ்ச்சியை முடித்து விட்டோம். ஒரு சிலர் "யார் இந்த புதுமாடல்? இதற்கு முன் வேறு நிகழ்ச்சியில் பார்த்ததாக நினைவில்லையே?" என்று கேட்டனர். பின்னர் அந்த திடீர் மாடலுக்கே மாடலிங்கில் ஆர்வம் வந்து, இப்போது அவர் மும்பையில் பிரபல மாடல்!

● ஜீ.டி.வி.யில் ஒரு மேக்-அப் நிகழ்ச்சி ஷூட்டிங். மும்பையே மழையில் மிதந்த ஒரு நாளில், ஷூட்டிங் குறிப்பிட்ட நேரத்தில், கஷ்டப்பட்டு ஷூட்டிங் ஸ்பாட்டுக்குப் போனால், அங்கு ஒருவருமில்லை. எனக்கு ஷாக். ஒரு மணி நேரம் கழித்து, மெதுவாக படப்பிடிப்புக் குழு வந்து சேர்ந்தது. அதற்குப்பின் ஒரு மணி நேரம் தாமதமாக மாடல் பெண் வந்து சேர்ந்தார். அவரைப் பார்த்தவுடன் எனக்கு இலேசான அதிர்ச்சி. இந்தி படங்களில், கவர்ச்சி வில்லி ரோல்கள் சிலவற்றில் நடித்த நடிகை! எனக்கு அவரை மாடலாகப் பயன்படுத்தத் தயக்கம். ஆனால், வேறு மாடல் கிடைக்காத சூழ்நிலை. ஒரு வழியாக ஷூட்டிங் முடிந்தது. எனக்கோ திருப்தி இல்லை. அந்த நிகழ்ச்சி ஒளி பரப்பாகிற நேரம் கூட எனக்குத் தெரிவிக்கப்படவில்லை. எனவே, நான் டி.வி.யில் அதைப் பார்க்கவே இல்லை. இதில் ஒரு ஆச்சரியம்: இன்று அந்த 'மாடல்' பெண்மணி நிறைய டி.வி. சீரியல்களில் நாயகியாகக் கலக்கிக் கொண்டிருக்கிறார்.

● ஹைதராபாத்தில், நான் ஒரு நிகழ்ச்சிக்குப் போயிருந்தபோது ஒரு பெண் என்னைத் தொடர்பு கொண்டு, "உங்களுக்கு ஒரு மாடல் தேவைப்படுவதாக அறிந்தேன். எனக்கு மாடலிங்கில் ரொம்ப ஆர்வம். ஆனால் நான் கொஞ்சம் குள்ளம் என்பதால், நிராகரிக்கப்படுகிறேன். எனக்கு ஒரு வாய்ப்பு கொடுங்கள்' என்று கண்ணீர் மல்கப் பேசினார். நான் அவரை வரச் சொன்னேன். உயரம் ஒரு குறைதான் என்றாலும், முகம் பளீரென்று இருந்தது. மேக்-அப் பற்றிய செயல்முறை விளக்கத்துக்கு ஏற்ற முகம் என்று எனக்குத் தோன்றியது. அவரையே என் நிகழ்ச்சிக்கு மாடலாகப் பயன்படுத்திக் கொண்டேன். அவர் எனக்கு நன்றி சொன்னபோது கண் கலங்கிவிட்டார். இன்று அவரும் ஹைதராபாத் நகரின் மாடல்களில் ஒருவர். அழகான முகத்துக்கு முக்கியத்துவம் தரும் விளம்பரங்களில் தோன்றுகிறார்.

● என்னுடைய இன்னொரு நிகழ்ச்சிக்கு அழைக்கப்பட்டிருந்தவர்களில் ஒருவர் சினிமா கிசுகிசு எழுதும் பிரபலமான பெண் பத்திரிகையாளர். நிகழ்ச்சிக்கு இரண்டு நாட்களுக்கு முன், அவரிடமிருந்து ஒரு டெலிபோன். கடுமையான குரலில், "எனக்குரிய அழைப்பிதழை, எப்படித் தவறான முகவரிக்கு அனுப்பலாம்?' என்று சண்டை போட்டார். எனக்கு உதறல் எடுத்தது. நிகழ்ச்சிக்கு வந்தவர், முதல் வரிசையில், எனக்கு நேரே வந்து அமர்ந்து விட்டார். எனக்கு ஒரே டென்ஷன். நான் அவரைப் பார்த்து (செயற்கையாக) புன்னகை செய்த போதெல்லாம், அவரது முகத்தில் ரியாக்ஷன் ஏதுமில்லை. நிகழ்ச்சி முழுக்க மனத்தின் ஒரு மூலையில் ஏதாவது தாறுமாறாக எழுதிவிடப் போகிறாரோ? என்ற பயம் இருந்து கொண்டே இருந்தது. நிகழ்ச்சி முடிந்த, மறுநிமிடம், நேரே எழுந்து வந்து, "மிக உபயோகமான நிகழ்ச்சி; அற்புதமாகச் செய்து காட்டினீர்கள். வெல்டன்!" என்று அவர் பாராட்டியபோது என்னால் நம்பவே முடியவில்லை!

— எஸ். சந்திரமௌலி

---

**"அந்தக் கட்சித் தலைவர் இப்ப போய் பூகம்ப நிவாரண நிதி திரட்டுறாரே?"**
**"கட்சிக்குள்ள ஏற்படுற பூகம்பத்துக் கான நிதிங்க அது!"**

***— சீர்காழி ரேவதி***



ஹய்யா!
எனக்கு கோகுலம்
இலவசமா கிடைக்குது!

* உங்கள் குழந்தைகளிடம் படிக்கும் பழக்கத்தை உருவாக்குங்கள்.

* கோகுலம் அவர்களுக்கு அன்பளிப்பாகக் கிடைக்கச் செய்யுங்கள்.

* கல்கி வார இதழுக்கு ஓராண்டு சந்தா ரூ.275/- செலுத்தினால் போதும்; ரூ.36/- பெறுமானமுள்ள தமிழ் அல்லது ஆங்கில கோகுலம் ஆறு மாதங்களுக்கு (ஆறு இதழ்கள்) உங்கள் குழந்தை பெயருக்கு இலவசமாக வந்து சேரும்.

* கல்கி வார இதழுக்கு இரண்டு ஆண்டு சந்தா ரூ.550/- செலுத்தினால் ரூ.72/- பெறுமானமுள்ள தமிழ் அல்லது ஆங்கில கோகுலம் ஓராண்டுக்கு (12 இதழ்கள்) உங்கள் குழந்தை பெயருக்கு இலவசமாக அனுப்பப்படும்.

* ஏற்கெனவே சந்தாதாரர்களாக உள்ளவரும் தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொண்டு பயன்பெறலாம். சந்தா முடிவு தேதி நீடிக்கப்படும்.

* கல்கி என்ற பெயருக்கு மணி ஆர்டர் அல்லது டிமாண்ட் டிராஃப்ட் அனுப்பவும். வெளியூர் காசோலைகள் ஏற்பதற்கில்லை.

# கல்கி சந்தா செலுத்தினால்
# கோகுலம்/GOKULAM
# இலவசம்!

டிடி. அல்லது எம்.ஓ. அனுப்ப முகவரி :
மானேஜர், கல்கி,
47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.

என் பெயர் : ..............................

என் மகன் / மகள் பெயர் : ..............................

..............................

விலாசம் : ..............................

..............................

..............................

..............................

கல்கி வார இதழுக்கு ஓராண்டு / இரண்டு ஆண்டுகள் சந்தா ரூ. .............. அனுப்பியுள்ளேன். என் மகன் / மகள் பெயருக்கு கோகுலம் தமிழ் / ஆங்கிலம் 6/12 இதழ்கள் * அன்பளிப்பாக அனுப்பவும்.

* தேவையற்றதை அடித்து விடவும்.

கையொப்பம் : ..............................

ஜூலை இறுதி வரை மட்டுமே இந்தச் சலுகை! முந்துங்கள்!

ஸ்டுடியோக்களில் அடைந்து கிடந்த தமிழ்ச் சினிமாவை 'பதினாறு வயதினிலே' படத்தின் மூலம் கிராமத்திற்கு அழைத்து வந்தவர் பாரதிராஜா. எம்.ஜி.ஆர்., சிவாஜி ஹீரோயிசத்தில் கட்டுண்டு கிடந்த தமிழ் ரசிகர்களை, அறுபதுகளின் இறுதியில் அறிமுகமான, சப்பாணியும், மயிலுவும் ஆச்சர்யப்பட வைத்தார்கள். கிராமத்துச் சாமானியர்களுக்கும், கனவும், வாழ்க்கையும் உண்டு எனக் காட்டப்பட்ட படத்தில், கொஞ்சம் யதார்த்தமும் இருந்ததால், இன்றளவும் தமிழ் ரசிகர்களின் மனத்தில் சப்பாணிக்கும், மயிலுவுக்கும் இடமிருக்கிறது.


* வினயன்

பாரதிராஜா படம் பிடித்தது ஜனரஞ்சக திரைக்கதை என்றாலும், வங்காளத்தில் 'பதேர் பாஞ்சலி' ஏற்படுத்திய பாதிப்பை, 'பதினாறு வயதினிலே' இங்கே சாதித்துக் காட்டியது. இரண்டாயிரத்தில் வெற்றி பெறுகிற இயக்குனர்கள்கூட, "பாரதிராஜாவின், இந்தப் படம் என்னையும் பாதித்தது" என்று பேட்டி தர வேண்டியிருக்கிறது. அத்தகைய படம் அருகிலிருக்கும் கேரளத்தை எப்படி பாதிக்காமல் இருக்கும்...?

'பதினாறு வயதினிலே' படத்தின் மையக் கருவை உள்வாங்கிக் கொண்டு, ஏற்கெனவே 'தகரா' என்றொரு மலையாளப்படம் கேரளத்தைக் கிடுகிடுக்க வைத்தது. மலையாள இயக்குனர் பரதன் இயக்கிய அந்தப் படம் ஐந்து வருடங்களுக்கு முன்பு ஆவாரம்பூவாக தமிழுக்கு வந்தாலும், அதிலும் செந்தூரப்பூவின் வாசனை அதிகம் இருந்தது. ஆனால் இருபத்தைந்து வருடங்களுக்குப் பிறகு, கேரளத்தில் இப்போது வெளியாகி ஓடிக் கொண்டிருக்கும் 'கருமாடிக்குட்டன்' படத்தைத் தழுவல், உல்டா என்றெல்லாம் ஒதுக்கிவிட முடியாது. காரணம் 'பதினாறு வயதினிலே' படத்தின் கேரள உரிமையைப் பெற்று சின்னச் சின்ன மாற்றங்களோடு அதை ரீமேக் செய்திருப்பது போல படத்தில் அத்தனை ஒற்றுமை!


* கருமாடிக்குட்டன் - நந்தினி

# மீண்டும் மயிலு!


* ராஜ்கண்ணு

ஆஹா... ஒரு தமிழன் படம் இத்தனை வருடங்களுக்குப் பிறகு கேரள ரசிகர்களுக்கு ஜனரஞ்சகத் தீனிப் போடுகிறது என்றால் நமக்குச் சந்தோஷம் பொங்கி வழியாதா என்ன? 'கருமாடிக்குட்டன்' படத்தைப் பார்த்துவிட்டுக் காலரைத் தூக்கிவிட்டபடி

• பாரதிராஜா



நேரே 'பதினாறு வயதினிலே' தயாரிப்பாளர் எஸ்.ஏ.ராஜ்கண்ணுவைச் சந்தித்துக் கேட்ட போது, அவர் சந்தோஷப்படுவதற்குப் பதிலாக அதிர்ச்சியில் உறைந்து போனார்.

"நீங்கள் சொல்வதைப் பார்த்தால், பகிரங்கமாக எங்கள் உரிமையை மீறி இருக்கிறார்கள் என்றே தோன்றுகிறது. உரிமை மீறல் நிகழ்ந்திருக்கும் பட்சத்தில், நான் சும்மாவிடப் போவதில்லை. ஃபிலிம் சேம்பரின் கவனத்திற்கு எடுத்துச் சென்று, இரண்டில் ஒன்று பார்க்காமல் விடமாட்டேன். எனது 'கன்னிப் பருவத்திலே' படத்தையும் இப்படித்தான் தெலுங்கில் திருடிக் கொண்டார்கள். வழக்கு தொடர்ந்த போது வாய்தாவிலேயே என்னை நோகடித்தார்கள். இறுதியில் போனால் போகிறதென்று நானும் மறந்துவிட்டேன். இந்தப் படத்தைப் பார்த்துவிட்டு உங்களோடு பேசுகிறேன்." என்று உஷ்ணத்தோடு உடனே களத்தில் இறங்கிவிட்டார்.

சரி, பாரதிராஜா அலுவலகத்தில் என்ன எதிரொலி? "படம் வெளியாகி ஒரு வாரம் ஆனவுடனேயே எங்களுக்குத் தகவல் வந்தது. நாங்கள் கேள்விப்பட்டவரை இந்தப் படத்தை எஸ்.ஏ. ராஜ்கண்ணுதான் தயாரித்திருக்கிறார் என்று தகவல்கள் வந்தன. அவரும் மறுத்துவிட்ட சூழ்நிலையில் இயக்குனர் என்ன முடிவெடுக்கப் போகிறார் என்று தெரியவில்லை" என்றார்கள்.

"உரிமை மீறல் என்று கொடி பிடிக்கிற அளவிற்கு, கருமாடிக் குட்டனுக்கும், பதினாறு வயதினிலே படத்திற்கும் ஒற்றுமைகள் இல்லை என்று இப்படத்தை இயக்கிய 'சேட்டன்' வினயன் மறுக்க முடியுமா? என்பது சந்தேகம்தான்.

'பதினாறு வயதினிலே' சப்பாணி கமலுக்கும் கருமாடிக்குட்டன் கலாபவன் மணிக்கும் பெரிய வித்தியாசம் எதுவுமில்லை. அதே அப்பாவித்தனம், அதே குழந்தைப் பேச்சு, அதே கோழைச் சிரிப்பு என்று ஒற்றுமைகளை அடுக்கலாம். ஆனால் ஒரே ஒரு வேற்றுமை, சப்பாணி உடல் ஊனமுற்றவர் என்றால் குட்டன் கொஞ்சம் மனநலம் குன்றியவர். அதில் மயில். இதில் நந்தினிக்குட்டி. சப்பாணிக்கு மயில் மீது மானசீகக் காதல். அந்தக் காதலையே வாழ்க்



"கமலா! இன்னைக்குச் சமையல் ரொம்பப் பிரமாதம்!"
"போதும், உங்க சமையலை நீங்களே புகழ்ந்துக்கறது!"
— சக்தி. சரவணன்

கையாக வரித்துக் கொண்டு, மயிலுக்காக எதையும் செய்யத் துடிக்கும் சப்பாணிப் பாத்திரத்தில் போராட்டம் உண்டு. குட்டனும் இந்தக் குணாதிசயத்திற்கு விதிவிலக்கல்ல. அடுத்த ஒற்றுமை இந்த ஊனமுற்ற நாயகர்களை, நாயகிகள் இருவரும் ஆரம்பத்தில் வெறுத்துப் புறக்கணிக்கிறார்கள். சப்பாணி - மயிலு வாழ்க்கையில் 'பரட்டை' பாத்திரம் ஒரு வில்லனாய்க் குறுக்கிடுவது போல, குட்டன் நந்தினிக்குச் சின்ன முதலாளி. ஆத்தா இறந்தபிறகு, சப்பாணியிடம் மயிலு அடைக்கலமாகிறாள். நந்தினியோ பாட்டி இறந்த பிறகு குட்டனிடம் தஞ்சமடைகிறாள். 'ஆசைப்பட்ட வாழ்க்கை கிடைக்கவில்லை என்றால் கிடைத்த வாழ்க்கையை விட்டு விடக் கூடாது' என்று இரண்டு ஜோடிகளுமே அமைதியாக வாழ்க்கையைத் தொடங்குகிறார்கள். ஆனால் கருமாடிக் குட்டனில் சின்ன முதலாளி, நந்தினி கர்ப்பமாகக் காரணமாகி விடுகிறான். பாலியல் பலாத்காரத்திற்கு ஆளாகும் மயிலுவைக் காப்பாற்ற, சப்பாணி பரட்டையைக் கொன்று சிறை செல்கிறான். சப்பாணியின் வருகைக்காக மயிலு காத்திருக்கிறாள். இங்கே சின்ன முதலாளியை நந்தினி கொன்று, சிறை செல்கிறாள். குட்டன் காத்திருக்கிறான்!

இவ்வளவும் போதாதென்று அச்சு பிசகாமல், அப்படியே காப்பியடிக்கப்பட்டிருக்கும் காட்சிகள் வேறு!

பள்ளியிறுதி வகுப்பில் தேர்வு பெற்று, 'ஆத்தா நான் பாஸாயிட்டேன்' என்று மயிலு மகிழ்ச்சிக் கூவலோடு ஓடி வரும் காட்சியைப் போலவே, நந்தினியும் அறிமுகப்படுத்தப்படும் அதிசயம் கருமாடிக் குட்டனில் உண்டு.

மயிலுவின் தாய், நந்தினியின் பாட்டி இருவரும் இறந்தபிறகு, இரண்டு நாயகிகளுக்குமே இழப்பின் சோகத்தில் காய்ச்சல் வருகிறது. இருநாயகர்களும் மருத்துவரை அழைத்துவர ஓடுகிறார்கள். சமைத்துப் போடுகிறார்கள்.

பரட்டையின் ஈவ்டீசிங் கொடுமையில் வெகுண்டு அவன் முகத்தில் உமிழ்கிறாள் மயிலு. நந்தினியோ சின்ன முதலாளியை அறைகிறாள். பரட்டையின் மேனரிச வசனம் 'இது எப்படி இருக்கு?'. சின்ன முதலாளிக்குத் 'தும்ப சானங்கிடே' என்ற கன்னட கெட்ட வார்த்தை. இந்த வில்லன்களிடம் நாயகர்கள் இருவருமே உதைபடுகிறார்கள். இதைப் பார்த்து பரிதாபப்படும் சுதா நாயகிகளின் அனுதாபக் காதல் நாயகர்கள் மீது திரும்புகிறது. இந்த ஈ அடிச்சான் காப்பிப் பட்டியலை நிறைவு செய்யும் முன்பு இன்னொரு 'டச்சிங்' காட்சியைச் சுட்டிக் காட்ட வேண்டி இருக்கிறது.

"நான் சொன்னா என்னவேணா செய்வியா?" என்று சப்பாணியைப் பார்த்துக் காதலுடன் கேட்கிற அதே கேள்வியை நந்தினியும் குட்டனைப் பார்த்துக் கேட்கிறாள்! பாடல்கள் கூட ஒரே சூழ்நிலையில் உட்கார்ந்து கொண்டு தாளம் போட வைக்கின்றன.

நமது கவலையெல்லாம், அரவிந்தன், அடூர் கோபாலகிருஷ்ணன், ஜான் ஆபிரகாம், வாசுதேவன் நாயர் போன்ற ஜாம்பவான்கள் வளர்த்தெடுத்த மலையாள சினிமா, இன்று ஹிட்டான படங்களை உல்டா செய்யும் கதை வறட்சிக்கு ஆளாகி இருக்கிறதே என்பதுதான்!

தமிழ்ப் படங்களை அனுமதியின்றி அப்படியே லபக் செய்யும் மலையாள இயக்குனர்கள், கொஞ்சம் கவனமாக இருப்பது நல்லது. குறிப்பாக 'கருமாடிக் குட்டனை' உருவாக்கியிருக்கும் சாரி... உல்டா செய்திருக்கும் வினயன்!

— விஷ்வல்தாசன்

உ

|| ஸ்ரீ மாத்ரே நம: ||

# ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா

**ஸற்குணேஸ்வரபுரம் : கருவேலி. (Via)எரவாஞ்சேரி – 609 501.**

## ஸ்ரீ மஹாருத்ர யக்ஞம்: த்ரிதின லக்ஷார்ச்சனை

அன்புடையீர்!

கருவேலி என்கிற சர்குணேச்வரபுரத்தில் ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா பல நற்பணிகளை ஆற்றி வருகிறது. **கடந்த தை மாதம் மூன்று தினங்கள் ஸ்ரீ சதசண்டி ஹோமம் வெகு விமரிசையாக நடத்தப்பட்டது. இவற்றின் தொடர்ச்சியாக ஆடி மாதம் 23–ஆம் தேதி முதல் 25–ஆம் தேதி முடிய (08.08.2001 முதல் 10.08.2001 முடிய) மூன்று தினங்கள் ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரி ஸமேத ஸ்ரீ ஸற்குணேச்வரர் திருக்கோயில் வளாகத்தில் ஸகல நலனை முன்னிட்டு ஸ்ரீ மஹாருத்ர யக்ஞம், த்ரிதின லக்ஷார்ச்சனை நடைபெற இருக்கின்றன.** இவை தவிர இந்த மூன்று தினங்களிலும் தினசரி விசேஷமான ஹோமங்களும், ஸ்ரீ ருத்ரத்ரிசதி, லலிதா த்ரிசதி மற்றும் க்ரமார்ச்சனைகள், ஸ்ரீசிவ கவச, இந்திராக்ஷி, விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ர பாராயணங்களும் ஸங்கல்ப பூர்வகமாக நடைபெற இருக்கின்றன. நாட்டின் அமைதியற்ற சூழ்நிலையைக் கருதியும், ஸநாதன தர்மத்தில் மக்களுக்கு மாறுபாடில்லாத நம்பிக்கை உண்டாக விரும்பியும் இவை நடத்தப்பட இருக்கின்றன.



இன்றையச் சூழ்நிலையில் எல்லா வகை பாவங்களையும் நீக்கி புண்ணியம் பெருக்கும் இவற்றை அனுஷ்டிப்பது தனி நபராலோ அல்லது குடும்பத்தாலோ இயலாமலிருக்கிறது. எனவே மெய்யன்பர்கள் அனைவரும் இந்த யக்ஞங்களில் உற்றார் உறவினர்களோடு கலந்து கொண்டு நலம் பெற வேண்டுகிறோம்.

தர்மத்தைவிட்டு விலகிக் கொண்டிருக்கும் சமூகத்தின் மேல் பரமேச்வரனுக்கு ஏற்படும் சினத்தைத் தணிக்கும் பொருட்டும், அதர்மத்தின் ஆக்கிரமிப்பினால் தோன்றும் தீய விளைவுகளிலிருந்து சமூகத்தைக் காக்கவும் ஆன்றோர்கள் அருளிய வண்ணம் இவை நடத்தப்படுகின்றன.

இவைச் சிறப்பாக நடப்பதற்கு அனைவரும் தங்களால் இயன்ற ஹோம, பாராயண, ஜப, அர்ச்சனைகளுக்கான கட்டணங்களையோ, அல்லது நன்கொடைகளையோ **ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபாவின்** பெயருக்கு மணியார்டராகவோ, காசோலையாகவோ, அல்லது டிமாண்ட் டிராப்டாகவோ அனுப்பக் கோருகிறோம்.

ரூபாய் 500/-ம் அதற்கு மேலும் நன்கொடை அளிப்பவர்களுக்கு பூஜையில் வைத்து அபிமந்திரிக்கப்பட்ட 10 கிராம் வெள்ளி டாலர் வழங்கப்பட உள்ளது.

குடந்தை பூந்தோட்டம் நெடுஞ்சாலையில் குடந்தையிலிருந்து 20 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது கருவேலிநாதர் ஆலயம். விழா நாட்களில் சிறப்புப் பேருந்து வசதிகளும், உணவு மற்றும் இருப்பிட வசதிகளும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன.

கருவேலி
9.5.2001

இங்ஙனம்
ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா

---

*பொருளாகவோ, பணமாகவோ நன்கொடைகள் அனுப்ப வேண்டிய முகவரிகள் :*

*ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா*

**1) G.குஞ்சிதபாதம், FCA.,**
G. நடேசன் & கோ
டபீர் மேல்த்தெரு, கும்பகோணம்–612001
போன்: (0435–) 420 047

**2) R. வைத்தியநாதன்**
மேனேஜர், ஐ.ஓ.பி.,
111, காசிராமன் தெரு, கும்பகோணம்.
போன்: (0435)–426512

**3) N. ராமசர்மா**
18, டபீர் புதுத் தெரு,
கும்பகோணம்–612001
போன்: (0435–) 423297

**4) G. கண்ணன்,**
D/127-A, ராஜமன்னார் சாலை
கே.கே.நகர், சென்னை –78
போன்: 4836495/4848995.

# கலை, கலை, கவலை!

நூற்றிமூன்று டிகிரி வெயில் தகிக்கும் சென்னையில், பழங்கால கொடவுன்போல காட்சியளிக்கும் அந்தக் கட்டடத்துக்குள் வியர்வை வழிய நுழைந்தால்...

மரங்களின் முக்காட்டுக்குள் மயங்கிக் கிடக்கும் நிழல் நிறைந்த சிறு வனாந்தரம்! 'சென்னை தானா இது?' என்று கையைக் கிள்ளி நிஜம் பார்க்க வேண்டியிருந்தது.

முதுகு வரை முடி வளர்த்த இளைஞர்களும், ஜீன்ஸ், சுடி இளசுகளும் கொத்துக் கொத்தாய் அமர்ந்து, உல்லாசமாய் உரையாடல் வளர்க்க, பைக் ஒலியில் அதிர்ந்து படபடத்த பறவைகளை வேடிக்கை பார்த்துக் கொண்டே உள்ளே நடந்



தோம்.

முகம் வளைந்து சோகம் சுமக்கும் முதியவர், உலகை வெறுத்தபடி வானம் பார்க்கும் மனிதர் என்று ஆங்காங்கே உயிரோட்டத்துடன் நிறுத்தப்பட்டிருக்கும் சிலைகள். இவைதான் இது சென்னை ஓவியக் கல்லூரி என்பதை நினைவூட்டுகின்றன.

"ஹலோ.. என்ன மரங்களைப் பாத்துட்டே வர்றீங்க... பர்ஸ்ட் இயரா?" என்று நம்மை வினித்தவர் இறுதியாண்டு மாணவர் பனைய செல்வம். (குல தெய்வப் பெயராம்!)

'இந்த முகம் பர்ஸ்ட் இயர் லெவல்தானா?' என்று நம்மை நாமே சந்தேகித்துக் கேட்க, மவுண்ட் ரோட்டில் திடீர் மழை பெய்த மாதிரி 'டபடப' என்று சிரித்தார்.

"ஸாரி... சார். இந்த காலேஜைப் பொறுத்த வரை நோ வயது வித்தியாசம். அங்க போறாரு பாருங்க. அவருக்குகென்ன நாற்பது வயசிருக்குமா? அவர் இங்க ஸ்டூடண்ட்தான்" என்று சிறு விளக்கம் தந்தவரின் தலை முடியைப் பார்த்து 'ஏன் இவ்ளோ நீளமா முடி?' என்று தெரியாமல் கேட்டுத் தொலைத்தோம். ஏதோ ஒரு கோமாளியைப் பார்ப்பதுபோல நம்மைப் பார்த்துவிட்டு, "ஒரு கலைஞன்னா இப்படித்தாங்க இருப்பான். ஏ.ஆர்.ரஹ்மான்ல இருந்து இவ்ளோ பெரிய முடி வைத்திருக்கிற எல்லாருமே எங்



ஓவியக் கல்லூரி ஃபார்முலா!

களைப் பார்த்துக் காப்பியடிச்சவங்கதான்'' என்று கூந்தலைச் சிலுப்பி முறைத்தார்.

"வெளியில இவ்ளோ வெயில். ஆனா இங்க குளுகுளுன்னு இருக்குதில்லே.'' என்றதும், "அதாங்க இந்த காலேஜ் ஸ்பெஷல்..." என்றவர் ரங்கராஜ். இவரும் இறுதியாண்டு மாணவர்.

"காலேஜ் மட்டுமல்ல... கொஞ்சம் இன்டரஸ்ட் மட்டும் இருந்ததுன்னா படிப்பும் சுகம் தான்." குரல் வந்த திசையில் திரும்பினால் சுடிதார் அணிந்த சிலை! ஸாரி... ஜெயஸ்ரீ. இரண்டாமாண்டு மாணவி.

"எவ்வளவோ கோர்ஸ் இருக்கும் போது இதை எப்படித் தேர்ந்தெடுத்தீங்க'' என்றால் 'களுக்' என்று சிரிக்கிறார்.

"இங்க வந்து சேர்ற எல்லாருக்குமே அடிப்படையான விஷயம் ட்ராயிங்தான். சின்ன வயசுலயே எனக்கு ட்ராயிங் ரொம்ப விருப்பம். எதையாவது வரைஞ்சுட்டு இருப்பேன். அந்த ஆசை பெரிதாகி பெரிதாகி இங்க வந்து சேர்ற அளவுக்கு வந்தாச்சு. என் அண்ணனும் இங்க படிச்சவர்தான்.'' என்று கலை மீதான காதலுக்கு விளக்கம் தந்த ஜெயஸ்ரீக்குச் சின்ன வருத்தமும் இருக்கிறது. ''இப்படியொரு கல்லூரியில் படிக்கிறேன் என்றால் யாருக்கும் புரியவே மாட்டேங்குது..." என்கிறார் "மெட்ராஸ்லயா இந்த காலேஜ் இருக்கு?'' என்று கேட்கிறார்களாம்.

வருங்கால சிற்பிகள், ஓவியர்கள் டெக்ஸ்டைல் டிசைனர்கள் என்று ஜாலியாய்ப் பேசிக் கொண்டிருந்தவர்களிடையே, "கவலை இல்லாத வாழ்க்கை இல்லைங்கற மாதிரி கலை இல்லாத வாழ்க்கையுமில்லை. இங்க படிக்கிற ஒவ்வொருத்தருமே ஒவ்வொரு கோணத்துல சிந்திக்கறவங்க. கனவுகள் கற்பனைகளோட இருக்கிற எங்களோட எதிர்காலம் எங்க கையிலதான் இருக்கு'' என்று தத்துவம் பேசுகிற சசியும், தீபாவும் டெக்ஸ்டைல் டிசைனிங் மாணவிகள்.

தாட்பூட் ஆங்கிலம் இவர்களையும் தவியாய்த் தவிக்க விட்டிருக்கிறது.

• மனோகர்

"நகரத்துல இருக்கறவங்க ஆங்கிலம் நல்லா படிப்பாங்க. பேசுவாங்க. கிராமத்துல இருந்து வர்றவங்க எப்படிங்க? கஷ்டம்ங்க. இதை மனசுல வச்சுக்கிட்டு இங்கே ஆசிரியர்களும் தமிழ்ல பேசினா புரியும். தேர்வும் தமிழ்லயே நடத்தினா நல்லா இருக்கும்." என்பது சசி அண்ட் கோவின் கோரிக்கை.

பேசிக் கொண்டிருக்கும்போதே எதிர் ஜன்னலுக்குள்ளிருந்து கறுப்பு கறுப்பாய் உருவம் தெரிய, பார்வையைக் கூர்மையாக்கினோம். அட அவ்வளவும் சிற்பங்கள்!

ஒவ்வொரு சிற்பத்துறை மாணவரும் கோர்ஸ் முடிக்கும்போது ஏதாவது ஒரு சிற்பம் செய்து முடித்திருக்க வேண்டுமாம்.

கண்களில் வியப்பைத் தாங்கி பெயிண்டிங் அறைக்குள் நுழைந்தோம்.

சின்னதான மேடையில் போடப்பட்டிருந்த பெரிய நாற்காலியில் ஒரு கையை கன்னத்தில் தாங்கி, கூரையை வெறித்தபடி ஒரு மாணவர் அமர்ந்திருக்க, அதை உள்வாங்கி தாளில் பென்சிலால் வரைந்து கொண்டிருந்தனர் மாணவர்களும் மாணவிகளும். மாடல் யாரும் வராததால் மாணவரே மாடலாகியிருந்தார்!

அதை மேற்பார்வை செய்து கொண்டிருந்த பெயின்டிங் துறை ஆசிரியர், ஓவியர் மனோகரைச் சந்தித்தோம்.

"நூற்றி ஐம்பது வருட பழமையான கல்லூரி இது. ஆரம்பத்தில் இந்தக் கல்லூரியில் சேர எட்டாம் வகுப்பு படித்திருந்தால் போதும் என்கிற நிலை இருந்தது. இப்ப ப்ளஸ்டு பாஸ் பண்ணியிருக்கணும். என்ட்ரன்ஸ் எக்ஸாம் எழுதி பாஸ் பண்ணினா சீட் கிடைச்சுடும். ஆனா அடிப்படை ட்ராயிங், கலர்ஸ் பற்றித் தெரிஞ்சிருக்கணும். இங்க இளங்கலை படிப்புல காட்சித் தொடர்பு வடிவமைப்பு, வண்ணக்கலை, சிற்பக் கலை, பதிப்போவியம் சிற்பம் தவிர, தொழில்துறைக்குத் தேவையான சுடுமண் வடிவங்கள் தயாரிப்பு, ஆடைக்கான துணி டிசைனிங், விஷுவல் கம்யூனிகேஷன், பதிப்பகத் துறைக்கான வடிவமைப்புக் கலை என்று பல அம்சங்களைக் கற்றுத் தருகிறார்கள். முதுகலை பட்டப் படிப்பும் உண்டு. வருஷத்தில் நூறு பேருக்குத் தான் அனுமதி. கட்டணம் வருஷத்துக்கு இரண்டாயிரம் ரூபாய்க்குள்தான்.

"இங்க படிச்சவங்களுக்கான எதிர்கால வேலை வாய்ப்புகள் அதிகம். இன்னைக்கு டெல்லில நம்பர் ஒன் ஃபேஷன் டிசைனர் நிறுவனத்துல தலைமை டிசைனரா இருக்கறவங்க இங்க படிச்சவங்கதான். ஆர்ட் டைரக்‌ஷன், டிராயிங் மாஸ்டர்ஸ், டெக்ஸ்டைல் டிசைனர்ஸ்னு நிறைய வேலை வாய்ப்புகள் இருக்கு. ஓவியர் ஆதிமூலம், சிற்பி தட்சிணா மூர்த்தி, மணியம் செல்வன், ஆர்ட் டைரக்டர்கள் ஜே.கே., தோட்டாதரணி, மகி, நடிகர் சிவகுமார் சினிமா டைரக்டர்கள் கதிர், பாலு என்று நிறைய பேர் இங்க படிச்சிருக்காங்க. நடிகர் சிவகுமார் கலை பக்கம் வந்திருந்தார்னா எங்கயோ போயிருப்பாரு. அவருடைய ஓவியங்கள் அவ்வளவு அற்புதம்" என்றார் புன்னகை செய்தபடி.

இந்த மாணவர்களுக்கு மாடல் கிடைப்பது தான் கஷ்டமாயிருக்கிறது. மாடல்களாக வருகிறவர்கள் வறுமையில் இருப்பவர்கள்தான். (அதனால்தானோ என்னவோ இங்கிருக்கும் பெரும்பாலான சிற்பங்களும் விரக்தியும் சோகமுமாகவே இருக்கின்றன) வாரத்தில் ஐந்து நாட்கள் மாடல் செய்துவிட்டுச் சென்றால் பணம் கொடுக்கிறார்கள். ஆனால் சிலர் பாதியிலேயே வராமல் இருந்து விடுவதும் உண்டு. மிகவும் விருப்பப்பட்டு இதற்காகவே வருகிறவர்களும் இருக்கிறார்கள்.

ஒரு கலை கிராமத்துக்குள் இதயம் நனைத்துவிட்டு வெளியே வந்த நம்மை, சில மாணவர்கள் ஓடி வந்து பிடித்துக் கொண்டனர். 'இதையும் எழுதுங்க சார்' என்று அவர்கள் கோரஸ் பாட, கேட்டோம் :

"கல்லூரியின் பழைய மாணவர்களின் வொர்க்ஸை எல்லாம் கண்காட்சி மாதிரி வைத்திருந்தாங்க. அதை இப்போது மூடிட்டாங்க. மாணவர்களுக்குக் கொடுக்கப்படும் உபகரணங்களை வருஷ முடிவிலதான் கொடுக்கிறாங்க. இதனால யாருக்கு என்ன லாபம்? டெக்ஸ்டைல்ஸ் பிரிவுல கலர்ஸைப் பொறுத்த வரை மஞ்சள் சிவப்பு தவிர வேற நிறங்களே இல்லை. இதுக்கு ஏதாவது வழி பண்ணச் சொல்லுங்க சார்..." என்றனர் சில மாணவர்கள்.

- ஏக்ஜி

படங்கள் : ஜரிஸ்

---

**"நீயே ஆபீசுக்குச் சரியான நேரத்துக்கு வந்துட்டயில்ல... இன்னைக்குக் கண்டிப்பா மழைதான்!"**

**"அப்ப சாயந்திரம் சீக்கிரமா கிளம்பிடணும் சார்...!"**

***- வி.ரேவதி***



# முதல்வன்!

"**வா**ங்க மிஸ்டர் வஹாப்! புரமோஷனை என்ஜாய் பண்றீங்களா?"

"என்னைவிட சீனியாரிட்டி உள்ள பத்து பேரை மீறி எனக்கு நீங்க கொடுத்த பதவி உயர்வுக்கு ரொம்ப நன்றி சி.எம். சார்."

"வெறும் நன்றி மட்டும் பத்தாதுங்க. டி.ஐ.ஜி. சார்."

சொல்லுங்க. நான் என்ன செய்யணும்?"

"ஒண்ணை மட்டும் நல்லாப் புரிஞ்சுக்கங்க. எதிலும் நீங்க எனக்கு யோசனையே சொல்ல வேண்டாம். நான் சொன்னதை மட்டும் சரியா செஞ்சாப் போதும்."

"யெஸ் சார்."

"உக்காருங்க. பரவாயில்லே உக்காருங்க. போன எலக்‌ஷன்லே நம்ம கட்சி பல முறை முயற்சி செஞ்சும் அந்த அரவிந்த் இன்டஸ்ட்ரீஸ்கிட்டயிருந்து எந்த டொனேஷனும் வாங்க முடியலே. நானே ஃபோன் செஞ்சும் அவங்க மதிக்கலே."

"அப்போ நீங்க எதிர் கட்சியிலே இருந்தீங்க."

"நான் தேர்தல்ல ஜெயிப்பேன்னு அவங்க எதிர்பார்க்கல. இப்போ நான் யார்னு அவங்களுக்குப் புரிய வைக்கணும். என்ன செய்யலாம், மிஸ்டர் வஹாப்?"

"அவங்க ரொம்ப க்ளீன் பார்ட்டிங்க."

"இதச் சொல்லத்தான் உங்களுக்குப் புரமோஷன் கொடுத்தேனா?"

"சாரி சார். எனக்கு ஒண்ணும் தோணலே. இந்த மாதிரி நல்ல இமேஜ் உள்ளவங்களுக்குத் தொல்லை கொடுத்தா நம்ம ஆட்சிக்குக் கெட்ட பேர் வந்துடும்."

"உங்க அட்வைஸ் எல்லாம் வேண்டாம்னு முன்னமே சொன்னேனே, மறந்துட்டீங்களா? நாளைக்குக் காலையிலே மிஸ்டர் அரவிந்த் ஆபீசுக்குப் போகும்போது, போலிஸ் ஜீப்பை அவர் கார் மேலே மோதுங்க. அவர் குடிச்சிட்டு வந்து போலிஸ் ஜீப் மேலே மோதிட்டார்னு எஃப்.ஐ.ஆர். போடுங்க. ஜாமீன்லே விட முடியாத செக்‌ஷன்லே போடுங்க."

"சார்!"

"சொன்னதைச் செய்யுங்க. போன ஆட்சிலே செங்கல்பட்டு சூப்பிரண்டன்டா இருந்தது யாரு?"

"கருப்புசாமி, சார். எங்களுக்கெல்லாம் சீனியர். ரொம்ப நேர்மையான ஆபிசர்."

"போன மாசம் தேர்தல் பிரசாரத்துக்காக காஞ்சிபுரம் போயிட்டிருந்தப்போ என் காரை நிறுத்திச் சோதனை போட்டாரு. நான் எவ்வளவு சொல்லியும் கேட்கலே."

"தலைவர்கள் கார்லே பாம் வெச்சிருக்கறதா புரளி கிளப்பி விட்டிருந்தாங்க. அதனாலே அவர் கட்டாயமா சோதனை போட்டிருப்பார். மற்றபடி அவர் வெரி நைஸ் மேன். அடுத்த மாசம் ரிட்டையர் ஆகப் போறார்."

"என்னை மதிக்காதவனுக்கு ஒரு பாடம் கற்பிக்கணும். ரிட்டையர் ஆகறதுக்கு ஒரு வாரம் முந்தி அவரை சஸ்பெண்ட் பண்ணுங்க."

"சார்!"

"பயப்படாதீங்க. சொன்னதைச் செய்யுங்க.



பால் பாண்டி யார்னு தெரியுமா? ஃபைல்ஸ் எல்லாம் பாத்துட்டீங்களா?"

"சென்னையிலே ஒண்ணாம் நம்பர் கேடிங்க."

"பார்த்துப் பேசுங்க. அவர் நம்ம கட்சி செயற்குழு உறுப்பினரா இருக்காரு. அவர் மேலே இருக்கிற கேசையெல்லாம் இல்லாம பண்ணணும்."

"அவர் மேலே கொலை கேஸ் மட்டும் மூணு இருக்குங்க. எல்லாமே கோர்ட்டில விசாரணையில இருக்கு."

"பப்ளிக் பிராசிக்யூட்டரா நாம யாரைப் போட்டிருக்கோம்?"

"மிஸ்டர் ரவீந்திரநாத். சீனியர் அடவகேட். ஹைகோர்ட்லே பதினைஞ்சு வருஷமா பிராக்டீஸ் பண்ணிட்டிருக்கார்."

"பால் பாண்டி சம்பந்தப்பட்ட கேஸையெல்லாம் வீக் பண்ணச் சொல்லுங்க. சாட்சிகள் எல்லாம் மாற்றிப் பேசணும். கேஸே இல்லாம பண்ணணும்."



"பால் பாண்டி விடுதலையானா ஊரே சிரிக்கும்ங்க. பத்திரிகைக்காரங்க போலீஸைப் பிச்சு உதறிடுவாங்க."

"அதெல்லாம் நான் பார்த்துக்கிறேன். எந்தப் பத்திரிகை நம்ம ஆட்சிக்குப் பெரிய எதிரியா இருக்கு?"

"நெற்றிக்கிரன் தாங்க."

"பி.ஏ.வைக் கூப்பிடுங்க. ராமசாமி! இங்க வாங்க. ஈ.பி. சேர்மனைக் கூப்பிட்டு நெற்றிக்கிரனுக்குப் பவர் கட் பண்ணச் சொல்லுங்க. நம்ம ஆளுங்களை விட்டு அவங்க ஆபீஸ்லே ரகளை பண்ணச் சொல்லுங்க. முக்கியமா நம்ம மகளிர் அணித் தலைவியைக் கூட அனுப்பி வைங்க."

"போன தடவை நாம தேர்தல்லே தோத்ததுக்குக் காரணமே நம்ம ஆட்கள் அந்த பத்திரிகை ஆபிசிலே செய்த ரகளைதான்."

"எனக்குத் தெரியும் மிஸ்டர் வஹாப். சொன்னதைச் செய்யுங்க. அடுத்த வாரம் அந்தப் பத்திரிகை வெளிவரக் கூடாது."

"பத்திரிகைக்காரங்க எல்லாம் உங்க பேட்டிக்காக நாலு மணி நேரமா காத்துக்கிட்டிருக்காங்க."

"நெற்றிக்கிரன் நிருபரும் இருக்காரா?"

"ஆமாங்க."

"அவனைக் கழுத்தைப் பிடிச்சு வெளியே தள்ளுங்க மிஸ்டர் வஹாப். அவனை நல்லா 'கவனிக்க' ஆஸ்பத்திரியிலே படுக்க வைங்க."

"யெஸ் சார்."

"ராமசாமி, நிருபர்களை உள்ளே விடுங்க. அவங்களுக்கு ஸ்வீட், காரம் காபி எல்லாம் கொடுத்தாச்சா?: வாங்க, வாங்க. எல்லோருக்கும் வணக்கம். எங்க ஆட்சியிலே பத்திரிகைக்காரங்களுக்கு எல்லா சலுகைகளும் காட்டப் போறோம்."

"நன்றி சார். இப்போ ஏன் நெற்றிக்கிரன் நிருபரை அந்த இன்ஸ்பெக்டர் இழுத்துக்கிட்டுப் போறாரு?"

"அப்படியா? அந்த இன்ஸ்பெக்டர் மேலே கட்டாயம் நடவடிக்கை எடுக்கிறேன்."

"நீங்க உங்க அரசியல் எதிரிகளைப் பழி வாங்கப் போறதா பேசிக்கிறாங்க."

"இந்த அரசு எந்தப் பழி வாங்கும் நடவடிக்கைகளிலும் ஈடுபடாது."

"போன ஆட்சியிலே துணை முதலமைச்சரா இருந்தவரோட மகனைக் கைது பண்ணியிருக்காங்களே? இது பழி வாங்கும் நடவடிக்கை இல்லையா?"

"இல்லவே இல்லை. மந்திரி மகனா இருந்தாலும் சரி, சாமான்யனின் மகனா இருந்தாலும் சரி, சட்டம் தன் கடமையைத் தொடர்ந்து செய்யும்... என்ன ராமசாமி, ஏதாவது சொல்லணுமா? பத்திரிகைக்காரங்க இருக்காங்களேன்னு பார்க்கறீங்களா? பரவாயில்லே சொல்லுங்க."

"டி.ஐ.ஜி. வஹாப் தன்னுடைய ராஜினாமா கடிதத்தைக் கையிலே வச்சிருக்காரு. உங்களை நேர்ல பார்த்துக் கொடுக்கணுமாம்."

"கொஞ்சம் வெயிட் பண்ணச் சொல்லுங்க. லஞ்ச ஊழலுக்காக அவரை சஸ்பெண்ட் பண்ணச் சொல்லி நான் உத்தரவுப் போட்டதை எப்படியோ தெரிஞ்சுக்கிட்டு இப்போ ராஜினாமாவோட வந்திருக்கார். நாளைக்கு வந்து என்னைப் பார்க்கச் சொல்லுங்க. வேற ஏதாவது கேள்விகள் இருக்கா?"... சி.எம். அக்கறையோடு பத்திரிகையாளர்களை நோக்கிக் கேட்டார்! ○

**அரசு**



★ ஆ. மாலா



★ பி. ராமலட்சுமி



★ ஆ. சக்திவேல்

★ கோபி, கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் முதுகலை கணிப்பொறி பயனியல் முதலாண்டு படிக்கிறேன். என் பெற்றோர் கூலிவேலை செய்பவர்கள். தங்கள் வருமானத்தில் பெரும்பகுதியை என் கல்விக்காக அர்ப்பணித்தவர்கள். இளங்கலை பட்டப்படிப்பில் 83.93 சதம் பெற்றிருக்கிறேன். தங்கள் உதவி கிட்டினால் என் கல்வித் தரத்தை மேலும் உயர்த்திக் கொள்வேன்.

- ஆ. சக்திவேல், காசிபாளையம்

# அரும்புகளின் கல்விக்கு உதவுங்கள்; வாழ்க்கை மலரச் செய்யுங்கள்!

இம்மாதிரி ஆயிரக்கணக்கான விண்ணப்பங்கள் ஆண்டு தோறும் வருகின்றன. கல்வி நிறுவன முதல்வர் சான்றிதழுடன் வருகின்ற விண்ணப்பங்களை அறங்காவலர்கள் பரிசீலித்து தகுதி உடைய மாணவர்களைத் தேர்ந்தெடுத்து உதவித் தொகைகளை வழங்குகிறார்கள். ரூ.10,000 விநியோகத்தில் ஆரம்பித்த இந்த நற்பணி ஆண்டு தோறும் வளர்ந்து இந்த ஆண்டு ரூ.1,75,000 பல மாணவர்களுக்கு விநியோகமாகிறது. சென்ற இதழில் விரிவான அறிவிப்பு இடம் பெற்றது.

★ நான் நல்லூர் அரசினர் மேல்நிலைப் பள்ளியில் முதலாண்டு படிக்கிறேன். ஏழைக் குடும்பத்தில் பிறந்த ஊனமுற்ற மாணவி. எங்கள் குடும்பத்தில் ஐந்து பெண் பிள்ளைகள். விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்த எனக்கு உதவித் தொகை வழங்குமாறு கோருகிறேன்.

- ஆ. மாலா, நல்லூர்

★ திருநெல்வேலி சாரதா மகளிர் கல்லூரியில் மூன்றாம் ஆண்டு கணிப்பொறி இயல் படிக்கிறேன். கடந்த இரு ஆண்டுகளில் 77.9 சதம் மதிப்பெண் பெற்றுள்ளேன். என் தந்தை காலமாகிவிட்டார். தாய், ஒரு பூக்கடையில் பூ கட்டி வருகிறார். குறைந்த வருமானத்தில் கல்விச் செலவுகளைச் சமாளிக்க முடியவில்லை. தயவு செய்து உதவவும்.

- பி. ராமலட்சுமி, திருநெல்வேலி

பொருளாதாரத்தில் பின் தங்கியுள்ள அரும்புகளின் வாழ்க்கை மலர, அவர்களுக்குக் கல்வி வழங்குவதைவிடச் சிறந்த உதவி வேறு என்ன இருக்க முடியும்? இந்தப் புனிதப் பணியில் ஈடுபட கல்கி வாசகர்களையும் அழைக்கிறோம்.

உதவ விரும்புவோர், Kalki Krishnamurthy Memorial Trust என்ற பெயரில் A/c payee செக், டி.டி., அல்லது எம்.ஓ. மூலம் தங்களால் இயன்ற தொகை அனுப்பலாம். ரூ.1000 அல்லது அதற்கு மேற்பட்ட நன்கொடைகள் அரசு பத்திரங்களில் முதலீடாகி நிரந்தரப் பயன் தரும். அதாவது ஆண்டு தோறும் உங்கள் உதவி, மாணவர் சமுதாயத்துப் போய்ச் சேரும். நன்கொடைகளுக்கு 80-G வருமானவரி விலக்கு உண்டு.

நன்கொடைகள் அனுப்ப விலாசம் :

**கி. ராஜேந்திரன்,**
**நிர்வாக அறங்காவலர்,**
**கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை,**
**எண்.1, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம்,**
**நுங்கம்பாக்கம், சென்னை - 600 034.**





• அசோக் பொக்காடியா



• கௌதம் மேத்தா

# மகிழ்ச்சியோடு கடன்...!

பி.எஸ்சி, பி.இ., பி.சி.ஏ., பி.பி.ஏ., கம்ப்யூட்டர், மருத்துவப் படிப்புக்கான பாடப் புத்தகங்களின் விலையைக் கேட்டு, மயக்கம் போடாத பெற்றோர் யாரும் இருக்க முடியாது. இந்தப் பிரச்சனைக்கு மாமருந்தாக முப்பத்தெட்டு வருடங்களுக்கு முன்பு தொடங்கப்பட்டதுதான் 'ஆர்ஓய்ஏ புக்பேங்க் புராஜெக்ட்.'

"ராஜஸ்தான் யூத் அசோஸியேஷன் சார்பாக இரண்டு கல்லூரிகளைச் சேர்ந்த இருபத்தைந்து ஏழை நடுத்தர மாணவர்களுக்குப் புத்தகங்களைக் கடனாகக் கொடுத்தோம். அடுத்த வருடமே ஆயிரம் பேருக்குக் கொடுக்கும் அளவிற்குத் திட்டத்தை விரிவாக்கினோம். இதைக் கேள்விப்பட்டு அப்போதைய தமிழக முதல்வர் காமராஜர் எங்களுக்குப் பாராட்டுக் கடிதம் அனுப்பினார். கடந்த முப்பத்தெட்டு ஆண்டுகளில் ஐம்பதாயிரம் மாணவர்கள் பயன் அடைந்திருக்கிறார்கள். இப்போது சென்னை, செங்கல்பட்டு, தவிர சிவகாசி மற்றும் இன்னுமிரண்டு மாவட்டங்களுக்கும் இந்தச் சேவையை விரிவாக்கம் செய்யப் போகிறோம்" என்கிறார் புக்பேங்க் திட்டத்தின் இப்போதைய தலைவர் அசோக் பொக்காடியா.

இனம், மதம், மொழி என்ற எந்தப் பாகுபாடும் இல்லாமல், விலை உயர்ந்த பாடப் புத்தகங்களை வாங்க கஷ்டப்படும் ஏழை, நடுத்தர மாணவர்கள், தேவைப்படும் புத்தகம் மற்றும் நூலாசிரியர் பெயரைக் குறிப்பிட்டு, கல்லூரி முதல்வரின் ஒப்புதலுடன் விண்ணப்பித்துவிட்டால் போதும். முதலாண்டு மாணவர்களுக்கு ஆகஸ்ட் முதல் வாரத்திலும், இரண்டு மற்றும் மூன்றாமாண்டு மாணவர்களுக்கு ஜூன் முதல் வாரத்திலும் புத்தகங்களை வழங்கிவிடுகிறார்கள்.

ராஜஸ்தான் யூத் அசோசியேஷன் அலுவலகத்திற்குப் பாடப் புத்தகங்களைப் பெற்றுச் செல்ல வந்திருந்த, ராஜ்குமாரி, இந்துமதி, திரிபுரசுந்தரி, சவிதா, சுமதி ஆகிய ஐந்து பேரும் எஞ்ஜினியரிங் இறுதியாண்டு மாணவிகள். "முந்நூறு ரூபாயிலிருந்து, மூவாயிரம் ரூபாய் விலை வரையுள்ள புத்தகங்களை, ஐந்து பைசா கூடச் சேவை கட்டணம் இல்லாமல் கடனாகப் பெற்றுக்கொண்டு, தேர்வு முடிந்ததும் கொடுத்துவிடுகிறோம். இப்போது புக் பேங் சேவை முழுவதையும் கம்ப்யூட்டரைஸ் செய்துட்டாங்க. அதனால் கேட்கும் புத்தகம் உடனே கிடைக்கிறது. எங்கள் யாருக்கும் அரியர்ஸ் கிடையாது. ஃபர்ஸ்ட் கிளாஸ் வாங்கியிருக்கிறோம். காரணம் புக்பேங்கில் கிடைத்த புத்தகங்கள்தான். கல்லூரி நூலகங்களை நம்பி நடப்பது ஒன்றுமில்லை" என்றார்கள்.

"இங்கே புத்தகம் கடனாகப் பெற்று, படித்து முன்னேறியவர்கள், அரசுத் துறைகளிலும் அயல் நாடுகளிலும் பெரிய பதவிகளில் இருக்கிறார்கள். அவர்கள் தரும் நன்கொடையால் இந்தச் சேவை ஒவ்வொரு வருடமும் வளர்ந்து கொண்டே போகிறது. இதைத் திட்டமிட்டு வெற்றிகரமாக நடத்த முடிவதற்கு முழுக் காரணம், எந்த ஊதியமும் பெற்றுக் கொள்ளாத ராஜஸ்தான் இளைஞர் சங்கத்தின் தன்னார்வத் தொண்டர்கள்தான்" என்கிறார் இத்திட்டத்தின் முன்னாள் தலைவர் கௌதம் மேத்தா.

— ஸ்ரீ சக்கரம்

படங்கள் : ஐரிஸ்




# எம்.எல்.ஏக்களுக்கு மூன்று லட்சம்!

• "உள்ளாட்சித் தேர்தல் வரை ஆளும் கட்சி எம்.எல்.ஏக்கள் வசூல் வேட்டையில் இறங்கக் கூடாது; வாலைச் சுருட்டிக் கொண்டு இருக்க வேண்டும்" என்பது அம்மாவின் கட்டளை சரி; அப்படியென்றால் செலவுக்கு என்ன செய்வது? அதற்கும் அம்மா வழி செய்து விட்டார். ஒவ்வொரு ஆளும் கட்சி எம்.எல்.ஏவுக்கும் மாதம் மூன்று லட்சம் மானியம் தருவதாக ஏற்பாடாம். முதல் மாத மானியம் தரப்பட்டதாகச் சொல்கிறார்கள். இதற்கிடையில் "எங்களையும் கவனியுங்கள்" என்று மாவட்டச் செயலாளர்கள் குரல் கொடுக்க, வேறு ஏற்பாடு செய்யப்படும்" என்று அமைதியாக்கப்பட்டிருக்கிறார்கள். இப்போது மதுக்கடைகள் ஒதுக்கீட்டில் குலுக்கல் முறை கையாளப்பட இருக்கிறது. ஆனால் இந்த முறையிலும் பெரும்பாலான கடைகள் ஆளும் கட்சி பிரமுகர்களுக்குக் கிடைக்கும் வகையில் விண்ணப்பங்கள் அவர்களுக்கு மட்டுமே வழங்கப்பட வேண்டுமென்று, மாவட்ட ஆட்சியாளர்களுக்கு ஆளும் கட்சி தலைமை ஸ்டிரிக்டாக சொல்லியிருக்கிறதாம்.

• "சகட்டு மேனிக்குச் சீனியர் ஐ.ஏ.எஸ் அதிகாரிகளைக் கட்டாயக் காத்திருப்பில் வைக்கக் கூடாது. எல்லோரையும் சந்தேகக் கண் கொண்டு பழி வாங்கக் கூடாது" என்று தலைமைச் செயலாளர் நீண்ட நாள் வற்புறுத்தி வந்ததன் காரணமாக பெரும்பாலான அதிகாரிகளுக்குப் போஸ்டிங் போடப்பட்டுள்ளது.

இப்படி ஐ.ஏ.எஸ் அதிகாரிகள் நீண்ட நாள் காக்க வைக்கப்பட்டதற்குக் காரணம், தற்போது அம்மாவுக்கு நெருக்கமாக உள்ள ஒரு ஓய்வு பெற்ற தலைமைச் செயலாளர் நிர்வாகத்தில் தலையிட்டதுதானாம். எந்தவிதமான பொறுப்பும் இல்லாமல் அதிகாரத்தைச் செலுத்தி வருகிறாராம் அந்த அதிகாரி. இது பற்றி சீனியர் ஐ.ஏ.எஸ் அதிகாரிகளிடையே முணுமுணுப்பு ஏற்பட்டிருக்கிறது. இதைத் தெரிந்து கொண்ட முதல்வர் அந்த ஓய்வு பெற்ற அதிகாரிக்கு ஏதாவது பொறுப்பு கொடுக்கலாமா? என்று யோசித்து வருகிறாராம். இதற்கிடையில் வீரப்பனைத் தேடிப் போயிருக்கும் கூட்டு அதிரடிப் படைத் தலைவர் விருப்பத்திற்கேற்ப காவல்துறைத் தலைவர் தூக்கியடிக்கப்பட்டிருக்கிறார்.

• கலைஞர் மகள் கனிமொழி சென்னை தி.நகரில் 'லாண்ட் மார்க்' போன்று பெரிய புத்தகக் கடை திறக்கும் முயற்சியில் இறங்கியிருக்கிறார்.

— சஞ்சயன்

# கின்னஸ் டாக்டர்!

'பழுத்தபழம்' என்பார்களே அப்படித்தான் இருக்கிறார் டாக்டர் லட்சுமணன். வேலூர் தென்னமரம் தெருவில் நின்று 'இரண்டு ரூபாய்' டாக்டர் என்று கேட்டால் எல்லோரும் கைகாட்டுவது இவரது கிளினிக்கைத்தான். இரண்டு ரூபாய் என்பது லட்சுமணன் வாங்கும் கன்சல்டிங் ஃபீஸ். இப்போது அதை அவர் ஐந்து ரூபாயாக உயர்த்தி விட்டாலும், ஏழைகளுக்கு இன்றும் இலவசம்தான். இதனால் உலகிலேயே மிகக் குறைவாய் ஃபீஸ் வாங்கும் டாக்டர் யாரெனக் கேட்டால் கண்ணை மூடிக் கொண்டு திருவாளர் வேலூர் லட்சுமணன் என்று சொல்லிவிடலாம்.

அதோடு உலகின் மிக வயதான டாக்டரும் இவர்தான். ஆமாம்! தொண்ணூற்று ஆறு வயதாகும் டாக்டர் லட்சுமணன் உலக கின்னஸ் ரெக்கார்ட்ஸ் புத்தகத்தில் இந்தத் தகுதியோடு இடம் பிடித்துவிட்ட ஆங்கில மருத்துவர் என்பதால் தமிழர்கள் காலரைத் தூக்கிவிட்டுக் கொள்ளலாம்.



வீடு, கிளினிக் எல்லாம் ஒன்றுதான் இவருக்கு. காலை இரண்டு மணி நேரமும், மாலை இரண்டு மணி நேரமும் நோயாளிகளைச் சந்திக்கும் இந்த மருத்துவ மேதை "எனக்கு நினைவு இருக்கும் வரை சேவை செய்து கொண்ட இருப்பேன்" என்கிறார்.



"1930-ல் ப்ராக்டீஸ் ஆரம்பித்தேன். 1935-ல் கார் வாங்கினேன். வாழ்க்கையில் நான் அனுபவிக்காதது எதுவுமில்லை. கஷ்டத்தையும் சேர்த்துத்தான் சொல்கிறேன். நடுராத்திரியில் வந்து எழுப்புவார்கள். கோபமாக வரும். ஆனால் என் மீது நம்பிக்கை வைத்து வருகிறார்களே என்ற ஆத்மதிருப்தியில் அதை வெளியே காட்டமாட்டேன். அப்படித்தான் ஒரு திருடன் நடு இரவு பன்னிரண்டு மணிக்கு உள்ளே புகுந்து, தூங்கிக் கொண்டிருந்த என்னை எழுப்பினான். கத்தியைக் காட்டிப் பணத்தைக் கேட்டான். அது 1960 என்று நினைக்கிறேன். அப்போது கையில் அறுபது ரூபாய் இருந்தது. அன்று அது பெரிய பணம். பறித்துக் கொண்டு போய் விட்டான்! ஐந்து வருடம் கழித்து ஒரு பெண்மணி, தன் கணவனை அழைத்து வந்தாள். காசநோயின் கடைசிக் கட்டத்தில் இருந்த அவனுக்குத் தீவிர சிகிச்சை அளித்தேன். அவர்களிடம் நயா பைசா கிடையாது. முழுவதும் குணமான பிறகு... "அய்யா என்னைத் தெரியவில்லையா? நான்தான் அந்தத் திருடன்" என்றான்! அப்படியும் நான் கோபப்படாததை எண்ணி அழுதே விட்டான். எனது தொழிலின் வெற்றி ரகசியம் இதுதான். மருத்துவனாக வாழ்க்கையைத் தொடங்க நினைப்பவர்கள் அன்பும், சகிப்புத்தன்மையும் இல்லாவிட்டால், இந்தத் துறைக்கு வருவதையே தவிர்த்து விடுவது நல்லது" என்று அறிவுறுத்தும் டாக்டர் லட்சுமணன், வேலூர், நாளுக்கு நாள் மாசுபடுத்தப்பட்டு வருவதை நினைத்து வருந்துகிறார். முழு ஆரோக்கியத்துடன் இருக்கும் இந்த கின்னஸ் டாக்டரின் உணவு பால்... பால் மேலும் பால்!

— ஜெயந்த்

படம்: ஸ்ரீஹரி

# யார் முகத்தில் கரி?



"முந்தைய அ.தி.மு.க. ஆட்சியில் பொது மக்கள் நலன்களுக்கு விரோதமாக 1993ம் வருடம், இந்தோனேஷியாவிலிருந்து நிலக்கரி இறக்குமதி செய்யப்பட்டது. அந்த இறக்குமதிக்கு டெண்டர் விடப்பட்டதில் முறைகேடுகள் நடந்தன. இது தவிர அந்த நாட்டு நிலக்கரி தரமானது அல்ல. ஆதலால் அதை இறக்குமதி செய்யக் கூடாது என்று சொன்னேன்" - அப்போது பொதுப் பணித் துறை செயலாளராக இருந்த வி. சுந்தரம் தனி நீதிமன்றத்தில் 1999ம் வருடம் நவம்பர் மாதம் கொடுத்த வாக்குமூலம் இது. இந்த வழக்கில் ஜெயலலிதா முதல் குற்றவாளி. கண்ணப்பன் (இப்போது மக்கள் தமிழ் தேசம்) இரண்டாவது குற்றவாளி.

இதில் முக்கியமான அரசு தரப்பு சாட்சி சுந்தரம். ஆனால் அப்போது கொடுத்த வாக்குமூலத்தை அப்படியே சமீபத்தில் மறுத்து விட்டார் சுந்தரம். சுந்தரத்தின் இந்த பல்டியால் வழக்கின் போக்கே மாறி விட்டது.

'ஏன் இந்த பல்டி?' என்று சுந்தரத்திடமே கேட்டால், "இது பல்டியேயல்ல!" என்று மறுக்கிறார்.

"நிலக்கரி இறக்குமதி தொடர்பான, கோப்பு, நான் பொதுப் பணித்துறை செயலாளராக இருக்கும் போது என்னிடம் வந்தது. அப்போது பல சந்தேகங்களை, விளக்கங்களைக் கேட்டேன். தமிழ்நாடு மின்வாரியத் தலைவர் என் சந்தேகங்களுக்குத் திருப்திகரமாக பதிலளித்த பின்தான் கோப்பு முதல்வர் (ஜெ)வரை சென்று கையொப்பம் பெற்றது. கோர்ட்டில் கோப்பு இருக்கிறது. நான் எழுப்பியச் சந்தேகங்களை, கேட்ட விளக்கங்களை வைத்து, "நான் இறக்குமதிக்கு ஒப்புக் கொள்ளவில்லை" என்று செய்தி பரப்பப் பட்டது. மின்வாரியத் தலைவர் கொடுத்த விளக்கம் மட்டும் அமுக்கப்பட்டு விட்டது."

"1994ல் இந்த விவகாரம் சம்பந்தமாகத் தான் நீங்கள் ராஜினாமா செய்ததாகச் சொல்லப்பட்டதே?"

"அது தவறான செய்தி. மலேஷியாவில் எனக்கு ஒரு பொறுப்பு கிடைப்பதாக இருந்தது. அதற்காகத்தான் ராஜினாமா."

"1994-96 காலகட்டத்தில் பலமுறை நீங்கள் நிலக்கரி இறக்குமதி விவகாரத்தில் முறைகேடுகள் நடந்ததாகப் பேசியுள்ளீர்கள். பேட்டியளித்துள்ளீர்கள். 1999ல் தனிநீதிமன்றத்திலும் அப்படியே கூறினீர்கள். இப்போது ஏனிந்த மாற்றம்?"

"அப்போது நான் சுவாமியின் ஜனதா கட்சியில் இருந்தேன். ஜெயலலிதாவுக்கு எதிராக அரசியலில் இருந்ததால் அவ்வாறெல்லாம் பேசினேன்; எழுதினேன். எல்லாம் அரசியலுக்காகத்தான். ஆனால் உண்மை நிலை வேறாகத்தான் இருந்தது. 1996க்குப் பிறகு தி.மு.க. ஆட்சியில் என்னை அரசு தரப்பு சாட்சியாக மாறி விடுமாறு மிரட்டினார்கள். இதுபற்றி அப்போதைய தலைமைச் செயலாளருக்குக் கூட கடிதம் எழுதினேன். அவர் ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லை. கருணாநிதி ஆட்சியில் போலீஸுக்குப் பயந்துதான் அரசு சாட்சியாக மாறி, முறைகேடுகள் நடந்ததாக கோர்ட்டில் சொன்னேன். இப்போதுதான் உண்மையைச் சொல்ல வாய்ப்பு வந்தது."

"நீங்கள் பெரிய பொறுப்புகளை வகித்த ஐ.ஏ.எஸ். அதிகாரி... பின்னர் அரசியல் கட்சியிலும் இருந்தவர். உண்மை பேச எதற்காகப் பயப்பட வேண்டும்?"

"அரசியல்வாதிகள் என்ன வேண்டுமானாலும் சொல்லி விட்டு மாற்றிக் கொள்வார்கள். நானும் அது போல அரசியலில் இருந்தபோது பலவற்றைச் சொன்னேன். போலீஸ் அதிகாரிகள், அரசுதரப்பு சாட்சியாக மாறாவிட்டால் என்னையும் குற்றவாளிகள் பட்டியலில் சேர்ப்பதாகச் சொன்னார்கள். அந்தச் சூழ்நிலையில் வேறென்ன செய்ய முடியும்?"

சந்திப்பு : ப்ரியன்

ஒவ்வொரு முறையும் அருந்ததி அடி வாங்காமல் சண்டையை நிறுத்துவதில்லை. இன்றும் அப்படித்தான்.

தேனாம்பேட்டை மாமா வீட்டில் சின்ன விசேஷம். முடித்துவிட்டு பஸ் ஸ்டாப்பில் நிற்க, அருந்ததி அங்கேயே பிரச்னையை ஆரம்பித்து விட்டாள்.

"நான் கம்ப்யூட்டர் கிளாஸ் போகலாம்னு இருக்கேன்..."

நான் அவள் சொன்னதை மறுபடியும் ஒருமுறை கேட்டு விட்டுப் பலமாய்ச் சிரித்தேன். பக்கத்தில் நின்றவர்கள் என்னைத் திரும்பிப் பார்த்தார்கள். அருந்ததி எப்பொழுதும் இப்படித்தான். யோசித்துத்தான் பேசுகிறாளா என்று தெரியாது. மனத்தில் நினைத்ததைச் சட்டென்று கேட்டு விடுவாள். நான் சுற்றிலும் தேடினேன். கம்ப்யூட்டர் படிக்கச் சொல்லும் விளம்பரங்கள் எதுவுமில்லை.

"படிச்சுட்டு என்ன அமெரிக்கா போகப் போறியா?" என்றேன்.

"படிக்கணும். கம்ப்யூட்டர் தெரிஞ்சுக்கணும்; அவ்வளவுதான்..."

"இங்க பாரு அருந்ததி... இனிமேல் படிச்சு என்ன பிரயோஜனம்? இந்த விசேஷத்துக்குக் கூட குழந்தையை எடுத்துட்டு வர முடியாம பக்கத்துல மாமி வீட்டுல விட்டுட்டு வந்திருக்கோம். அதைக் கவனிக்கவே நேரம் பத்தல... இதில இது வேறயா?"

"நான் அட்ஜஸ்ட் பண்ணிக் குழந்தைய பார்த்துக்குவேன். அதைப்பத்தி நீங்க கவலைப்படாதீங்க... நான் கம்ப்யூட்டர் படிக்கணும். அவ்வளவுதான்..."

எனக்குச் சட்டென ஆத்திரம் வந்தது. பஸ் ஸ்டாப்பிலேயே ஓர் அறைவிடத் தோன்றியது. கட்டுப்படுத்தி நின்றேன். சொன்னால் புரிந்து கொள்ளாத பிடிவாதம். கட்டுப்படுத்தி மேலும் நான் பேச வர, அதற்குள் தி நகர் பஸ் வந்தது. 'வீட்டுக்கு வா பேசிக்கறேன்' என்று பஸ் ஏறிக் கொண்டோம்.

ஒவ்வொரு முறையும் இப்படி ஆரம்பிக்கும் பிரச்னை எங்கே போய் முடியும் என்று எனக்குத் தெரியும். அடிதான் அதற்கு ஒரே முடிவு. ஒரு அறையாவது வாங்கும்வரை அருந்ததி இப்படிக் குழந்தை



மாதிரி அடம் பிடித்துக் கொண்டேதான் இருப்பான்.

ஒருமுறை ஆபீஸில் முரளிதரன் பிரமோஷனுக்கு ட்ரீட் வைத்தார். ஆபீஸ் பக்கத்தில் ஹோட்டல். மெல்லிய ஒளியில் நண்பர்கள் கலந்து கொண்ட 'தண்ணி' பார்ட்டி. வற்புறுத்தினால் மட்டுமே குடிக்கற பழக்கம் எனக்கு. இன்றும் நண்பர்கள் வற்புறுத்த இரண்டு 'பெக்'தான் இறக்கினேன். அதற்குள் ஆட்டம் கண்டது. நண்பன் பன்னீர்தான் ஒரு ஆட்டோ பிடித்து என்னை வீட்டிற்கு அனுப்பி வைத்தான்.

வீட்டின் கதவு தட்ட அருந்ததி திறந்தாள். வாசம் புரிந்து கொண்டாள். வீட்டிற்குள் என்னைவிடவில்லை. அப்படியே நிறுத்திக் கத்த ஆரம்பித்தாள். வீட்டிற்குள் குழந்தை வீறிட்டது. சுற்றிலும் ஆர்வமாய் எரிந்தன விளக்குகள். நான் அருந்ததியை உள்ளே தள்ளி அவசரமாய்க் கதவடைத்தேன். நடந்ததைச் சரியாய் நின்று, முடிந்த வரை விளக்கினேன். அவளுக்குப் புரிந்ததாய்த் தெரியவில்லை. சப்தம் அதிகமானது. அதற்கு மேல் எனக்குப் பொறுமையில்லை. அத்தனைப் போதையிலும் மிகச் சரியாய்க் கன்னத்தில் அறைந்தேன். சட்டென அவளிடம் சப்தம் அடங்கியது. இதை வந்ததுமே செய்திருக்கலாம் என்று தோன்றியது. பிறகு விடிய விடிய அவளது முணுமுணுப்பு சன்னமாய்க் கேட்டதாய் ஞாபகம்.

அடுத்த நாள் நான் குடித்துவிட்டு, கலாட்டா செய்ததாய் அத்தனை வீட்டிற்கும் அறிவித்திருந்தாள். சுற்றிலும் பார்வைகள் என் மீது வெறுப்பைத் தெளித்தன. அருந்ததியிடம் நான் எதுவும் கேட்கவில்லை. அவளைத் திருத்த முடியாது. நான் ஆபீஸ் கிளம்பும்போது சங்கரன் மாமா வந்தார். எதிர்வீடுதான். கிட்டத்தட்ட அறுபது வயது. தெளிந்த அறிவு. முன்னாள் அக்கவுண்ட்ஸ் சிங்கம். இந்நாள் என் குரு. எங்கள் நலம் விரும்பி மற்றும் எங்கள் சண்டைகளின் தற்போதைய பஞ்சாயத்துத் தலைவர்.

# அடி

தவிர்க்க முடியாமல், நடந்ததை அவரிடம் விளக்கினேன். நான் சொன்னதை அப்படியேதான் அவரும் சொன்னார். அருந்ததிக்கு அது மட்டும் எப்படி புரிந்ததென தெரியவில்லை. சேலை நுனியில் கண்களைத் துடைத்து சமாதானமாகி விட்டாள். பிறகு நான், பார்ட்டிகளில் கலந்து கொள்ளலாம். ஆனால் குடிக்கக் கூடாதென தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

இப்படி எல்லா சண்டையிலும் பொறுத்துத்தான் போகிறேன் என்றாலும் அருந்ததிக்குப் பேச்சை வளர்க்காமல் பிரச்னையை முடிக்கத் தெரியாது. ப்ளஸ் டூ வரை படிப்பு இருக்கிறது. என்றாலும் விளக்கிச் சொன்னாலும் புரிவதில்லை. சின்னச் சின்னப் பிரச்னைகளைக் கண்டு கொள்ளாமல் போகும் பக்குவமில்லை.

அருந்ததிக்குப் பயந்தே பவுடரை இரண்டாவது கோட்டிங்கில் நிறுத்திக் கொள்கிறேன். அடிக்கடி நடக்கும் ஆபீஸ் பார்ட்டிகள், நண்பர்களோடு ஜாலியாய்க் கிளம்பும் சினிமா, அந்த சாயந்திர நேர அரட்டை, அவ்வப்போது மட்டும் அடிக்கும் திருட்டுத் தம்மு, எல்லாவற்றையும் அருந்ததிக்காகக் குறைத்திருக்கிறேன்.

எதையுமே புரிந்து கொண்டதில்லை அருந்ததி. அவளுக்கு

சரசுராம்

விடாமல் கத்த மட்டுமே தெரியும். பக்கத்து வீடுகள் எட்டிப் பார்க்க வேண்டும். என்னவென்று அவர்கள் இவளிடம் கேட்க வேண்டும். அதில்தான் அருந்ததிக்குச் சந்தோஷமே! நம் சண்டை நம்மோடு என்று எத்தனையோ முறை எடுத்துச் சொல்லியும் அவள் கேட்கவில்லை. அதற்கொரு நாள் அடி வாங்கினாள்.

**வீ**ட்டிற்குள் வந்தோம். சட்டையைக் கழட்டினேன். அருந்ததி பிரச்னையை ஆரம்பித்து விட்டாள்.

''நான் கேட்டதுக்கு என்ன பதில்?'' என்றாள்.

''கம்ப்யூட்டர் கிம்ப்யூட்டர் எதுவும் வேண்டாம். அதுக்கு மேல பேசாத...'' என்றேன்.

''உங்களுக்கு ஈகோ. உங்களைவிட நான் வளர்ந்திருவேன்னு ஒரு பயம்...''

''சரி... அப்படியே வச்சுக்கோ...''

''இல்ல... நான் படிக்கறதா முடிவு பண்ணிட்டேன்...'' என்றாள் அழுத்தமாக.

பட்டாசுத் திரி பற்றிக் கொண்ட மாதிரி எனக்குள் கோபம் சரசரவென ஏறியது. அதற்கு மேல் பேசப் பிடிக்கவில்லை. என்ன திமிர்? எட்டி, தலைமுடியைக் கொத்தாய்ப் பிடித்தேன். நிமிர்த்தி அவள் முகத்தில் ஒரு குத்து. ஓரமாய் விழுந்தாள். உதட்டில் இரத்தம் வந்து புடைவையில் கொட்டியது. இரத்தம் பார்த்ததும்தான் அருந்ததி அலறினாள். எனக்கு இன்னும் ஆத்திரம் தீரவில்லை. அதற்குள் சப்தம் கேட்டு சங்கரன் மாமா ஓடி வந்தார். நான் மீண்டும் அருந்ததியை அடிக்க வர, அவர் குறுக்கே தடுத்தார்.

''என்னப்பா ஆச்சு...? எப்ப வந்தீங்க? வந்ததும் பிரச்னையா...?'' என்றார்.

அருந்ததி சேலையில் காயம் பொத்தி அழுதாள். சத்தம் கேட்டுக் குழந்தையை



எடுத்துக் கொண்டு மாமியும் ஓடி வந்தார்கள். வாசலில் அதற்குள் கூட்டம் சேர்ந்திருந்தது. அருந்ததியிடம் இரத்தம் பார்த்து மாமி அதிர்ந்தார். இனி கூட்டப் பஞ்சாயத்துதான். பேசித் தீராது. நான் சட்டையைப் போட்டேன். கூட்டம் விலக்கினேன். வெளியே நடந்தேன். சங்கரன் மாமா என் பின்னாலேயே ஓடி வந்தார்.

''எங்கப்பா போற...?''

நான் வேகமாய் நடக்க ஆரம்பித்தேன். அவரும் என் வேகத்திற்கு இணையாய் வந்தார். வெகு தூரம் நடந்தோம். இடையில் பார்க் வந்தது. உள்ளே நுழைந்து, சிமெண்ட் பெஞ்சில் சாய்ந்தோம். எதுவும் பேசவில்லை. எனக்கு வெறுப்பாய் இருந்தது. சங்கரன் மாமா மெதுவாய்ப் பிரச்னையைக் கேட்டார். நான் நடந்ததைச் சொன்னேன்.

''நீ செஞ்சது தப்பு ... அவ படிக்கணும்னு தானே கேட்டா... இதில அடிக்கறதுக்கு என்ன இருக்கு?''

''அதில்ல மாமா...''

'பேசாத பாலு... பொம்பளகிட்ட கை நீட்டாதேன்னு ஆயிரம் தடவ சொல்லிட்டேன். நீ கேட்க மாட்டேங்கற. கோபம் வந்தா சட்டையைப் போட்டுட்டு இப்படி ஊம்பிட வேண்டியதுதானே... அப்புறம் போய்ப் பேசினா எல்லாம் சமாதானம் ஆயிடப் போறது...''

''எப்பப் போயி பேசினாலும் அவளுக்குப் புரியாது மாமா...''

''நீ செஞ்சது ரொம்பத் தப்பு பாலு... போய் அருந்ததிய சமாதானப்படுத்தி ஒரு வார்த்தை மன்னிப்பு கேட்டுரு...'' என்றார்.

''இல்ல மாமா அவளுக்குச் சப்போர்ட் பண்ணி பேசினா ஒரு நிமிஷம்கூட இந்த இடத்தில இருக்க மாட்டேன்... எழுந்திருச்சு ஓடிடுவேன்...'' என்றேன்.

பிறகு இருவரும் எதுவும் பேசிக் கொள்ளவில்லை. நேரம் ஆயிற்று. இருட்டு. கொசு கடிக்க ஆரம்பித்தது. அதற்கு மேல் இருக்க முடியவில்லை. எழுந்து கொண்டோம். எனக்கு இலேசாய் பசிக்கத் தொடங்கியது. வீட்டில் போய்ச் சாப்பிடப் பிடிக்கவில்லை. ஏதாவது கடையில் போய்ச் சாப்பிடத் தோன்றியது. மாமாவிடம் சொன்னேன்.

பார்க்குக்குப் பின்புறம் நடந்தோம். இடதுபுற ரோட்டில் ஒரு கடை இருப்பது ஞாபகம் வந்தது. சுமாரான கடைதான். பரவாயில்லை. கடைக்கு வந்தோம். வாசலிலேயே தோசைக்கல். ஆவி முகத்தில் அடித்தது. உள்ளே வந்து அமர்ந்தோம்.

மறுபடியும் சங்கரன் மாமா அந்தப்

பிரச்னை குறித்து எதுவும் பேசவில்லை. இந்தமுறை மாமாவுக்கு என் மீது கோபம் அதிகம் இருந்தது. இருவரும் இட்லி சாப்பிட்டோம்.

நான் முதலில் எழுந்து அம்புக் குறியிட்ட இடத்தில் கை கழுவப் போனேன். பித்தளை அண்டாவில் தண்ணீர் இருந்தது. கை கழுவினேன். இருந்த கண்ணாடியில் முடிந்த வரை முகம் தேடினேன். லுங்கியில் கை துடைத்துக்கொண்டு நான் திரும்ப, அப்போதுதான் அவன் என் மீது மோதினான்.

கலைந்த தலை முடி. ஒழுங்கில்லாத தாடி. கசங்கிப் பழுப்பேறிய சட்டை லுங்கி. கண்கள் சிவந்து போதையில் இருந்தான். அவன் எச்சில் கை என் சட்டையில் அப்பியது. எனக்குள் ஏற்கெனவே புகைந்த கோபம் மேலும் பற்றியது. அவனது சட்டையை எட்டிப் பிடித்தேன்.

"ராஸ்கல் பார்த்துப் போக மாட்டே...?" என்றேன்.

அவ்வளவுதான். சட்டென அவனும் என் சட்டையைப் பிடித்தான். அசிங்கமாய் இரண்டு வார்த்தைகளைச் சரளமாய் விட்டான். மேலும் இரண்டு பேர் என்னைச் சூழ்ந்துகொண்டார்கள். அதில் ஒருவன் என்னவென்றே விசாரிக்காமல் எச்சில் கையை என் முகத்தில் வைத்தான். எரிச்சல் உணரும் முன்பு என்னைக் காலால் எட்டித் தள்ளினான். நான் அந்தப் பித்தளை அண்டாவை உருட்டிக் கொண்டு விழுந் தேன். அழுக்கு நீரில் நெளிந்தேன். எழ முயற்சி செய்ய, எனக்கு வலியில் கண்கள் இருண்டன.

சங்கரன் மாமா அலறியடித்து ஓடி வந்தார். குறுக்கில் பாய்ந்தார். இடைப்பட்ட அடிகளில் மீதி அவர் மீது விழுந்தன. கைகள் உயர்த்திக் கெஞ்சினார். ஹோட்டல்காரர் ஓடி வந்தார். சண்டையை நிறுத்தினார். "விடுப்பா பாவம்" என்றார்.

"நம்ம பையன் மேல கையை வைக்கறான்... என்ன தில்லு இருக்கணும்...! எந்த ஏரியாடா...?" என்றான் ஒருவன்.

"விடு தாஸு... சாரு கடைக்குப் புதுசு... போப்பா போ..." என்றார் கடைக்காரர்.

"இனி பார்த்து நடந்துக்கோ... உடம்பில உசிரு இருக்காது..." ஒருவன் காய்ந்த கையில் எச்சரித்தான்.

அவர்கள் வெளியேறினார்கள்.

"இந்த ஏரியா ரவுடிங்க அவங்க. அவங்களைப் பகைச்சுட்டு இங்க கடை வைக்க முடியாது சார்... நாமதான் பொறுமையா போகணும்..." என்றார் கடைக்காரர்.

நான் மெல்ல எழுந்தேன். உடம்பில் ஆங்காங்கே வலிக்க ஆரம்பித்தது.



"நம்ம ஹீரோயின் ராசியில்லாத நடிகை!"

"எப்படி?"

"அவங்க சம்பளம் கேட்டு வர்றப்ப நம்மகிட்ட தேவையான பணம் இருந்து தொலைக்கும்!"

— அம்பை தேவா

இருவரும் மெதுவாய் நடந்தோம். எதுவும் பேசிக் கொள்ளவில்லை. அமைதி என்னை யோசிக்க வைத்தது. ச்சே ஒரு அடிகூட அடிக்க முடியவில்லை. அருந்ததியிடம் பரபரப்பாய் வெளிப்படும் கோபம் இவர்களிடம் காட்ட முடியாமல் போன உறுத்தல் என்னை மெல்லத் துரத்தியது. என் மீது எனக்கே வெறுப்பாயிருந்தது.

"இந்தப் பிரச்னையை யாருகிட்டயும் சொல்ல வேண்டாம் மாமா..." என்றேன்.

அவரிடம் பதிலாய்ச் சிரிப்பு வந்தது.

பிறகு இருவரும் எதுவும் பேசவில்லை. மீண்டும் நீண்ட அமைதி. வலியை மறந்து நடையில் வேகம் கூட்டினேன். வீட்டிற்கு வந்தேன். நினைத்தபடி இருட்டில் இருந்தது வீடு. லைட்டைப் போட்டேன். குழந்தை தூங்கியிருந்தது. அருந்ததி கட்டிலில் கவிழ்ந்து படுத்திருந்தாள். தலையணையில் காய்ந்த ஈரம். உதட்டோரம் அடித்த வீக்கம். அவள் அருகில் போய் அமர்ந்து தலையைத் தடவினேன். விழித்துப் பார்த்துவிட்டு மீண்டும் திரும்பிப் படுத்துக் கொண்டாள். மறுபடியும் இலேசான விசும்பல் தொடங்கியது. சாப்பிட்டாயா? என்றதற்குப் பதிலில்லை. குழந்தைப் பால் சாப்பிட்டதா? என்றதற்கும் பதிலில்லை.

"குழந்தைய ஸ்கூல்ல சேர்த்ததும் நீ படிக்கறேன்னா படி..." என்றேன்.

எழுந்து ஆச்சரியமாய் என்னைப் பார்த்தாள்.

"என்னை மன்னிச்சுடு அருந்ததி. அடிச்சது ரொம்ப வலிக்குமில்ல..." என்றேன் அவள் உதட்டோரம் தொட்டுப் பார்த்து.

"அடிச்சா வலிக்கும்னு இன்னைக்குத்தான் தெரியுமாக்கும்...?" என்றாள் அவள்.

"ஆமாம்...!" என்றேன் நான். ○



# S.V.முதியோர் இல்லம்



இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப் படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

எல்லா வயது உட்பட்ட அதிக பட்ச மனநோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

## முதியோர் சேவை பெரியது!

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

**S.V. HOME FOR AGED**
#8, Janakiraman Colony, Near Arumbakkam Bus Stand,
Arumbakkam, Chennai - 600 106.
Phone: 475 5700; 475 1356; 475 5799
Web Page : www.svhome.org
Email: svhome@svhome.org



**ADMISSION NOTIFICATION**

# NATIONAL INSTITUTE OF LABOUR EDUCATION & MANAGEMENT (NILEM)

Offers the following **Six Months Diploma Courses** by Correspondence

- TOTAL QUALITY MANAGEMENT & ISO 9000
- BUSINESS MANAGEMENT
- PERSONNEL MGMT. & INDL. RELATIONS
- HUMAN RESOURCES DEVELOPMENT
- ENVIRONMENT & POLLUTION CONTROL
- QUALITY CONTROL & ISO 9000
- ENVIRONMENTAL MGMT. ISO 14000/14001
- PRODUCTION MANAGEMENT
- SALES & MARKETING MANAGEMENT
- INTERNATIONAL BUSINESS MANAGEMENT
- QUALITY ASSURANCE & ISO 9000
- LABOUR WELFARE
- BUSINESS ADMINISTRATION
- FINANCIAL MANAGEMENT
- MATERIALS MANAGEMENT
- EXPORT & IMPORT MANAGEMENT
- QUALITY ASSURANCE & QS 9000
- INDUSTRIAL SAFETY
- LABOUR LAWS
- OFFICE ADMINISTRATION
- CONTRACTS MANAGEMENT
- FIRE & SAFETY MANAGEMENT
- INDUSTRIAL LAW
- MANAGEMENT DEVELOPMENT

No formal qualification is required for joining the courses. Each diploma has 4 written papers. Tuition Fee Rs. 800/- (Including Study Materials & Model Question Papers). Examination will be conducted in all major centres in India. For detailed Prospectus & Application Form send Rs. 30/- by D.D./M.O./I.P.O. in favour of **NATIONAL INSTITUTE OF LABOUR EDUCATION & MANAGEMENT** and apply to **NILEM**, No. 59, 2nd Street, Parameswari Nagar, Adyar, Chennai - 20. ✆ : 4911443 E-mail : nilem@rediffmail.com

# பொன்னியின் செல்வன்

### எண்பத்து ஒன்பதாம் அத்தியாயம்

## வசந்தம் வந்தது

மதுராந்தக உத்தம சோழத் தேவரின் முடிசூட்டு விழா நடந்து ஒன்றரை மாதத்துக்கு மேலாயிற்று. பின்பனிக் காலம் வழக்கத்தை விட விரைவாக விடை பெற்றுக் கொண்டு சென்றது. தென்றல் என்னும் தெய்வ ரதத்தில் ஏறிக்கொண்டு வஸந்த காலம் வந்தது. பைங்கிளிகள் மாமரங்களின் குங்கும நிறத் தளிர்களுக்கு அருகில் தங்கள் பலவர்ண மூக்குகளை வைத்து ஒத்திட்டுப் பார்த்தன. அரச மரங்களின் தங்க நிறத் தளிர்கள் இளங் காற்றில் அசைந்தாடி இசை பாடின. புன்னை மரங்களிலிருந்து முத்துப் போன்ற மொட்டுக்களை உதிர்த்துக் கொண்டு குயில்கள் கோலாகலமாகக் கூவின. இயற்கைத் தேவி உடல் சிலிர்த்தாள். பூமா தேவி குதூகலத்தினால் பொங்கிப் பூரித்தாள். இலைகள் உதிர்ந்து மொட்டையாகத் தோன்றிய மரங்களில் திடீரென்று மொட்டுக்கள் அரும்பிப் பூத்து வெடித்தன. மாதவிப் பந்தல்களும் மல்லிகை முல்லைப் புதர்களும் பூங்கொத்துக்களின் பாரம் தாங்க முடியாமல் தவித்தன. நதிகளில் பிரவாகம் குறைந்து விட்டது. கரையோரமாகப் பளிங்கு போன்ற தெளிந்த நீர் சலசலவென்று ஓடிக்கொண்டிருந்தது.

சோழ நாட்டு மக்கள் அகமும்

அமரர் கல்கி

முகமும் மலர்ந்து விளங்கினார்கள். வயல்களில் விளைந்திருந்த செந்நெல்லை அறுவடை செய்து களஞ்சியங்களிலே கொண்டு போய்ச் சேர்த்தாகிவிட்டது. அரசியல் சம்பந்தமான நிச்சயமற்ற நிலைமை நீங்கிக் கவலை தீர்ந்துவிட்டது. நகரங்களிலும் நாட்டுப்புறங்களிலும் காமன் பண்டிகை கொண்டாடுவதற்கு மக்கள் ஆயத்தம் செய்துகொண்டிருந்தார்கள். ஆலயங்களில் வஸந்த உற்சவம் நடத்துவதற்கும் ஏற்பாடுகள் நடைபெற்றன. வீதிகள் சேருமிடங்களிலெல்லாம் நாடக மேடைகள் அமைக்கப்பட்டு வந்தன.

இந்த இனிய காட்சிகளையெல்லாம் பார்த்துக்கொண்டு வல்லவரையன் பழையாறை நகரை நோக்கிச் சென்று கொண்டிருந்தான். இந்தத் தடவை அவன் மறைந்தும் ஒளிந்தும் மாறு வேடம் பூண்டும் அந்த மாநகருக்குள் பிரவேசிக்கவில்லை. திறந்திருந்த பிரதான நகர் வாசல் வழியாகத் தங்கு தடையின்றிப் புகுந்து இளையபிராட்டி குந்தவை தேவியின் அரண்மனையை அடைந்தான்.

இளையபிராட்டி குந்தவை, வானதி முதலிய தன் தோழிகள் பலர் புடை சூழ அரண்மனை வாசலுக்கு வந்து அவனுக்கு முகமன் கூறி வரவேற்றாள்.

நெடுந் தூரம் பிரயாணம் செய்து வந்த களைப்புத் தீர்ந்த பிறகு தன்னை அரண்மனை உத்தியான வனத்தில் வந்து சந்தித்துப் பிரயாண விவரங்களைக் கூறும்படி சொல்லிவிட்டுச் சென்றாள்.

வந்தியத்தேவன் இளைப்பாறுவதற்கு அதிக நேரம் எடுத்துக் கொள்ளவில்லை. ஸ்நான பானங்களையும் அதி விரைவில் முடித்துக்கொண்டு உத்தியானவனத்துக்குச் சென்றான். அங்கே இளையபிராட்டி அவன் வரவை எதிர் பார்த்துக் காத்திருந்தாள். ஒருவரை யொருவர் சந்திப்பதில் யாருக்கு அதிக ஆர்வம் என்று சொல்ல முடியாமலிருந்தது. ஒருவரிடம் ஒருவர் பல செய்திகளைக் கேட்டு அறிவதில் இருவரும் ஆவல் கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்களுடைய பரபரப்புக்கு அது மட்டுந்தானா காரணம்? தங்கள் வருங்கால வாழ்க்கையைப் பற்றி நிச்சயித்துக் கொள்ள விரும்பியதும் காரணமாயிருக்கலாம் அல்லவா! அசேதனப் பொருள்களிடத்திலும் கிளர்ச்சியை உண்டாக்கிய இளவேனில் உணர்ச்சி நிறைந்த அவர்களுடைய உள்ளத்திலும் ஒரு பரபரப்பை உண்டாக்கியிருக்கலாம் அல்லவா?

"ஐயா! தாங்கள் சென்றிருந்த காரியத்தில் பூரண வெற்றி அடையவில்லையென்று அறிகிறேன். அது உண்மையா?" என்று கேட்டாள் இளைய பிராட்டி.

"உண்மைதான், தேவி! இது வரையில் நான் ஏற்றுக் கொண்ட எந்தக் காரியத்திலே தான் பூரண வெற்றி அடைந்திருக்கிறேன்?" என்று வல்லவரையன் கூறிப் பெருமூச்சு விட்டான்.

"அப்படிச் சொல்ல வேண்டாம்! என் தம்பியை ஈழ நாட்டிலிருந்து கொண்டு வந்து சேர்த்தீர்கள் அல்லவா? அச்சமயம் அருள்மொழி வர்மன் வந்ததினால்தானே இந்த வரைக்கும் சோழ நாடு தப்பிப் பிழைத்தது?" என்றாள் குந்தவை.

"அருள்மொழி வர்மருக்கு அநாவசியமான அபாயத்தை உண்டாக்கி அவரைக் கடும் குளிர் சுரத்துடன் குற்றுயிராகக் கொண்டு வந்து சேர்த்தேன். அதுவும் பூங்குழலி மகாராணியின் உதவியினால்தான். சேந்தன் அமுதனிடமும் பூங்குழலியிடமும் என் நண்பரை ஒப்புவித்து நாகைப்பட்டினத்துக்கு அழைத்துப் போகும்படி சொன்ன போது, அவர்கள் தஞ்சைபுரிக்கு வந்து இந்தச் சோழ சாம்ராஜ்யத்தில் சிங்காதனம் ஏறி மணி மகுடம் சூட்டிக் கொள்ளப் போகிறார்கள் என்று கனவிலும் நான் கருதவில்லை..."

"உத்தமச் சோழ சக்கரவர்த்தியின் உயிரைக் காப்பாற்றிக் கொடுத்தவர் தாங்கள்தான் என்பதை நான் மறந்து விடவில்லை. அவரும் மறந்துவிடவில்லை. பெரிய பழுவேட்டரையருக்

குப் பதிலாகத் தங்களைச் சோழ நாட்டின் தனாதிகாரியாக்கி விட வேண்டும் என்று உத்தமச் சோழர் விரும்பினார்...''

"நல்லவேளை தப்பிப் பிழைத்தேன்!"

''அது என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்? இச் சோழ சாம்ராஜ்யத்தின் தனாதிகாரி பதவி சாமான்யமானதா? முதன்மந்திரி பதவியைக் காட்டிலும் மாதண்ட நாயகர் பதவியைக் காட்டிலும் பெரியதாயிற்றே? தனாதிகாரியின் தயவு இல்லாமல் சக்கரவர்த்தி கூட எந்தக் காரியமும் செய்ய முடியாதே?''

"தேவி! பெரிய பழுவேட்டரையரின் பாதாளப் பொக்கிஷ நிலவறையில் ஒரு முறை நான் ஒளிந்திருக்க நேர்ந்தது. அப்போது அங்கே கும்பல் கும்பலாகக் கொட்டியிருந்த பொற்காசுகளின் ஒளியில் ஒரு சிலந்திப் பூச்சியின் வலையைப் பார்த்தேன். இறந்து போன மனிதனின் மண்டை எலும்பையும் பார்த்தேன். இனிமேல் அந்தப் பொக்கிஷ நிலவறைப் பக்கமே போகக் கூடாது என்று தீர்மானித்துக்கொண்டேன்...''



ளையபிராட்டி புன்னகை புரிந்துவிட்டு, "தாங்கள் தனாதிகாரியானாலும் பொக்கிஷ நிலவறைக்குப் போக வேண்டிய அவசியம் நேராது. அந்த நிலவறையில் இருந்த பொருள்களையெல்லாம் செலவு செய்து பெரியதொரு கடற்படை கட்ட அருள்மொழி தீர்மானித்து விட்டான். புதிய சக்கரவர்த்தியின் அனுமதியும் பெற்று விட்டான்!" என்றாள்.

"புதிய சக்கரவர்த்தியும் அவருடைய பட்ட மகிஷியும் அருள்மொழி வர்மருடன் கோடிக்கரைக்குச் சென்றிருப்பதாகத் தஞ்சையில் அறிந்தேன்.''

"ஆம், அவர்கள் போகும்போது தங்களையும் உடன் அழைத்துப் போக முடியவில்லையேயென்று மிக்க வருத்தப்பட்டுக் கொண்டு போனார்கள்.''

"நான் அதைப் பற்றி வருத்தப்படவில்லை. இப்போது கூடக் கோடிக்கரை போய் அவர்களுடன் சேர்ந்து கொள்வேன். அருள்மொழிவர்மர் நான் இல்லாத சமயம் பார்த்துக் கொடும்பாளூர் இளவரசியைக் கலியாணம் செய்து கொண்டது பற்றித்தான் வருந்துகிறேன்.

''ஏன், ஐயா! தங்கள் நண்பர் என் தோழியை மணந்துகொண்டது தங்களுக்குப் பிடிக்கவில்லையா?''

''தெய்வமே! அம்மாதிரி நான் சொல்லவில்லை. நான் அந்தத் திருமணத்துக்கு இல்லாமற் போனது பற்றித்தான் வருத்தப் படுகிறேன். வானதியை மணந்து கொள்ளக் கொடுத்து வைத்தது அருள்மொழிவர்மரின் பூர்வ ஜன்ம பாக்கியம். தங்கள் தோழி வானதியும் பாக்கியசாலிதான். ஆனால் எதற்காக அவ்வளவு அவசரப்பட்டார்கள்?''

''அவர்கள் அவசரப்படவில்லை. நான்தான் அவசரப்பட்டேன். என் தந்தையும் தாயும் காஞ்சிக்குப் புறப்பட்டுப் போக விரும்பினார்கள். அவர்கள் புறப்படுவதற்குள் திருமணம் நடந்து விட வேண்டுமென்று சொன்னேன். இதனால் கொடும்பாளூர் பெரிய வேளாரின் மனமும் நிம்மதி அடைந்தது. மகுடாபிஷேக தினத்தில் திடீரென்று தங்கள் நண்பர் உத்தமச் சோழரின் தலையில் சோழ நாட்டுக் கிரீடத்தை வைத்தது பெரிய வேளாருக்குப் பெரும் அதிர்ச்சியை உண்டு பண்ணியிருந்தது.''

''இன்னும் பலரும் அப்போது அதிர்ச்சி அடைந்திருப்பார்கள்.''

"எங்கள் எல்லாருக்குமே அது வியப்பாகத்தானிருந்தது. நண்பர்கள் இருவரும் அந்தச் செய்தியை மிக மிக இரகசியமாக வைத்திருந்தார்கள்.

''தேவி தங்களிடம் மட்டுமாவது சொல்லியிருப்பார் என்று நினைத்தேன்.''

''சில மாதங்களுக்கு முன்னதாக இருந்தால் சொல்லித்தான் இருப்பான். என்னிடம் கேளாமல் அருள்மொழி எந்தக் காரியமும் செய்தது கிடையாது.''

"இப்போது ஏன் மாறி விட்டார்?"

"சகவாச தோஷந்தான்! தங்களுடன் சேர்ந்த பிறகுதான் என் அருமைத் தம்பி இவ்வாறு மனம் மாறி விட்டான். உன்

ளும் புறமும் ஒன்றாக இருந்தவன் கபட நாடகத்திலும் தந்திர மந்திரத்திலும் தேர்ந்து விட்டான்!''

''தேவி! என் பேரில் வீண் பழி சுமத்த வேண்டாம். உத்தமச் சோழருக்கு முடி சூட்டிய கபட நாடகத்துக்குத் தங்கள் தம்பிதான் முழுதும் பொறுப்பாளி. இப்படி எல்லாரையும் ஏமாற்றலாமா என்று நான் விவாதித்துப் பார்த்தேன். இராமபிரான் அயோத்தி ஜனங்களை ஏமாற்றிவிட்டு இரவுக்கிரவே காட்டுக்குச் சென்றதை அருள்மொழி உதாரணமாக எடுத்துக்காட்டினார். தங்களிடமாவது சொல்ல வேண்டாமா என்று கேட்டேன். தம் வாழ்க்கையில் ஒருமுறையாவது தங்களிடம் யோசனை கேளாமல் ஒரு காரியத்தைச் செய்து தங்களிடம் பிற்பாடு 'சபாஷ்' வாங்கப் போவதாகச் சொன்னார். தேவி! இளவரசர் செய்தது தங்கள் மனத்திற்கு உகந்த காரியந்தானே?''

''இதைக் காட்டிலும் எனக்கு உகந்த காரியத்தை இனி யாரும் செய்ய முடியாது. என் தம்பிக்கு தாங்கள் இக்காரியத்தில் உதவி செய்வதற்கு மிக்க நன்றி!'' என்றாள் இளையபிராட்டி.

''தேவி! அருள்மொழி வர்மர் சிங்காதனம் ஏறி மணி மகுடம் சூடி உலகாளுவதைப் பார்க்கத் தாங்கள் ஆவல் கொண்டிருந்ததாக நினைத்தேன்.''

''முன்னம் அப்படி நான் ஆசை கொண்டிருந்தது உண்மைதான். என் தோழி வானதி அத்தகைய சபதம் செய்த பிறகு அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டேன். மேலும், தமையன் கொலை செய்யப்பட்டு மாண்ட உடனடியாகத் தம்பி சிங்காதனம் ஏறினால் உலகத்தில் என்ன நினைப்பார்கள்?''

''ஆம், தேவி! இலங்கை இராஜ வம்சத்தில் நடந்திருக்கும் பயங்கரமான செயல்கள் அருள்மொழி வர்மருக்கு இது விஷயத்தில் பெரிதும் கலக்கத்தை உண்டாக்கியிருந்தன. ஆனால் அதைப் பற்றிக் கூடஅவர் அவ்வளவாகக் கவலைப்படவில்லை. என் பேரில் அந்தக் கொடிய கொலைக் குற்றத்தைச் சிலர் சுமத்த முயன்ற போது, என்னைக் காப்பாற்றுவதற்காகவே சோழ சிங்காதனத்தில் ஏற அவர் உறுதி கொண்டிருந்தார். நல்ல வேளையாகப் பெரிய பழுவேட்டரையர் அந்தக் குற்றத்தைத் தம் பேரில் போட்டுக் கொண்டு என் மீது அந்த வீண் பழி விழாமல் காப்பாற்றினார்.''

''பாவம்! அந்தக் கிழவர் ஒருவர் இல்லாதபடியால் சோழ நாடே வெறிச் சோடிப் போனதாகத் தோன்றுகிறது.''

''தமையனைத் தொடர்ந்து தம்பியும் போய்விட்டதை நினைத்துப் பார்த்தால் மிக்க வருத்தமாயிருக்கிறது.''

''ஐயோ! சின்னப் பழுவேட்டரையரும் இறந்தே போய் விட்டாரா? நிச்சயந்தானா?'' என்று கேட்டாள் குந்தவை.



"நான் அவ ரிடம் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்ட போது அவருக்கு உயிர் இருந்தது. ஆனால் நூற்றைம்பது அடி உயரம் செங்குத்தான மலையிலிருந்து கீழே விழுந்து விட்டவர் எப்படிப் பிழைக்க முடியும்? இறந்து போயிருக்கத்தான் வேண்டும். சின்னப் பழு வேட்டரையரின் மரணத்துக்கு நானே ஒரு விதத்தில் காரணமாயிருந்தேன் என்று நினைக்கும்போது என் உள்ளம் துடிக்கிறது" என்

நான் வந்தியத்தேவன்.

"ஐயா! அதைப் பற்றியெல்லாம் எனக்கு விவரமாகச் சொல்லுங்கள். மகுடாபிஷேக தினத்தன்று சின்னப் பழுவேட்டரையரைச் சபா மண்டபத்திலிருந்து வெளியேற்றுவதற்குத் தாங்களும் என் தம்பியும் சூழ்ச்சி செய்தீர்கள் அல்லவா? அதில் இருந்து விவரமாகச் சொல்லுங்கள். அதைப் பற்றி என் தம்பியிடம் நான் விவரம் கேட்கவே முடியாமற் போயிற்று. தங்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாமென்றே இருந்தேன். 'பெண்களிடத்தில் இரகசியம் எதையும் சொல்லக் கூடாது' என்று எண்ணித்தான் முன்னாலேயே என்னிடம் சொல்லவில்லை. இப்பொழுதாவது சொல்லலாம் அல்லவா?"

"தேவி! அந்தக் காரணத்திற்காகத் தங்களிடம் சொல்லாமல் இல்லை. தங்களை ஒருமுறையாவது ஆச்சரியப் படச் செய்ய வேண்டுமென்று இளவரசர் விரும்பினார்."

"அப்படியொன்றும் நான் ஆச்சரியப்பட்டு விடவில்லை. நீங்கள் இருவரும் சேர்ந்து இவ்விதம் ஏதோ சூழ்ச்சி செய்து கொண்டிருக்கிறீர்கள் என்று ஊகித்தேன். ஏதாவது தவறு நேர்ந்து விடக் கூடாதே என்று சிறிய கவலைப் பட்டுக் கொண்டுமிருந்தேன்."

"உண்மையில், தவறு நேர்ந்துதான் விட்டது. மிக முக்கியமான காரியம் நிறைவேறி விட்டாலும் அதன் மூலம் நேர்ந்த வேறு விபரீதத்தைத் தடுக்க முடியாமல் போயிற்று. ஒருவேளை தங்களிடம் யோசனை கேட்டிருந்தால் இந்த மாதிரி நேர்ந்திராது!" என்றான் வந்தியத்தேவன்.

பின்னர், சேந்தன் அமுதனாகிய புதிய மதுராந்தகத் தேவருக்குப் பட்டம் கட்ட வேண்டுமென்று பொன்னியின் செல்வர் தீர்மானித்ததிலிருந்து அவர்கள் போட்ட திட்டங்கள், செய்த சூழ்ச்சிகள், நடத்திய காரியங்கள் எல்லாவற்றைப் பற்றியும் விவரமாகக் கூறினான்.

மதுராந்தகத் தேவருக்கு முடிசூட்டப் போவதாக முன்னாலேயே சொன்னால், அதற்குப் பல ஆட்சேபங்களும் இடையூறுகளும் ஏற்படும் என்று அருள்மொழி வர்மர் எண்ணினார். கொடும்பாளூர் வேளாரும் திருக்கோவலூர் மலையமானும் முன் போலவே அந்த யோசனையை எதிர்ப்பார்கள். பெரிய பழுவேட்டரையரோ மரணத் தறுவாயில் பொன்னியின் செல்வருக்கே முடிசூட்ட வேண்டும் என்று சொல்லி விட்டுப் போய்விட்டார். அவருடைய விருப்பத்தை நிறைவேற்றவே அவரைச் சேர்ந்தவர்கள் விரும்புவார்கள். சின்னப் பழுவேட்டரையர் தமது மருமகன் உண்மையான மதுராந்தகன் அல்லவென்று தெரிந்துகொண்டு விட்டார். படகோட்டியின் மகளான பூங்குழலியைச் சிங்காதனத்தில் அமர்த்துவதில் அவருக்கு உற்சாகம் இருக்க முடியாது. செம்பியன் மாதேவி, சேந்தன் அமுதனாகிய மதுராந்தகத் தேவன், பூங்குழலி எல்லாருமே ஆட்சேபணை செய்வார்கள். அவர்களுடைய ஆட்சேபணைகளைப் புறக்கணிக்கச் சுந்தர சோழரும் விரும்பாதவராயிருக்கலாம். இந்தக் காரணங்களையெல்லாம் மனத்தில் வைத்துக் கொண்டுதான் பொன்னியின் செல்வர் தாம் செய்யத் தீர்மானித்த காரியத்தைக் கடைசி நிமிஷம் வரையில் இரகசியமாக வைத்திருக்க விரும்பினார். மகுடாபிஷேக சமயத்தில் தம்மிடம் கொண்ட அன்பினாலோ அல்லது மதுராந்தகரிடம் கொண்ட பொறாமையினாலோ ஆட்சேபணை கிளப்பித் தடை செய்யக்கூடிய பரபரப்புக்காரர்கள் எல்லாரையும் ஒவ்வொருவராக வெவ்வேறு காரணங்களைச் சொல்லி வெளியூர்களுக்கு அனுப்பி வைத்தார். தமக்கு உதவி செய்ய ஒருவர் வேண்டுமே என்பதற்காக வந்தியத்தேவனிடம் மட்டும் அந்தரங்க நோக்கத்தைச் சொல்லியிருந்தார். இருவரும் கலந்து யோசித்தே திட்டங்கள் வகுத்துக் காரியங்களும் கவனமாகச் செய்து வந்தார்கள்.

கந்தமாறன், பார்த்திபேந்திரன், கொடும்பாளூர் வேளார் முதலியோர்களை ஊரை விட்டே அனுப்பியாகி விட்டது. ஆனால் சின்னப் பழுவேட்டரையரை ஊரை விட்டு அனுப்புவது சாத்தியம் இல்லை. அவர் கையினால் பொன்னியின் செல்வரின் சிரஸில் மணிமகுடத்தைச் சூட்டுவது என்ற பேச்சும் ஏற்பட்டு விட்டது. அந்தச் சமயத்தில் சேந்தன் அமுதனாகிய புதிய மதுராந்தகர் தலையில் முடி சூட்டச் சொன்னால் அவர் தடை சொல்லாமலிருப்பாரா? அவர் மறுதலித்தால் அது பெரிய அபசகுனமாகக் கருதப்படும்; அதிலிருந்து வேறு பல குழப்பங்களும் ஏற்படலாம். ஆகையால் முடிசூட்டுகிற சமயத்தில் அவரை மண்டபத்திலிருந்து வெளியேற்றுவதற்கு ஏதேனும் யுக்தி செய்ய வேண்டும் என்று நண்பர்கள் இருவரும் யோசித்தார்கள். முழுதும் திருப்திகரமான யுக்தி எதுவும் தோன்றவில்லை. இச்சமயத்தில் ஆழ்வார்க்கடியான் வந்து ஒரு விசித்திரமான செய்தியைக் கூறினான்.

பாண்டிய நாட்டு ஆபத்து உதவிகளான ரவிதாஸன் கூட்டத்தார் எங்கே போனார்கள். நந்தினி தேவி இன்னமும் அவர்களுடன் இருக்கிறாளா, திருப்புறம்பயம் காட்டில் நள்ளிரவில் முடிசூட்டப்பட்ட சிறுவன் எங்கே மறைத்து வைக்கப்பட்டிருக்கிறான் என்னும் செய்திகளை அறிந்து வருவதற்காக முதன்மந்திரியின் சம்மதத்துடன் ஆழ்வார்க்கடியானை அருள்மொழி வர்மர் அனுப்பியிருந்தார். பாதாளச் சிறையிலிருந்து தப்பிச் சென்ற கருத்திருமன் அவர்களுடன் சேர்ந்து கொண்டிருக்கிறானா, கந்தமாறன் வந்து சொன்னபடி பழைய மதுராந்தகன் இறந்தது உண்மையா, அல்லது அவனும் தப்பிப் பிழைத்துச் சதிக் கூட்டத்தாருடன் சேர்ந்திருக்கிறானா என்று தெரிந்து கொண்டு வருவதற்கும் திருமலை நம்பி சென்றிருந்தான். அவன் இச்செய்திகளை அறிந்து வருவதற்கு வெகு காலம் ஆகும் என்று எண்ணியிருந்தார்கள். ஆனால் ஆழ்வார்க்கடியான் சில தினங்களிலேயே திரும்பி வந்து விட்டான்.

ரவிதாஸன் கூட்டத்தைச் சேர்ந்தவனும் படகோட்டி முருகய்யன் மனைவியுமான ராக்கம்மாளைக் கொல்லி மலைக்கு அருகில் அவன் பார்த்தான். அவள் எங்கே போகிறாள் என்பதைக் கவனித்து அவளைத் தொடர்ந்து சென்றால் ரவிதாஸன் கூட்டம் இருக்குமிடத்தைச் சேரலாம் என்று ஆழ்வார்க்கடியான் எண்ணினான். ஆனால் ராக்கம்மாள் தஞ்சைபுரிக்குச் செல்லும் மார்க்கத்தில் சென்றது அவனுக்கு வியப்பு அளித்தது. ஆயினும், அவளைத் தொடர்வதே ஆபத்துதவிகளைப் பற்றி அறிவதற்கு உபாயம் என்று எண்ணி மாறுவேடம் பூண்டு அவள் அறியாதபடி பின் தொடர்ந்து சென்றான். உறையூருக்கு அருகில் வந்த பிறகு, தஞ்சையில் பொன்னியின் செல்வருக்கு நடக்கப் போகும் முடிசூட்டு விழாவைப் பார்ப்பதற்காக மக்கள் திரள் திரளாகச் சென்றுகொண்டிருந்தார்கள். அந்தக் கூட்டத்தில் ராக்கம்மாளும் கலந்துகொண்டாள். ஆயினும் ஆழ்வார்க்கடியான் அவளை விடாமல் பின் தொடர்ந்து தஞ்சை வரைக்கும் வந்தான். ராக்கம்மாள் கூட்டத்தோடு கூட்டமாகத் தஞ்சைக் கோட்டைக்குள்ளும் புகுந்து சின்னப் பழுவேட்டரையரின் அரண்மனையைச் சுற்றி அவள் வட்டமிட்டதைக் கண்டதும் அவனுக்கு மிக்க வியப்பு உண்டாயிற்று. உடனே அருள்மொழி வர்மரிடமும் வந்தியத் தேவனிடமும் போய் இச் செய்தியைத் தெரிவித்தான். ராக்கம்மாளைச் சிறைப்படுத்தி விடலாமா என்று முதலில் அவர்கள் யோசனை செய்தார்கள். அப்படிச் செய்ய வேண்டாம் என்றும், அவள் எதற்காக வந்திருக்கிறாள் என்பதைத் தெரிந்து கொள்வதே முக்கியமானதென்றும் தீர்மானித்தார்கள். சின்னப் பழுவேட்டரையரின் மகளுக்கு அவள் ஏதோ செய்தி கொண்டு வந்திருக்க



வேண்டும் என்று ஊகித்தார்கள். சின்னப் பழுவேட்டரையரிடம் இப்போது அதைச் சொல்ல வேண்டாம் என்றும், முடி சூட்டு விழாவின்போது அவரைச் சபா மண்டபத்திலிருந்து அப்புறப்படுத்துவதற்கு அதை உபயோகித்துக் கொள்ளலாம் என்றும் முடிவு செய்தார்கள்.

ஆழ்வார்க்கடியான் மறுபடியும் சின்னப் பழுவேட்டரையரின் அரண்மனைக்கு அருகில் சென்றபோது ராக்கம்மாளைக் காணவில்லை. முடிசூட்டு விழாவுக்காக வந்த ஜனக்கூட்டம் மேலும் மேலும் அதிகமாகிக் கொண்டிருந்தது. ஆழ்வார்க்கடியான் அந்தக் கூட்டத்தில் கலந்து நின்று அரண்மனை வாசலைக் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். இரண்டு பெண்கள் அரண்மனையிலிருந்து வெளியில் வந்தார்கள். அவர்களில் ஒருத்தி இடுப்பில் குழந்தையையும் வைத்துக் கொண்டிருந்தாள். வந்தவர்களில் ஒருத்தி ராக்கம்மாள் என்று உடனே தெரிந்துவிட்டது. இன்னொருத்தி தலையில் முக்காடிட்டு



முகத்தைப் பாதி மறைத்துக்கொண்டிருந்தாள். அவள் சின்னப் பழுவேட்டரையரின் மகளாயிருக்கலாம் என்று திருமலை நம்பி ஊகித்தான். அவர்களைத் தடுத்து நிறுத்துவதா, அல்லது எங்கே போகிறார்கள் என்று பார்ப்பதா என்பதை அவனால் நிச்சயிக்க முடியவில்லை. இதற்குள் அவர்கள் ஜனக்கூட்டத்தில் புகுந்து மறைந்து விட்டார்கள். கோட்டை வாசலை நோக்கித்தான் அவர்கள் போயிருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொண்டு ஆழ்வார்க்கடியான் அங்கே போனான். கோட்டை வாசலுக்கு அப்பால் சிறிது தூரத்தில் வைத்திருந்த பல்லக்கில் அவர்கள் ஏறுவதையும் குதிரை வீரர்கள் புடைசூழப் போவதையும் பார்த்து விட்டான். இனி சின்னப் பழுவேட்டரையரிடம் இந்தச் செய்தியைச் சொல்லாமல் தாமதிக்கக் கூடாது என்று சபா மண்டபத்துக்கு வந்தான்.

அந்தச் சமயம் பொன்னியின் செல்வர் தமிழ்ப் புலவரைப் பார்த்துப் பேசும் சமயமாயிருந்தது. சின்னப் பழுவேட்டரையரிடம் ஆழ்வார்க்கடியான் செய்தியைச் சொன்னதும் அவர் உடனே அவனுடன் கிளம்பினார். தமது அரண்மனைக்குச் சென்று மகளைத் தேடி

னார். மகள் இல்லை என்று அறிந்து திடுக்கிட்டார். ஆழ்வார்க்கடியான் கூறிய செய்தி உண்மையாகவே இருக்க வேண்டுமென்று தீர்மானித்தார். திரும்பி அவர் சபா மண்டபம் வருவதற்குள்ளே "மதுராந்தக உத்தமச் சோழ சக்கரவர்த்தி வாழ்க!" என்ற கோஷங்கள் கிளம்பின. சபா மண்டபத்தில் நடந்ததை அறிந்த பிறகு இனி அங்கே தமக்கு வேலை இல்லை என்பதை உணர்ந்துகொண்டார். சில அந்தரங்கமான ஆட்களைத் தம்முடன் அழைத்துக் கொண்டு ஓடிப் போன மகளைத் தேடிக் கொண்டு புறப்பட்டார். தம்முடைய புதல்வி சோழ குலத்தின் பரம்பரைப் பகைவர்களான பாண்டிய குலத்து ஆபத்துதவிகளுடன் சேர்வதா என்று எண்ணியபோது அவருடைய நெஞ்சம் கொதித்தது. அதைக் காட்டிலும் அத்தகைய மகளைத் தம் கையினாலேயே கொன்று விடுவது மேல் என்று எண்ணி விரைந்து சென்றார்.

அன்றிரவு உத்தமச் சோழ சக்கரவர்த்தியின் பட்டாபிஷேக ஊர்வல வைபவங்கள் கோலாகலமாக நடந்து முடிந்த பிறகு ஆழ்வார்க்கடியான் நம்பி அருள்மொழி வர்மரிடம் அன்று மத்தியானம் நடந்த விவரங்களைக் கூறினான். அருள்மொழி வர்மன் வந்தியத்தேவனோடு கலந்து யோசித்தார். ரவிதாஸன் கூட்டத்தார் தந்திர மந்திரங்களிலே எவ்வளவோ கைதேர்ந்தவர்கள் என்பது அவர்கள் மூவருக்கும் தெரிந்திருந்தது. முன் கோபக்காரரான சின்னப் பழுவேட்டரையரால் அவர்களுடைய தந்திரத்தை வெல்ல முடியாதென்றும், அவர்களிடம் சிக்கிக் கொண்டு ஆபத்துக்குள்ளாவார் என்றும் எண்ணினார்கள். தமது அருமை மகளையே கொல்லுவது போன்ற விபரீதமான காரியத்தைச் செய்யக் கூடியவர் என்றும் நினைத்தார்கள். ஆகையால், சின்னப் பழுவேட்டரையரைக் காப்பாற்றி அழைத்து வருவதற்கும், பாண்டிய நாட்டு ரவிதாஸன் கூட்டத்தார் எங்கே இருக்கிறார்கள், என்ன திட்டமிட்டிருக்கிறார்கள் என்பதை அறிந்து வருவதற்கும் வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் புறப்பட்டுப் போவது நலம் என்ற முடிவுக்கு வந்தார்கள்.


இவ்வாறு சின்னப் பழுவேட்டரையர் தமது மகளையும் அவளைத் தம்மை அறியாமல் அழைத்துச் சென்ற சதிகாரர்களையும் பின் தொடர்ந்து போக, அவர் சென்ற வழியை ஆங்காங்கு விசாரித்துக் கொண்டு வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் சென்றார்கள். சின்னப் பழுவேட்டரையர் குறுக்கும் நெடுக்குமாக அங்குமிங்கும் அலைந்துவிட்டுச் சென்றிருக்க வேண்டும் என்று பின்னால் சென்ற இருவரும் கண்டார்கள். இதிலிருந்து அவருடைய மகளைக் கொண்டு போனவர்கள் வேண்டுமென்று அவரை ஏமாற்றி வேறு வழியில் போகச் செய்ய முயன்றிருக்க வேண்டும் என்று முடிவு கட்டினார்கள். காவேரிக் கரையோரமாக மேற்கு நோக்கி நெடுந்தூரம் பிரயாணம் செய்த பிறகு, அமராவதி நதி காவேரியுடன் கலக்குமிடத்தில் திசை மாறி, அந்தக் கிளை நதிக்கரை வழியாகத் தென் மேற்குத் திசையில் பிரயாணம் செய்தார்கள். சேர நாட்டுக்கும் கொங்கு நாட்டுக்கும் எல்லையாக அமைந்திருந்த ஆனைமலைப் பிரதேசத்தை அடைந்தார்கள். ஆனைமலையின் அடிவாரத்தை அடைந்த பிறகு பிரயாணம் மிகக் கடினமாகி விட்டது. அந்த வனப் பிரதேசத்தில் மரங்கள் மிக அடர்த்தியாகவும் செழிப்பாகவும் வளர்ந்திருந்தன. வனவிலங்குகளின் பயங்கர உறுமல் நாலா திசைகளிலும் கேட்டது. குதிரைகளைச் செலுத்திக் கொண்டு போவது மிகவும் சிரமமாக இருந்தது. குதிரைகளை விட்டு விட்டுக் கால் நடையாகப் போனால் காட்டு மிருகங்களுக்கு அவை இரையாகிவிடலாம் என்ற பயமும் இருந்தது.

கடைசியில் நண்பர்கள் இருவரும் மேலே குதிரையைச் செலுத்திப் போக

இயலாத மிக அடர்ந்த காட்டுப் பிரதேசத்தை அடைந்தார்கள். சமீபத்தில் எங்கேயோ வேறு ஒரு குதிரை கனைக்கும் சத்தம் கேட்டது. அந்த இடத்தைத் தேடிப்பிடித்து அடைந்த போது சின்னப் பழுவேட்டரையர் ஏறி வந்த குதிரை அங்கிருப்பதையும், அதைக் காவல் புரிய ஆள் ஒருவன் இருப்பதையும் கண்டார்கள். சின்னப் பழுவேட்டரையரும் அவருடன் வந்த மற்ற மூவரும் அங்கிருந்து கால்நடையாகச் சென்றிருப்பதாக அந்த ஆள் தெரிவித்தான். தங்கள் குதிரைகளையும் அந்த ஆளைப் பார்த்துக் கொள்ளும்படி சொல்லி விட்டு நண்பர்கள் மேலே போனார்கள். சூரிய வெளிச்சமே உள் நுழையாத கனாந்தகாரம் நிறைந்த காடுகளின் வழியாக அவர்கள் வெகுதூரம் சென்றார்கள். பின்னர், மர மடர்ந்த மலைப் பாதைகளில் ஏறிப் போனார்கள். பத்து அடி தூரத்துக்கு அப்பால் என்ன இருக்கிறது என்று தெரிந்து கொள்ள முடியாத பாதை களில் அவர்கள் போக வேண்டியிருந்தது.

கடைசியில், சற்று வெளிச்சம் தெரிந்த ஓர் இடத்தை அடைந்தார்கள். அங்கே மலை மீதிருந்து அருவி ஒன்று செங்குத்தாக விழுந்து கொண்டிருந்த படியால் இந்த இடைவெளி ஏற்பட்டிருந்தது. அதற்கு அப்பால் தொடர்ந்து பிரயாணம் செய்வது இயலாத காரியமாகத் தோன்றியது. ஏனெனில் மலைச் சுவர் அங்கே அவ்வளவு செங்குத்தாக மேலெழுந்தது. எவ்வளவு தேடிப் பார்த்தும் மேலே ஏறப் பாதை எதுவும் தென்படவில்லை. அருவியில் குளித்துச் சிறிது இளைப்பாறி விட்டுத் திரும்பிப் போக வேண்டியதுதான் என்று நண்பர்கள் தீர்மானித்தார்கள். சின்னப் பழுவேட்டரையரும் அவருடன் வந்த ஆட்களும் வனவிலங்குகளுக்கு இரையாகியிருக்க வேண்டுமென்று எண்ணினார்கள்.



ந்தச் சமயத்தில் அவர்கள் எதிர்பாராத அதிசயமான காட்சி ஒன்றைக் கண்டார்கள். மலைமேலே அருவியின் நெடு வீழ்ச்சி எங்கிருந்து ஆரம்பமாயிற்றோ, அங்கே இரண்டு மனித உருவங்கள் தெரிந்தன. போரிட்டுக் கொண்டே அவர்கள் அருவி விழும் இடத்தை நெருங்கி வந்து கொண்டிருந்தார்கள். அவர்களை உற்றுப் பார்த்ததில், இருவரும் தங்களுக்கு ஏற்கெனவே அறிமுகமானவர்கள்தான் என்று தெரிந்தது. ஒருவர் சின்னப் பழுவேட்டரையர்; இன்னொருவர் அவருடைய மகளை மணந்தவரான பழைய மதுராந்தகர். ஆகா! சண்டை என்ற வார்த்தையைக் கேட்டாலே முகத்தைச் சுளுக்கிக் கொண்டிருந்த மதுராந்தகர் இதற்குள் இவ்வளவு லாகவமாக வாளைக் கையாளக் கற்று கொண்டு விட்டது என்ன விந்தை? காலாந்தக கண்டருடன் சரிசமானமாகக் கத்திச் சண்டை இடுகிறாரே? ஐயோ! காலாந்தக கண்டர் பின்வாங்குகிறாரே? உண்மையிலேயே களைப்புற்றுப் பின் வாங்கி வருகிறாரா? அல்லது எப்படியும் தமது மருமகப் பிள்ளையாயிற்றே என்று தயங்கிப் பின் வாங்கி வருகிறாரா? எப்படியிருந்தாலும் அபாயகரமான அருவி விழும் முனையை நெருங்கி வருகிறாரே! ஐயோ! அங்கே செங்குத்தான அருவிப் பள்ளம் என்பது அவருக்குத் தெரியாது போலிருக்கிறதே!

வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் பெருங் கூச்சல் போட்டு அவருக்கு எச்சரிக்கை செய்ய முயன்றார்கள். அவர்களுடைய முயற்சி பயன்படவில்லை! அருவி விழும்போது எழுந்த 'சோ' என்ற சத்தம் நூறு சிங்கங்களின் கர்ஜனையையும் இருநூறு யானைகளின் பிளிறல்களையும் விழுங்கிவிடக் கூடியது. இந்த இரண்டு மனிதர்களுடைய குரல் அந்தச் சத்தத்தை அடக்கிக் கொண்டு மேலே எழக் கூடுமா, என்ன?

ஆகவே, அவர்கள் கண் முன்னாலேயே அந்தக் கோர சம்பவம் நிகழ, அவர்கள் அதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க வேண்டியதாயிற்று. எதிரியாகிய மருமகனைப் பார்த்துப் போரிட்டுக் கொண்டு சிறிது சிறிதாகப்



பின் வாங்கி வந்த சின்னப் பழுவேட்டரையர் அருவி முனைக்கு வந்து கால்கள் நழுவிச் செங்குத்தான அருவிப் பள்ளத்தில் விழுந்து விட்டார்! அவருடனே போரிட்டுக் கொண்டு வந்த பழைய மதுராந்தகன் பாறை முனையில் வந்து எட்டிப் பார்த்துவிட்டு மறுநிமிடம் மறைந்து விட்டான்.

சின்னப் பழுவேட்டரையர் கால் நழுவிய இடத்திலிருந்து கீழேயிருந்த பள்ளம் சுமார் முக்கால் தென்னை மரம் உயரம் இருக்கும். இவ்வளவு உயரத்திலிருந்து விழுந்தவர் உயிர் பிழைப்பார் என்று எதிர்பார்க்க முடியாது. ஆயினும் அந்த மகாவீரருடைய உடலையாவது பார்க்கலாம் என்று எண்ணி நண்பர்கள் இருவரும் அருவிப் பள்ளத்தின் அருகில் ஓடினார்கள். சின்னப் பழுவேட்டரையரின் உடலைக் காணவில்லை. அருவி விழுந்து விழுந்து அங்கே பெரும் பள்ளமாகித் தண்ணீர் ததும்பிச் சுற்றிலும் இருந்த பாறைகளில் மோதிக் கொண்டிருந்தது. சின்னப் பழுவேட்டரையருடைய உடல் அந்த ஆழமான அருவிக் குளத்தில் முழுகியிருக்க வேண்டும் என்று ஊகித்தார்கள். ஒரு விதத்தில் இது நல்லதுதான். கரையில் பாறைகளின் மீது விழுந்திருந்தால்

அந்த மகா வீரரின் உடல் சின்னா பின்னமாகப் போயிருக்கும். ஆழமான குளத்திலே விழுந்தபடியால் அந்தக் கதியிலிருந்து தப்பிவிட்டார். விரைவில் அவருடைய உடலை அருவி நீர்ச்சுழல் வெளியிலே கொண்டு வந்து தள்ளும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. கொஞ்ச நேரத்துக்கெல்லாம் சின்னப் பழுவேட்டரையர் வெளியில் வந்தார். நண்பர்கள் இருவரும் விரைந்து குளத்தில் குதித்து அவரைக் கரையில் கொண்டு வந்து சேர்த்



தார்கள். முதலில், உயிரற்ற உடல் என்று தான் எண்ணினார்கள். ஆயினும் ஒரு வேளை உயிர் இருக்கக் கூடாதா என்ற இலேசான நம்பிக்கையும் அவர்கள் உள்ளத்தில் இருந்தது. ஆகையால் தண்ணீரில் முழுகியவரை உயிர்ப்பிப்பதற்கு வேண்டிய சிகிச்சைகளைச் செய்தார்கள். வெகு நேரத்துக்குப் பின்னர் சின்னப் பழுவேட்டரையர் மூச்சு விட்டுக் கண் விழித்துப் பார்த்தார். அவரால் அதிகம் பேச முடியவில்லை. ஆயினும் சொல்ல வேண்டியதைச் சில வார்த்தைகளில் சொல்லி விட்டார்.

மிகப் பிரயாசையின் பேரில் காலாந்தக கண்டர் அந்த மலை உச்சியை அடைந்தார். அங்கே ஏறக்குறைய நூறு பேருக்கு நடுவில் அவருடைய மகள் இருந்தாள். ரவிதாஸன் காலாந்தக கண்டரைத் தங்களுடன் சேர்ந்து கொள்ளும்படி அழைத்தான். அவருடைய மருமகனே பாண்டிய நாட்டுக்கு உரியவன் என்றும், அவனுக்குப் பட்டம் கட்டப் போவதாகவும், சேர மன்னனும் இலங்கை அரசன் மகிந்தனும் புதிய பாண்டியனுக்கு உதவி செய்ய முன்வந்திருப்பதாகவும் கூறினான். அவர்கள் உத்தேசங்களை அறிவதற்காக முதலில் சின்னப் பழுவேட்டரையர் ரவிதாஸன் கூறியதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தார். பின்னர், அவர்கள் மீது சதிகாரர்கள் என்று குற்றம் சுமத்தித் தம் குமாரியைத் தம்முடன் அனுப்பிவிடும்படி கேட்டார். "உம்முடைய மகள், உம்முடன் வந்தால் அழைத்துப் போகலாம்!" என்றான் ரவிதாஸன். சின்னப் பழுவேட்டரையர் மகளுடைய முகத்தைப் பார்த்தார். அவள் தன் கணவனுடைய கதி தனக்கும் ஆகட்டும் என்று கூறி அவருடன் வர மறுத்து விட்டாள். "உன்னை இவர்களுடன் விட்டுப் போவதைக் காட்டிலும் என் கையினாலேயே கொன்று விடுகிறேன்!" என்று கூறிக் காலாந்தக கண்டர் வாளை ஓங்கினார். அதுகாறும் மறைவாக இருந்த மதுராந்தகன் அச்சமயம் திடீரென்று தோன்றி "என் மனைவியைக் கொல்லுவதற்கு நீ யார்?" என்று கூறி வாட்போர் தொடங்கினான். இதனால் காலாந்தக கண்டருக்குச் சிறிது திகைப்பு உண்டாயிற்று. தம் மருமகனைத் தம் கையினாலேயே கொன்று தம் குமாரியைக் கைம்பெண் ஆக்குவது நியாயமா என்ற ஐயம் அவர் மனத்தில் உதித்து விட்டது. அவர் மனத்தில் ஏற்பட்ட குழப்பத்தினால் தீவிரமாகப் போர் செய்ய முடியவில்லை. யோசித்துக் கொண்டே பின் வாங்கினார். பின்னால் அருவிப் பள்ளம் இருப்பது தெரியாமல் அதில் விழுந்து விட்டார்.

இதையெல்லாம் தட்டுத் தடுமாறிச் சொல்லி முடித்துவிட்டு, "நான் இனி உயிர் பிழைக்கப் போவதில்லை. என் முடிவு நெருங்கிவிட்டது. என்னை இங்கேயே விட்டுவிட்டு நீங்கள் விரைந்து செல்லுங்கள். சேர நாட்டின் மீதும் ஈழ நாட்டின் மீதும் உடனே சோழ சைன்யம் படை எடுத்துச் செல்லட்டும். பொன்னியின் செல்வரை மதுரைக்கு அழைத்துச் சென்று 'சோழ பாண்டியன்' என்ற அபிஷேகப் பெயரைச் சூட்டிப் பட்டம் கட்டச் செய்யுங்கள். இந்த மூன்று காரியங்களையும் உடனே செய்யாவிட்டால், சோழ சாம்ராஜ்யத்துக்குப் பேரபாயம் உண்டாவது நிச்சயம். மறுபடியும் பழையபடி பாண்டிய ராஜ்யம் தனியாகப் பிரிந்து போய்விடும்! உடனே விரைந்து செல்லுங்கள்!" என்று காலாந்தக கண்டர் கூறினார். அவரை இந்த நிலையில் அநாதையாக விட்டு விட்டுப் போக நண்பர்களுக்கு மனம் வரவில்லை. ஆகையால் இருவரில் ஒருவர் அவரைப் பார்த்துக் கொள்வது என்றும், இன்னொருவர் தஞ்சைக்குப் போவது என்றும் தீர்மானித்தார்கள். இருவரில் வேகமாகக் குதிரை விடக் கூடியவன் வந்தியத்தேவன், ஆதலால் அவனே புறப்பட வேண்டியதாயிற்று.

(தொடரும்)




# கலியுக நாரதர்!

✉ தமிழுக்காகப் போராடுபவர்களின் வரிசையில் அறிவுமதியையும் இனி சேர்த்துக் கொள்ளலாம். பிறமொழி கலப்பில்லாமல் பாடல்கள் எழுதி வரும் இவரின் இலட்சியம் உன்னதமானது. "தமிழ்த் திரைப்பட உலகம் ஆங்கிலம் கலந்து தலைப்பு வைக்க மாட்டோம். பாடல் கேட்க மாட்டோம் என்று தீவிரமான முடிவெடுத்தால் நிச்சயம் நல்ல தமிழ் கிடைக்கும்" என்று அறிவுமதி ஆசைப்படுவது நியாயமானதுதான். ஆனால், நடக்கக் கூடிய விஷயமா இது?
மொரட்டுப்பாளையம், க.நா. இராஜேஸ்வரன்

✉ விவரிக்க இயலாத உணர்ச்சிகளின் அலைகழிப்பில் நான் மூச்சுத் திணறிப் போனேன்– கடைசிப் பக்கத்தைப் படித்தபோது. (திருப்பதிசாமி மரணம்)
தோட்டப்பாளையம், கே.வெங்கடேசன்

✉ என்ன இருந்தாலும் இது ரொம்ப அநியாயமுங்க... அமெரிக்கா, ஐரோப்பா, மலேஷியா, சிங்கப்பூர் என்ற மூன்று பயணப் பரிசுகளும் சென்னைவாசிகளுக்கே கிடைத்து இருப்பதைத்தான் சொல்கிறேன்.
சேலம், இரா. கணேசன்.

✉ ஆண்டு மலரில், ஒலிக்கும் உளிச்சப்தமும் மயக்கும் சலங்கை சப்தமுமா? ஆஹா... ஆயனச் சிற்பியையும், சிவகாமியையும் வரவேற்கத் தயாராகி விட்டோம்!"
திருவானைக்காவல், எஸ். கௌரிலக்ஷ்மி

✉ இந்த வாரத் தலையங்கம் அருமை. கல்வியில் அதுவும் மருத்துவக் கல்வியில் "சாதியின் பெயரால் சலுகை" என்பது மருத்துவத்துறையின் தரத்தைப் பாதிப்பதோடு, துஷ்பிரயோகம் செய்யப்படும் வாய்ப்பே அதிகம். எந்த எளிய பிரிவினருக்காக இவர்கள் மதிப்பெண் விலக்குக் கோருகிறார்களோ, அந்த எளிய பிரிவினர் இதனால் பயனடையவும் மாட்டார்கள். எனவே "சாதி அடிப்படையிலான‌ச் சலுகைகள்" என்ற கெட்டவார்த்தை, அரசியல் சாசனத்திலிருந்து நீக்கப்படுவது நாட்டு முன்னேற்றத்திற்கு நல்லது.
பாளையங்கோட்டை,
தி.சு. பாலசுப்ரமணியன்

✉ பத்மவாசனின் கவித்துவமான, கம்பீரமான அட்டைப் படம் இதயத்தை வசீகரித்துவிட்டது.
விசலூர் – 1, ஜி.ஜி. கிருஷ்ணன்

✉ கலியுக நாரதரே! நீர்பாட்டுக்குக் கட்டம் கட்டி காலில் விழாத எம்.எல்.ஏ. என்று செய்தி போட்டுவிட்டீர்; பாவம் அவரது சட்டமன்ற உறுப்பினர் பதவி பறிபோய்விடப் போகிறது!
நெய்வேலி, சு. ஸ்ரீகாந்த்

✉ மக்கள் நலப் பணியாளர்களுக்காக, முதல்வர் ஜெயலலிதா, சம்பள உயர்வோ, சலுகையோ, தந்திருக்க வேண்டாம், இப்படி வேலையைப் பறித்து அவர்களை நடுத்தெருவில் நிறுத்தியிருப்பதுதான் மனத்தை உறுத்துகிறது!
கும்பகோணம்,
எஸ்.கே. மூர்த்தி

✉ "பூமிக்கு அப்பாலும் புத்திசாலிகள்" என்ற கட்டுரையில் ஓர் ஒளி ஆண்டு தொலைவு, 9,40,800கி.மீ. என்று கூறப்பட்டுள்ளது. இது 9.40,800 கோடி கி.மீ. என்று வந்திருக்க வேண்டும்.
சென்னை–61,
ஏ.என். கோமளவல்லி



வட்டமேஜை

# கவிதைதான் எனக்குப் பிடிச்ச...!

சினிமாவுக்குப் பாட்டெழுதப் புறப்பட்டிருக்கிற ஒரு டஜன் புதிய கவிஞர்களுள் பா.விஜய் காட்டில்தான் இப்போது கனமழை!

"நான் கனவுகள் விற்று வாழ்க்கை வாங்க வந்தவனில்லை. கவிதை செய்து மகிழ்ச்சி வாங்க வந்தவன். அதனால்தானோ என்னவோ என் வரிகளுக்கு மாலை போட்டு வாய்ப்புத் தருகிறார்கள்" என்கிறார் ஆறு கவிதைத் தொகுப்புகளை வெளியிட்டிருக்கும் இந்தக் கவிஞர்.

மனத்தை வறுத்து, மௌனத்தில் புலம்பி, தானாய்ச் சிரித்து தவியாய்த் தவிக்கும் காதல்தான் பெரும்பாலான கவிஞர்களுக்கு ஆத்திச்சூடி. விஜய்க்கு...?

"என் ஆரம்பம் காதலில் இருந்திருக்கிறது. ஆனால் காதலிலேயே இருக்கவில்லை. நான் வாழ்ந்த கோவையில் 'இலக்கிய பாசறை' என்ற அமைப்பு இருக்கிறது. என் இலக்கியத்துக்கான அடித்தளம் இதுதான். 'வானம்பாடிகள்' வளர்ந்த பூமி கோவை. நிறைய கவியரங்கங்கள், புத்தகங்கள் என்னைக் கவிதையின் பால் ஈர்க்க, கவியரங்க கவிஞனானேன். சமூகம் சார்ந்த பிரச்னைகளை மட்டுமே அப்போது என் பேனாவுக்கு எழுதத் தெரிந்திருந்தது. தொடர்ந்தேன். என்னையும் என் கவிதையையும் நான் நம்பியபோது சினிமாவுக்கு வந்தேன். தொடக்கத்தில் சின்ன போராட்டம். பிறகு என்னை அரவணைத்துக் கொண்டது திரையுலகம்."

அறிவியல், விஞ்ஞான விஷயங்களைக் கவிதையில் சேர்த்து எழுதுவதில் விஜய்க்குக் கொள்ளைப் ப்ரியம்.

"நூறு கிராம்தான் என் இதயம். அதில்
நூறு டன்னாய் உன் நினைவு."
"நிலவு இல்லாத புதன்கிரகம் நானே
முழுநிலவாக என்னிடம் சேர்ந்தாய்."

- போன்ற வரிகள் இதற்குச் சாம்பிள்.

"அறிவியலைச் சினிமா பாடல்களில் கொண்டு வந்திருக்கிறார்கள். இருந்தாலும் இன்னும் அதிகமாக வரவேண்டுமென்று நினைக்கிறேன். இதற்காக என் பாடல்களில் எந்தெந்த இடங்களில் அறிவியலைச் சேர்க்க முடியுமோ அங்கெல்லாம் சேர்க்க முயற்சி செய்கிறேன். அதே நேரத்தில் கொஞ்சம் நையாண்டியையும் சேர்த்து எழுதவும் முயற்சி செய்கிறேன். உதாரணமாக 'மிஸ்டர் நாரதர்' என்ற படத்தில் ஒரு பாடலில், "பாகிஸ்தான் எல்லைகள் உன் கண்களா? அறிவிப்பில்லாமல் சுடுகிறதே" என்று எழுதியிருக்கிறேன்!"

ஆங்கில கலப்புப் பாடல்களுக்கு இவர் மட்டும் விதி விலக்காயென்ன? 'உன் கண்ணு ரெண்டும் என்னை மயக்கும் தௌசண்ட் வாட்ஸ் பவரு' என்று எழுதியவர் தானே?

"எனது பெரும்பாலான பாடல்களில் ஆங்கில வார்த்தைகள் இருக்காது. சில பாடல்களில் மக்கள் அதிகமாகப் பயன்படுத்தும் ஆங்கில பதம் மெட்டுக்குள் சரியாய் அடங்கி விடுவதால் விட்டு விடுகிறேன். அதே நேரத்தில் கிளியோபாட்ரா, ஹிட்லர் போன்ற ஆங்கிலப் பெயர்களைப் பயன்படுத்துவதில் தவறில்லையே..."

இவரது 'நிழலில் கிடைத்த நிம்மதி' என்ற மரபுக் கவிதை நூலுக்கு கலைஞர் அணிந்துரை அளித்திருக்கிறார். மரபுக் கவிதைக்காக தமிழ் இலக்கணத்தைக் கரைத்துக் குடித்தாராம் இவர்.

"நமக்குத் தொழில் கவிதை என்று வந்துவிட்ட பிறகு இலக்கணம்



தெரியாமல் எப்படி? என் தாய் ஆசிரியராக இருந்தாலும், ஒரு தமிழாசிரியரிடம் சென்று இலக்கணம் படித்தேன்.

''எனது எல்லாப் பாடல்களும் இலக்கியத் தரத்தோடு இருக்க வேண்டுமென்று நினைக்கிறேன். அதற்காகவே போராடுகிறேன். வார்த்தைக்குள் விழுந்து, வார்த்தைகளில் புரளுகிறேன். அதற்கு இலக்கணம் கை கொடுக்கிறது. மொழி உயிர் கொடுக்கிறது.''

'காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு' என்றாலும் இவர் வரிகளில் இவரையே முணுமுணுக்க வைப்பவை அதிகம்.

'வானத்தை போல' படத்தில்,

'ஓவியம் போல் உன்னை வரைந்திடவே,
உதிரம் கொண்டு நிறமெடுப்பேன்
கவிதை போல் உன்னை எழுதிடவே
உயிருக்குள்ளிருந்து சொல்லெடுப்பேன்'

'கறுப்புதான் எனக்குப் பிடிச்ச கலரு' பாடலில்,

"பூக்கடையில் தேடினேன்.
பூக்களிலில்லை கறுப்புதான்
அன்று முதல் எனக்குத்தான்
பூக்கள் மீது வெறுப்புத்தான்"

- போன்றவரிகள் நான் எழுதியதில் எனக்குப் பிடித்தவை."

வெறும் பாடலோடு நின்று விடவில்லை இந்தக் கவிஞரின் ஆசை.

"என் இலக்கு கவிதைதான். ஒரு தேடலோடு வந்தவன் சினிமா பாடலாசிரியனாகி இருக்கிறேன். என் மனத்துக்குள் புதைந்து கிடக்கும் ஆசைகள் ஏராளம். அதில் ஒன்று உலக இலக்கியம் ஒன்றைப் படைக்க வேண்டுமென்பது. 'லைலா-மஜ்னு', 'ரோமியோ - ஜூலியட்' என்று உலகம் முழுவதும் பேசப்படுகிற இலக்கியம் மாதிரி அது இருக்கும். அதற்கான முயற்சிகளில் இறங்கிவிட்டேன். தாகமெடுத்து அலைபவன் மாதிரி அலையத் தொடங்கிவிட்டேன். என் இடத்திலிருந்து இப்போது பார்க்கும்போது அது நீ...ண்ட தூரம்தான் என்றாலும், தூரங்கள் கடப்பதற்குத்தானே..."

ஒரு பெரிய ஃபிரேமில் தோற்றம் மறைவு தேதியிட்டு 'திரு. ரேம்போ அவர்கள்' என்று எழுதப்பட்டருக்கிற ஃபோட்டோவை விஜயின் வீட்டில் பார்த்து ஒரு நிமிடம் அதிர்ந்தோம். படத்தில் நாக்கைத் தொங்கவிட்ட நிலையில் ஒரு நாய்!

"அது நாயல்ல, என் தோழன். கோவையில் இருக்கும்போது உடல் நலம் சரியில்லாமல்போக, சிகிச்சைக்காக டாக்ஸியில் அதை இங்கு கொண்டு வந்தேன். சிகிச்சை அளித்தும் இறந்துவிட்டது. என் சகோதரனைப் பிரிந்த துக்கத்தை அனுபவித்தேன். காரிலேயே அதைக் கோவை கொண்டு சென்று அடக்கம் செய்தோம்..."

சோகக் கவிதை!

— செ. ஏக்நாத்

படங்கள்: ஜரிஸ்






# கலைஞர் தந்த தலைப்பு!

*உலகப் புகழ் பெற்ற நமது நாட்டு நியூரோ சர்ஜன் பேராசிரியர் டாக்டர் பி. ராமமூர்த்தி, தமது சுயசரிதையை 'அப்ஹில் ஆல் த வே' என்ற தலைப்பில் ஆங்கிலத்தில் புத்தகமாக எழுதியிருக்கிறார். அந்நூலை, சென்ற ஆண்டு கலைஞர் வெளியிட்டார். அந்த நூல் 'தடைகள் பல தாண்டி....' என்று தமிழில் இப்போது வெளியாகியிருக்கிறது. தமிழாக்கம் செய்திருக்கும் ராணிமைந்தன் தமது மொழி பெயர்ப்பு அனுபவங்களை இங்கே பகிர்ந்து கொள்கிறார்.*

சென்ற ஆண்டு பிப்ரவரியில் நான் எழுதிய 'என் காவல் கவடுகள்' என்ற மொழி பெயர்ப்பு நூல் வெளியானது. அதைப் படித்துவிட்டு என்னைப் பாராட்டினார் சிவசங்கரி. பின்னர் ஒருநாள் எனக்குப் ஃபோன் செய்து "டாக்டர் பி. ராமமூர்த்தி தம்முடைய சுயசரிதையைத் தமிழில் மொழி பெயர்க்கத் தகுதியான ஒருவரைத் தேடிக் கொண்டிருக்கிறார். உங்கள் பெயரை நான் சொல்லலாம் என்றிருக்கிறேன்" என்றார்.

"அப்படி ஒரு வாய்ப்பு கிடைத்தால் அதைவிட என்ன வேண்டும்?" என்றேன். டாக்டர் பி.ஆர். என்னை அழைத்தார்.

"இதோ இதுதான் என் புத்தகம். இதில் முதல் அத்தியாயத்தை மட்டும் மொழி பெயர்த்து என்னிடம் காட்ட முடியுமா?" என்றார்.

ஒரு வாரத்தில் கொண்டு போய்க் காட்டினேன். முதல் இருபது வரிகள்தான் படித்திருப்பார். எழுந்து என் கையைப் பிடித்துக் குலுக்கினார். "இத்தகைய இயல்பான மொழி பெயர்ப்பைத்தான் நான் எதிர்பார்த்தேன். கோ அஹெட்" என்றார். "341 பக்கங்கள் மொழி பெயர்க்க வேண்டும். எனக்கு அவகாசம் தர வேண்டும். எட்டு மாதங்களாவது தேவை" என்றேன். "சரி... எடுத்துக் கொள்ளுங்கள்..." என்றார்.

மொழி பெயர்ப்பைத் தொடங்கியதும் நான் அந்தப் பேராசிரியரின் அனுபவங்களுக்குள்ளேயே ஐக்கியமாகிப் போனேன். எழுத எழுத அப்படி ஓர் ஈர்ப்பு! நேரம் கிடைக்கும் போதெல்லாம் எழுதினேன். காலை மூன்றரை மணிக்கு எழுந்து எழுதிய நாட்கள் அதிகம். நான்கு மாதங்களில் முடித்தபோது எனக்கே வியப்பாகிவிட்டது.

கிட்டத்தட்ட அறுநூற்றைம்பது பக்கம் கையெழுத்தில் வந்தது. இரண்டு ஃபைல்களில் போட்டு, டாக்டர் பி.ஆரிடம் தந்தபோது அவரே மலைத்துப் போனார்.

'அடேயப்பா! இவ்வளவு சீக்கிரமாகவா? இவ்வளவு பக்கங்களா?' என்றார்.

அவ்வளவு பக்கங்களையும் நான்கைந்து சின்னச் சின்னத் தொகுதிகளாகப் பிரித்து வைத்துக் கொண்டார். முழுவதுமாகப் படித்தார். பாராட்டினார்.

பல இடங்களில் மருத்துவ வார்த்தைகள் இருந்தன. ஒரு நோட்டுப் போட்டுக் கொண்டு இந்தப் பக்கத்தில் இத்தனையாவது வரியில் இந்த வார்த்தை என்று என் சந்தேகங்களைக் குறித்து வைத்தேன். பின்னர் ஒரு நாள் அவரைச் சந்தித்தேன்.

எனக்குப் புரியாத மருத்துவ வார்த்தைகளுக்கெல்லாம் மிகவும் பொறுமையாக விளக்கமளித்தார். சிலவற்றை அவரே தமிழில் எழுதியும் தந்தார். இவற்றையெல்லாம் சரியான இடங்களில் சேர்த்த பின்பே நான் ஃபைல்களை அவரிடம் தந்தேன்.

'தடைகள் பல தாண்டி....' என்ற தலைப்பைத் தந்தவர் கலைஞர். சென்ற ஆண்டு ஆங்கில மூலத்தை வெளியிட்டபோது 'இப்புத்தகம் தமிழிலும் வர வேண்டும். அப்படி வந்தால் அதற்கு, 'தடைகள் பல தாண்டி....' என்று தலைப்பிடுவது பொருத்தமாக இருக்கும்' என்றாராம். டாக்டர் அதை என்னிடம் சொல்லவே அதை அப்படியே வைத்து விட்டோம்.

எனக்கு ஒரே குறை தான். இந்த நூலின் மொழி பெயர்ப்புப் பணியை நான் தொடங்கியபோது 'பெரிய வொர்க்.. நல்லா பண்ணுவீங்க. பண்ணுங்க' என்று என்னை வாழ்த்தியவர் ஆசிரியர் சாவி. 'புக் வந்ததும் குடுங்க. நான் பூரா படிக்கணும்' என்றார். புத்தகம் வந்துவிட்டது. அவர் இல்லையே!

பேட்டி : டாலி

டெலிபோனில் சரளா சொன்னதைக் கேட்டு யமுனாவின் இதயம் ஒரு யுத்த பூமியாய் மாறிற்று. சிவப்ரகாசத்துக்கும் திலகவதிக்கும் கேட்டு விடாமல் குரலைத் தாழ்த்திக் கிசுகிசுத்தாள்.

"சரளா! நீ என்ன சொல்றே...?"

"உண்மையைத்தான் சொல்லிக்கிட்டிருக்கேன். லாயர் மனோன்மணி இப்பத்தான் ஃபோன் பண்ணினாங்க. அவங்க இன்ஸ்பெக்டர் பால்பாண்டியன்கிட்டே எவ்வளவோ சொல்லிப் பார்த்தாங்களாம். அவர் கேட்காம புறப்பட்டு வந்துக்கிட்டிருக்காராம். நீ என்ன பண்ணப் போறே யமுனா?"

"தெ... தெரியலையே..." சொல்லும்போதே யமுனாவுக்குள் அழுகை உடைத்துக் கொண்டு கிளம்பியது. நாக்கும் தொண்டைப் பிரதேசமும் காகிதமாய் உலர்ந்து போயின.

"ய... யமுனா..."

"ம்..."

"உனக்கு எப்படி உதவறதுன்னே எனக்குத் தெரியலை."

"தலைக்கு மேலே வெள்ளம் போயாச்சு. இனி பிரச்னையை நானே ஃபேஸ் பண்ணிக்கறேன்..." யமுனா ரிஸீவரை வைத்த விநாடி –

போர்டிகோவில் அந்தச் சின்ன இரைச்சல். திரும்பிப் பார்த்தாள்.

போலீஸ் ஜீப்பின் முகம் தெரிய, இன்ஸ்பெக்டர் பால் பாண்டியன் கீழே இறங்கி, கான்ஸ்டபிள் பின்தொடர உள்ளே வந்து கொண்டிருந்தார். யமுனா நடுங்கியவளாய் சிவப்ரகாசத்தைப் பார்க்க,

அவர் முகத்தில் எந்த உணர்ச்சியையும் காட்டாமல் இன்ஸ்பெக்டரையே பார்த்தார்.

பால்பாண்டியன் சிறிது தயக்கமாய் உள்ளே வந்து, சிவப்ரகாசம் ரிடையர்ட் ஜட்ஜ் என்பதற்காக சல்யூட் ஒன்றை வைத்து விட்டுக் கையில் வைத்திருந்த அரசாங்க சாணி நிறத் தாளை நீட்டினார். சிவப்ரகாசம் அந்தத் தாளை அலட்சியமாய்ப் பார்த்து விட்டுக் கேட்டார். முகத்தில் துளி சலனம் இல்லை.

"என்ன இது...?"

"அரஸ்ட் வாரண்ட் ஸார்."

"யாருக்கு அரெஸ்ட் வாரண்ட்?"

"உங்க மருமகள் யமுனாவுக்கு ஸார்."

"எதுக்கு...?"

"ஒரு மர்டர் சம்பந்தமா யமுனாவை ஸ்டேஷனுக்குக் கூட்டிப் போய் போலீஸ் காவல்ல வெச்சு விசாரணை பண்ண வேண்டியிருக்கு ஸார்..."

சிவப்ரகாசம் இப்போதும் முகத்தில் எந்த உணர்ச்சியையும் காட்டாமல் தம் மூக்கின் நுனியை இடது கையின் ஆட்காட்டி விரலால் நிரடிக் கொண்டே கேட்டார்.

"மர்டரா...! மர்டரானது யாரு?"

"லீலாகிருஷ்ணன்னு ஒருத்தன் ஸார்.





## 26

உங்க மருமகள் யமு னாவுக்கு அவனைத் தெரியும்.''

''மா... மாமா...''

யமுனா பதற்ற உடம்போடு கண்களில் கரந்து விட்ட நீரோடு ஏதோ சொல்ல முயல, சிவப்ரகாசம் அவளைக் கையமர்த்தினார்.

''நீ பேசாம இரும்மா...! உன்னைக் கைது பண்ண வந்திருக்கிற இன்ஸ்பெக்டர் சொல்ல வேண்டியதைச் சொல்லட்டும்...'' என்றவர், பால்பாண்டியனிடம் திரும்பினார்.

''சொல்லுங்க இன்ஸ்பெக்டர்! என் னோட மருமகள் யமுனாவுக்குக் கொலை யுண்ட லீலாகிருஷ்ணனை எப்படித் தெரி யும்...?''

''உங்க மகன் அகிலை கல்யாணம் பண்ணிக்கிறதுக்கு முந்தி யமுனா, லீலா கிருஷ்ணனை லவ் பண்ணியிருக்காங்க ஸார்.''

யமுனா வீறிட்டாள்.

''இல்ல மாமா... இன்ஸ்பெக்டர் சொல்றது பொய்... லீலாகிருஷ்ணனை எனக்கு...'' பேச முயன்றவளை இப்போது திலகவதி கையமர்த்தினாள்.

''யமுனா...! நீ ஏம்மா பதற்றப்படறே? மாமாதான் இன்ஸ்பெக்டர்கிட்டே பேசிட் டிருக்காரே... இன்ஸ்பெக்டர் சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லி முடிக் கட்டும்.''

யமுனா பிரமித்த கண்களோடு திலகவதி யையும், சிவப்ரகாசத்தையும் பார்த்தாள். 'இன்ஸ்பெக்டர் பால்பாண்டியன் என்னைக் கைது செய்ய அரெஸ்ட் வாரண்ட்டோடு வந்த பிறகும் இவர்களால் எப்படி இவ்வளவு இயல்பாய் இருக்க முடிகிறது...?'

சிவப்ரகாசம் பால்பாண்டியனிடம் கேட்டுக் கொண்டிருந்தார்.

''என்னோட மருமகள் யமுனாவும் லீலா கிருஷ்ணனும் கல்யாணத்துக்கு முந்தி காதலர்களா?''

''ஆமா ஸார்...''

''ஆதாரம் இருக்கா...?''

**ராஜேஷ் குமார்**

"நிறையவே இருக்கு ஸார்..."

"முக்கியமான ஒண்ணு ரெண்டைச் சொல்லுங்களேன்... கேட்போம்."

"யமுனாவும் லீலாகிருஷ்ணனும் பஸ் ஸ்டாப்ல பக்கம் பக்கமா நின்னு பேசிட்டிருக்கிற மாதிரி ஒரு ஃபோட்டோ இருக்கு..."

"சரி... அப்புறம்...?"

"லீலாகிருஷ்ணனுக்கு யமுனா வாழ்த்து அட்டை அனுப்பியிருக்காங்க. அதுல இருக்கிற கையெழுத்து யமுனாவோடது தான்னு ஃபரான்ஸிக்கில் இருக்கிற க்ராஃபாலஜிஸ்ட் கன்ஃபர்ம் பண்ணி ரிப்போர்ட் கொடுத்திருக்கார். இது தவிர லீலாகிருஷ்ணன் தன்னுடைய ஃப்ரண்ட் வருணுக்கு எழுதிய கடிதத்தில் யமுனாவைப்



"லவ் பேர்ட்ஸ் வாங்கிட்டு வந்தியே, சதா சண்டைப் போட்டுக் கொண்டே இருக்கே...?"

"ஒருவேளை கல்யாணம் பண்ணிக் கிடுச்சோ, என்னவோ?"

– லலிதா செல்லப்பா.

பற்றி எழுதியிருக்கான். யமுனாகிட்டே 'சிவப்புப் பனித்துளி' இருக்கிறதாகவும் அதை வாங்கி இன்னொரு ஃப்ரெண்ட்டுக்குக் கொடுக்கும்படியாகவும் அந்த லெட்டர்ல எழுதப்பட்டிருந்தது."

"அதென்ன சிவப்புப் பனித்துளி...?"

"இந்தக் கேள்வியை யமுனாகிட்டேதான் கேட்கணும் ஸார்."

யமுனாவை ஏறிட்டார் சிவப்ரகாசம்.

"உனக்குத் தெரியுமாம்மா...?"

"தெ... தெரியாது மாமா..." பீறிட்ட கண்ணீரோடு யமுனா தலையாட்ட, சிவப்ரகாசத்தின் பார்வை மறுபடியும் பால்பாண்டியன் முகத்துக்குப் போயிற்று.

"இன்ஸ்பெக்டர்! லீலாகிருஷ்ணனின் மரணம் கொலையா... தற்கொலையா...?"

"மொதல்ல தற்கொலைன்னு நினைச்சோம். டாக்டர்ஸ் கொடுத்த போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட்டில் கொலைன்னு சொல்லப்பட்டிருக்கு... ஆனா அது தற்கொலைன்னு போலீஸுக்குக் காட்றதுக்காகக் கொலையாளிகள் முயற்சி பண்ணியிருக்காங்க."

"கொலையாளிகள் யாராக இருக்கலாம்ன்னு நினைக்கறீங்க...?"

"யமுனாவும், வருணும்."

"மோட்டிவ்...?"

"லீலாகிருஷ்ணனும் யமுனாவும் ஒருத்தரையொருத்தர் விரும்பியிருக்காங்க. ஏதோ ஒரு காரணத்துக்காக யமுனா லீலாகிருஷ்ணனை விட்டுட்டு உங்க மகனைக் கல்யாணம் பண்ணியிருக்காங்க. பழைய காதல் வாழ்க்கையை உங்ககிட்ட சொல்லிடப் போறதா லீலாகிருஷ்ணன் ப்ளாக்மெயில் பண்ணியிருக்கலாம். பணம் கேட்டும் தொந்தரவு பண்ணியிருக்கலாம்.... இந்த டார்ச்சரைத் தாங்கிக் கொள்ள முடியாத யமுனா, லீலாகிருஷ்ணனைத் தீர்த்துக்கட்டறதுக்காக வருணின் உதவியை நாடியிருக்கலாம். வருண் ஏற்கெனவே மும்பையில் ஒரு கொலையைப் பண்ணிட்டு ஜெயிலுக்குப் போனவன்."

"ஸோ... லீலாகிருஷ்ணனை யமுனாவும் வருணும் சேர்ந்து கொலை பண்ணியிருக்கலாம்ன்னு நீங்க நினைக்கறீங்க...?"

"யெஸ்...! இந்தக் கொலையில் மட்டும் இல்லை. இன்னொரு கொலையிலும் இவங்க சம்பந்தப்பட்டிருக்கலாம்கிறது போலீஸோட எண்ணம்..."

"இன்னொரு கொலையா?"

"ம்... தொழிலதிபர் தயானந்த் நேற்று இராத்திரி அவருடைய கெஸ்ட் ஹவுஸில் பதினேழு கத்திக் குத்துக்களோடு கொலை செய்யப்பட்டு கிடந்தார்."

"இதுக்கும் மோட்டிவ் இருக்கா...?"

"இருக்கு...?"

"சொல்லுங்க..."

"உங்க மருமகள் யமுனா கல்யாணமாகறதுக்கு முந்தி தயானந்துக்குச் சொந்தமான தயா பட்டன் பாக்டரியில் வேலை பார்த்திருக்காங்க. அதே பாக்டரியில்தான் லீலாகிருஷ்ணனும் வேலை பார்த்தான். அதே தயானந்த்கிட்டே இப்போ வருண், கீர்த்திவாசன் என்கிற ஒருத்தரைக் கொலை செய்ய பத்து லட்ச ரூபாய் பேரம் பேசி கூலிப்படையானா போய் வேலைக்குச் சேர்ந்தான்.

ஒரே ராத்திரியில் ஏதோ தகராறு. தயானந்த் கொலை செய்யப்பட்டிருக்கார். பணத்தையும் காணோம். லோ இந்த கேஸிலும் லீலாகிருஷ்ணன், யமுனா, வருண் மூணு பேரும் சம்பந்தப்பட்டிருக்காங்க. வருண் இப்போ போலீஸ் லாக்கப்புக்குள்ளே இருக்கான். அவன்கிட்டேயிருந்து எந்த உண்மையையும் எங்களால வாங்க முடியலை. இந்த ரெண்டு கொலைகளுக்கும் பின்னணியில் உள்ள உண்மைகள் வெளியே வரணும்ன்னா யமுனாவைக் கைது பண்ணி ஸ்டேஷனுக்குக் கொண்டு போய் விசாரிக்கணும்... நீதிபதியாய் இருந்து ஓய்வுபெற்றிருக்கிற நீங்க போலீஸுக்கு முழு ஒத்துழைப்புக் கொடுக்கணும் ஸார்."

சிவப்ரகாசம் புன்னகை செய்தார். "மிஸ்டர் இன்ஸ்பெக்டர்! இந்த கேஸ் இரண்டையும் நல்ல 'பில்ட் அப்' பண்ணியிருக்கீங்க. பட் ஸ்ட்ராங்கான அஸ்திவாரம் கிடையாது."

"ஸ... ஸார்....!"

"யெஸ்...! நீங்க நினைச்சுட்டிருக்கிற மாதிரி யமுனாவும் லீலாகிருஷ்ணனும் காதலர்கள் கிடையாது. லீலாகிருஷ்ணன் யமுனாவை விரும்பினான். யமுனா அவனை விரும்பலை... இந்த ஒருதலைக் காதலுக்கு யமுனா எப்படி பொறுப்பாக முடியும்...?"

"யமுனா லீலாகிருஷ்ணனைக் காதலிக்கலைன்னு உங்களுக்கு எப்படித் தெரியும் ஸார்...?"

"என்னுடைய மகன் அகில் யமுனாவைக் கல்யாணம் பண்ணிக்க ஆசைப்பட்டதும் யமுனாவைப் பத்தி வெளியே மறைமுகமா விசாரிக்க ஆரம்பிச்சோம். சில பேர் லீலாகிருஷ்ணனுக்கும் யமுனாவுக்கும் காதல் இருக்கலாம்ன்னு சந்தேகத் தொனியில் சொன்னாங்க. அது உண்மையா பொய்யான்னு கேட்டுத் தெரிஞ்சுக்க நான், என்னோட மனைவி, மகன் அகில் மூணு பேருமே லீலாகிருஷ்ணனைப் போய்ப் பார்த்தோம். 'யமுனாவும் நீயும் காதலர்களா... அப்படியிருந்தா என் பையனுக்கு வேற இடத்துல பொண்ணு பார்த்துக்கறேன்'னு சொன்னேன். அதுக்கு லீலாகிருஷ்ணன், 'யமுனாவை நான்தான் விரும்பினேனே தவிர, யமுனா என்னை விரும்பலை. அப்பா அம்மா இல்லாத அநாதைப் பெண்ணான யமுனா உங்க வீட்டுக்கு மருமகளாகப் போறது எனக்குச் சந்தோஷம்தான். நீங்க என்கிட்டே பேச வந்தது கூட யமுனாவுக்குத் தெரிய வேண்டாம். தெரிஞ்சா அவ மனசு வேதனைப்படும்'ன்னு சொன்னான். லீலாகிருஷ்ணன் சொன்னது எங்க மனசுக்கும் சரியாப்படவே இதைப் பத்தி யமுனாகிட்டே இதுவரைக்கும் பேசவே இல்லை..."

யமுனா வியப்பில் உறைந்து போய் நின்றிருக்க, இப்போது திலகவதி தொடர்ந்தாள்.. இன்ஸ்பெக்டரிடம்,

"யமுனா இந்த வீட்டுக்கு மஹாலட்சுமி! கடந்த ரெண்டு வருஷ காலமா அவளைப் பத்தி எங்களுக்கு நல்லாவே தெரியும். ஒரு சின்னப் பொய்யைக் கூட ஒழுங்கா சொல்ல முடியாத.. சொல்லத் தெரியாத இந்தப் பெண்ணா நீங்க சொல்ற கொலைகளுக்குக் காரணமாய் இருக்க முடியும்?"




"டாக்டர்... திடீர்னு பிரமை பிடிச்சவர் மாதிரி பேசாமல், நின்று குனிந்தபடி கன்னத்தில் போட்டுக்கிட்டே இருக்கார் டாக்டர்...!"

"எப்போதிலிருந்து?"

"அமைச்சர் பதவி பறிபோனதிலேர்ந்து டாக்டர்...!"

– எஸ். வீமராஜன்

"ஆதாரம் இருக்கு மேடம்."

"என்ன ஆதாரம்...?"

"யமுனாவோட போட்டோவும் வாழ்த்து அட்டையும் லீலாகிருஷ்ணன் வீட்ல இருந்ததே... வாழ்த்து அட்டையில் இருக்கிற கையெழுத்து யமுனாவோடதுதான்னு ஃபாரன்ஸிக்கைச் சேர்ந்த க்ராஃபாலஜிஸ்ட் சொல்லியிருக்காரே?"

"அந்த க்ராஃபாலஜிஸ்ட் பேர் வில்லியம்ஸ்தானே...?"

"ஆமா..."

"அவர் இப்ப என்ன சொல்றார்ன்னு கேட்போமா இன்ஸ்பெக்டர்...?" சொன்ன திலகவதி டீபாயின் மேல் உட்கார்ந்திருந்த

# சின்னத் திரை அம்மன்



பெரிய திரையில் விஸ்வரூபமெடுத்த "அம்மன்கள்" இப்போது சின்னத் திரையிலும். 'சன்'னில் வரும் 'சூலம்' அதில் ஒன்று. தென்மாவட்டத்திலுள்ள ஒரு குட்டியூண்டு கிராமம். இங்குள்ள அம்மனின் சூலம் பிரசித்தம். மாந்திரீகம் செய்யும் ஒருவரின் துணையோடு கோயில் தர்மகர்த்தா செய்யும் அட்டூழியங்கள் எல்லை மீற, இளம்பெண் பார்வதி, அம்மன் சக்தி (?!)யுடன் விஸ்வரூபமெடுக்கிறார்... என்று போகிறது ஐம்பத்திரண்டு வார 'சூலத்'தின் கதை.

இதில் அம்மனாகியிருப்பவர் நடிகை சுவலட்சுமி. பெரிய திரை கைவிட்ட பிறகு சின்னத்திரை கைகொடுத்ததில் குஷியாகி இருக்கிறாராம் இந்த அம்மன்! ஸாரி சுவலட்சுமி.

– சலாம்ஜி

---

டெலிபோனின் ரிஸீவரை எடுத்துக் கொண்டு, டயலில் எண்களைத் தட்டினாள். மறுமுனையில் ரிங் போய் ரிஸீவர் எடுக்கப் பட்டதும் பேசினாள்.

"அகில்! நாம எதிர்பார்த்தபடியே இன்ஸ்பெக்டர் பால்பாண்டியன் யமுனாவைக் கைது பண்ண அரஸ்ட் வாரண்ட்டோடு வந்துட்டார். அந்த வாரண்ட்டை அவர் தன்னோட கையாலேயே கிழிச்சுப் போட்டுட்டு ஸாரி சொல்றதுக்காக இங்கே காத்துக்கிட்டிருக்கார். அந்த க்ராஃபாலாஜிஸ்ட் வில்லியம்ஸை ஒரு ரெண்டு நிமிஷம் இங்கே கூட்டிட்டு வாயேன்..."

திலகவதி ரிஸீவரை வைத்துவிட்டு பால்பாண்டியனை ஏறிட்டாள்.

"இன்ஸ்பெக்டர்! வில்லியம்ஸும் என் மகன் அகிலும் புறப்பட்டு வந்துக்கிட்டு இருக்காங்க. அவங்க வந்து சேர எப்படியும் பதினஞ்சு நிமிஷம் ஆயிடும். அதுவரைக்கும் ஏதாவது சாப்பிடறீங்களா... சூடா காப்பி...?"

"வே... வேண்டாம்..."

"வேர்த்து வழியறீங்க... கூலா ஏதாவது ட்ரிங்க்ஸ்...."

"வேண்டாம் மேடம்."

"ப்ளீஸ்... ஏதாவது எடுத்துக்குங்க...! அப்பத்தான் அடுத்த சில நிமிஷங்களில் உங்களுக்குள் ஏற்படப் போகிற அதிர்ச்சிகளைச் சமாளித்துக் கொள்ளக்கூடிய தெம்பு கிடைக்கும்."

"யமுனா...!"

"அத்தே...!"

"போய் ஏதாவது கூலா கொண்டாம்மா."

யமுனா சமையலறையை நோக்கி நம்ப முடியாத சந்தோஷத்தோடு போக –

சிவப்ரகாசம் இன்ஸ்பெக்டர் பால்பாண்டியனை ஒரு சின்ன புன்னகையோடு பார்த்தார்.

"இன்ஸ்பெக்டர்! சிவப்புப் பனித்துளி என்னான்னு உங்களுக்கும் தெரியாது. யமுனாவுக்கும் தெரியாது. ஆனா அது என்னான்னு எனக்குத் தெரியும்... அதைப் பத்திக் கொஞ்சம் பேசலாமா...?"

(தொடரும்)



# எனக்குள் கவிதை

ஒரு
சரியான தருணத்தில்
சட்டென உதிர்கிறது
ஆனால்
சருகாக அல்ல
உயிருள்ள மலராய்...

கவனிப்பு ஏதுமற்ற
காட்டு விலங்கின்
பிரசவமாய்
அது நிகழ்கிறது.

ஒழுங்கும் கோர்வையும்
ஒன்றுமில்லாத சிதறலாய்
வந்துதான் விழுகிறது.

அந்த நிமிடத்தின்
உயிர்த் துடிப்பை
மௌனமாய்ச் சொல்லி
மறைகிறது

வார்த்தைகளால்
மாசுபடாத அந்தத்
தூய்மையின்
நகலை
எழுத்தில் வடிப்பதற்குள்
இறந்து இறந்து பிறக்கிறேன்.

— எஸ். பிருந்தா

**மாண்புமிகு மெமரி - 9**

# பிடிக்காத விஷயம் மறந்துடும்!

திருவள்ளூர் என்.சி. ஸ்ரீதரன்

கடந்த எட்டு வாரங்களாக நினைவாற்றல் பற்றி பல கோணங்களிலிருந்தும் அலசியதில் நினைவாற்றலைப் பெருக்கிக் கொள்ள முடியும் என தெரிந்துக்கொண்டிருப்பீர்கள்!

அதே நேரத்தில் நாம் ஏன் பல தகவல்களை மறந்து விடுகிறோம் என்றும் தெரிந்து கொள்ள வேண்டும்.

நம்முடைய மறதிக்குப் பல காரணங்கள் இருக்கலாம். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான காரணத்தால் நினைவாற்றல் இருக்கலாம் அல்லது இல்லாமலிருக்கலாம். ஒரு பிரச்னைக்குத் தீர்வு காண பயன்படுத்தும் பல உபாயங்களில் ஜப்பானியர்கள் 'காரணகாரிய படம்' (cause and effect diagram) என்ற ஒன்றைக் கையாளுவார்கள். ஒரு காரியம் நடக்கிறது அல்லது நடக்காமல் இருக்கிறது என்றால் அதற்குக் காரணங்கள் என்னென்ன என்று ஆராய்வார்கள். அந்தக் காரணங்கள் ஏன் ஏற்படுகிறது என்று ஆராய்ந்து அவற்றைக் களைய முயற்சி எடுத்துக்கொண்டால், அந்தக் காரியம் நடப்பது தவிர்க்கப்படலாம் என்று சொல்வார்கள்.

உதாரணமாக, நமக்கு அடிக்கடிக் கோபம் வருகிறதென்றால், அது ஏன் ஏற்படுகிறது, எந்தெந்த சூழ்நிலைகளில் வருகிறது என்று தெரிந்து கொண்டு விட்டால் அதைத் தவிர்க்கலாம்.

அதே போன்று நம்முடைய நினைவாற்றலைப் பெருக்கிக் கொள்ள, நம்முடைய ஞாபக மறதியைத் தவிர்ப்பதும் ஒரு வழி.

நம்முடைய நினைவு பசுமையாக இல்லாததற்கு, அந்த விஷயம் நம்முடைய நினைவில் ஆழமாகப் பதியாதது ஒரு காரணமாக இருக்கலாம். ஒரு கருத்தை நாம் கவனமாகக் கேட்காமலிருந்தால் அது நமது மனத்தில் ஆழமாகப் பதியாது. நம்முடைய நினைவாற்றல் ஒரு புகைப்பட ஃபிலிமையும் (Photographic film), அது இருக்கும் ஒரு காமிராவின் லென்ஸையும் ஒத்திருக்கிறது. லென்ஸை சரியாகப் பொருத்தி, ஒளிக்கதிர்களைப் ஃபிலிமின் மேல் ஒன்று திரட்டிப் பாய்க்கா விட்டால் (focus) அந்த ஃபோட்டோ துல்லியமாக இருக்காது. அது போலத்தான் நம்முடைய முழுக் கவனத்தையும் ஒன்றாகத் திரட்டிக் கேட்கும் அல்லது படிக்கும் தகவலை, உன்னிப்பாகக் கவனிக்காவிட்டால் அந்தத் தகவல் நமது மனத்தில் பசுமையாகப் பதியாது.



எனவே, குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும்பொழுது அவர்களுடையக் கவனம் முழுவதும் உங்களிடம் இருக்கிறதா என்று அவ்வப்போது பார்த்துக் கொள்ள வேண்டும். அப்படிக் கவனம் இல்லாதிருக்கும்பொழுது சொல்லிக் கொடுக்கும் பாடம் ஒன்றும் அவர்களுடைய நினைவில் நிற்காது.

சில சமயங்களில் ஒரு விஷயத்தை



மீண்டும், மீண்டும் படிக்காவிட்டாலும் அது நமது நினைவிலிருந்து மறைய வாய்ப்புண்டு. எடிங்ஹன்ஸ் (Eddinghans) என்று ஒரு மனோதத்துவ நிபுணர் சொல்கிறார், நாம் படிக்கும் தகவலில் ஐம்பத்தாறு சதவிகிதம், படித்த ஒரு மணி நேரத்துக்குள் மறந்து விடுகிறது என்று. எனவே ஒரு தகவலை அடிக்கடிக் கேட்பதாலும் படிப்பதாலும் மட்டுமே அது பசுமையாக நினைவில் நிற்க வாய்ப்புகள் உண்டு.

நம்முடைய மறதிக்கு மற்றொரு காரணம் தடங்கல்களும், தடைகளும். சில சமயம் நாம் ஒன்றைப் படித்துவிட்டு அடுத்ததைப் படிக்கும்பொழுது, முதலில் படித்தது மறந்து விடும். உதாரணமாக, நாம் ஒரு டெலிபோன் நம்பரைப் பார்க்கிறோம். அது நினைவில் நிற்பது போல் இருக்கும். ஆனால் அதற்கடுத்து மற்றொரு டெலிபோன் நம்பரைப் பார்க்கும்போது, முதலில் பார்த்த நம்பர் மறந்துவிடும். ஒவ்வொரு முறை புதிய தகவல் ஒன்றைக் கற்றுக் கொள்ளும்போதும் ஏற்கெனவே கற்ற மற்ற ஒரு புதிய தகவலை மறப்பதற்கு வாய்ப்புண்டு. ஒருவர் மீன்களை ஒவ்வொரு வகையாக இனம் கண்டு கொள்ளும் வல்லுநராக இருந்தாராம். ஆனால் அவருக்கு ஒவ்வொரு மனிதரின் பெயரையும் நினைவில் வைத்துக் கொள்ளும்போதும் ஒரு மீனின் வகை மறந்து விடுமாம்!

மனக் கசப்பான விஷயங்கள் நம்முடைய மனத்தில் நிற்காது. சில மாணவர்களுக்கு அல்ஜீப்ரா பிடிக்காது. எனவே அது சம்பந்தமான சில குறிப்புகள் அடிக்கடி மறந்து விடும். குழந்தைகள் எது போன்ற விஷயங்களை மறக்கிறார்கள் என்று உன்னிப்பாகப் பார்த்து, அது போன்ற விஷயங்களை அவர்கள் நினைவில் வைத்துதான் ஆக வேண்டுமென்றால், அவற்றின் மீது குழந்தைகளுக்கு ஆர்வத்தை வளர்க்க வேண்டும். இதற்கு மற்றொரு உதாரணத்தையும் சொல்லலாம். நாம் உடல் நிலை சரியில்லாதபோது மருந்து சாப்பிட மறந்து விடுகிறோம். மருந்தின் மேல் நமக்கிருக்கும் வெறுப்பும் இதற்கு ஒரு காரணம் என்று சொல்லலாம். அதே போன்று நாம் குடையை மறந்து வைத்து விடுவதற்குக் காரணம் குடையை எடுத்துச் செல்ல நாம் விரும்பவில்லை என்பதாகவும் இருக்கலாம்.

நாம் இந்தத் தகவலை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும் என்று அக்கறை கொண்டு, அதற்கான ஆக்கபூர்வமான நடவடிக்கைகளை எடுத்தால் அது கண்டிப்பாக நினைவில் நிற்கும்.

குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும்போது இது போன்ற விஷயங்களைக் கவனித்துச் செயல்பட வேண்டும்.

**வி**ஷயங்களை நன்றாக கிரகித்துக் கொண்டு, ஒரு குழந்தை படிப்பது என்பது கடவுள் கொடுத்த வரமா? மரபணு சமாசாரமா? பெற்றோர், ஆசிரியர் முயற்சிக்குக் கிடைத்த பரிசா? அல்லது... எந்தக் குழந்தையையும் நன்றாகப் படிக்க வைக்க முடியுமா...? அடுத்த இதழில் பார்ப்போம்.



“சார் ரேடியோ ரொம்ப பழைய மாடல். இதுல இருக்கிற ஸ்பேர் பார்ட்ஸ் இப்ப கிடைக்குமாங்கறதே சந்தேகம். அப்படியே வேற ஏதாவது போட்டுச் சரி செய்யலாம்னாலும் இருநூறு ரூபாயாவது செலவாகும். அதுக்குப் புதுசா சின்ன ரேடியோவே வாங்கிடலாம். தவிர இப்பவெல்லாம் யார் சார் ரேடியோ கேட்கறாங்க? தனியார் சேனல்க வந்த பிறகு ரேடியோ கேட்கறதே குறைஞ்சு போச்சு. செய்யணும்னா சொல்லுங்க செய்யறேன்”என்று கூறினான் கடைக்காரன்.

ராஜேந்திரன் சில நொடிகள் யோசித்தார். “அப்படியே வெச்சிரு. பையன் கிட்டே கேட்டுட்டு நாளைக்குச் சொல்றேன்” என்றார்.

கடைக்காரன் தலையாட்டி விட்டு தொலைக் காட்சிப்

பெட்டியின் அளவில் இருந்த அந்த ரேடியாவைத் தூக்கி உள்ளே வைத்தான். ராஜேந்திரன் அதை ஒரு பார்வை பார்த்துவிட்டு வீடு நோக்கி நடக்க ஆரம்பித்தார்.

கடைக்காரன் சொன்னது போல இப்போதெல்லாம் எத்தனை பேர் ரேடியோ கேட்கிறார்கள் என்பது சந்தேகமே. ஒரு வேளை தொலைக்காட்சிப் பெட்டி இல்லாதவர்கள் கேட்கக் கூடும். தொலைக்காட்சி, உள்ள வீட்டில், ஒரு நினைவுச் சின்னம் போலத்தான் மூலையில் முடங்கிக் கிடக்கிறது ரேடியோ.

அந்த ரேடியாவை வாங்கி கிட்டதட்ட முப்பத்தைந்து வருடமாகிவிட்டது. தினமும் காலையில் எழுந்ததும் அதைத் துடைத்து விட்டுப் போடுவார். பக்திப் பாடல்கள், நாகஸ்வரம் என்று ஏதாவது ஒரு இசை. பிறகு பொது நிகழ்ச்சிகள், திரைப் படப் பாடல்கள் என்று வரிசையாக ஒலிபரப்பாகும். காபி பருகியபடி, குளித்தபடி, சாப்பிட்டபடி என்று அலுவலகம் செல்லும் வரை கேட்டுக் கொண்டிருப்பார்.

மாலை வீடு திரும்பிய பிறகும் கேட்டவாறு பிள்ளைகளோடு விளையாடிக்கொண்டு இருப்பார். பன்னிரண்டு வருடத்திற்கு முன்பு தொலைக்காட்சியைப் பெரிய மகன் வாங்கி வைத்தான். அப்போது அவரது ரேடியோ கொஞ்சம் பின்னால் தள்ளப்பட்டது. அது இருந்த இடத்தில்தான் தொலைக்காட்சியை வைத்தார்கள். அது வேறொரு மூலைக்குச் சென்றது.

ஆனாலும் ரேடியோவின் மவுசு அப்போது குறைய வில்லை. தொலைக்காட்சியில் வெள்ளிக் கிழமைகளில் ஒலியும் ஒளியும், ஞாயிற்றுக் கிழமைகளில் சினிமாப் படமும் தான் விரும்பிப் பார்க்கப்பட்டன. மற்ற நேரத்தில் அது உறைக்குள் தூங்க, ரேடியோதான் ராஜ்யம் நடத்தியது. ஐந்து வருடங்களுக்கு முன்புவரைகூட ராஜேந்திரன் ரேடியோவைக் கேட்டுக் கொண்டுதான் இருந்தார்.

பிறகுதான் படிப்படியாகக் குறைய ஆரம்பித்தது. தொலைக்காட்சிக்குக் கேபிள் இணைப்புக் கொடுக்கப்பட்டது. கறுப்பு வெள்ளை போய் வண்ணத் தொலைக்காட்சி வந்தது. தினமும் மத்தியானம் ஒரு சினிமா, மாலையில் பல சினிமா சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகள், இரவில் சினிமா, மெகா தொடர்கள் என்று எந்நேரமும் தொலைக்காட்சி விழித்துக் கொண்டே இருந்தது.

போதாக் குறைக்குப் புதிதாக சிடி வாங்கப்பட்டுள்ளது. இரவில், அப்போதுதான் தியேட்டரிலேயே ரிலீஸ் ஆகி இருக்கும் படத்தின் திருட்டுக் கேசட்டை கொண்டு வந்து போட்டுப்பார்த்துக் கொண்டிருப்பார்கள்.

# ரேடியோ

ஆரணி யுவராஜ்

இதனால் ராஜேந்திரன் தினமும் ரேடியோவை ஒரு ஏக்கப் பார்வைப் பார்ப்பதோடு சரி. அதற்கும் இன்று காலை சோதனை வந்தது. பேரன்கள் ஒருவனை ஒருவன் துரத்தி விளையாட, ஒருவன் கைப்பட்டு ரேடியோ கீழே விழுந்தது. ராஜேந்திரன் பதறிப்போனார். பேரன்களைத் திட்டித் துரத்தி விட்டுப் போட்டுப் பார்த்தார். 'கொர்ர்ர்' என்ற சப்தம்தான் வந்தது.

அதைத் தூக்கிக் கொண்டு கடைக்காரனிடம் வர, அவன் இப்படிக் கூறி விட்டான். அவனுக்கு எத்தனையோ தொலைக்காட்சி பெட்டிகள்

காத்திருந்தன. விசிஆர்களைப் பழுது பார்க்க வேண்டியிருந் தது. அதைப் பார்த்தாலாவது ஐந்நூறு, ஆயிரம் என்று வரும். இந்த ரேடியோவைப் பார்க்கச் சலிப்பு. அதனால் அப்படிக் கூறி விட்டான்.

ராஜேந்திரனும் இரு விஷயங்களுக்காக யோசித்தார். ஒன்று பலன். சரி செய்து கொண்டு போனாலும் சும்மாதான் இருக்கும். அதற்கு அப்படியே வைத்திருக்கலாமே என்கிற எண்ணம். அடுத்தது பணம். இப் போது சம்பாதிப்பது மகன்கள். அவர்களிடம்தானே கேட்க வேண்டும். அதனால்தான் நாளை பதில் சொல்வதாகக் கூறிவிட்டார்.

ராஜேந்திரன் வீட்டிற்கு வந்தபோது மகன்கள் வந்து விட்டிருந்தார்கள்.

"என்னப்பா ரேடியோ உடைஞ்சிருச் சாமே. ரிப்பேருக்கா கொண்டு போனீங்க?" எனக் கேட்டான் பெரியவன்.

"ஆமாண்டா" என்றார்.

## திடீர்ப் பரிசுப் போட்டி – 14

இந்த இதழ் பற்றிய சிறந்த விமர்சனக் கடிதத்துக்குக்



காத்திருக்கிறது ரூ. 100 பரிசு. கடிதம் வாழ்த்துக் கடிதமாகத்தான் இருக்க வேண்டும் என்பதில்லை. வசவுக் கடித மாகவும் இருக்கலாம்... வட்டமேஜையில் கட்டம் கட்டி அந்தஸ்தோட வெளியிடு வோம். என்ன ரெடியாயிட்டீங்களா? ஆசிரியர் தீர்ப்புதான் இறுதி.

"என்ன சொன்னான்?"

"ரிப்பேர் செய்யறது கொஞ்சம் கஷ்டமாம். இருநூறாவது செலவாகுமாம்."

"விடுங்கப்பா. இப்பவெல்லாம் எங்கே ரேடியோவைக் கேட்கறீங்க? எதுக்கு வீணா ரிப்பேர் செய்துகிட்டு..." என்று பட்டென கூறினான் சின்னவன்.

"நா... நானும் அதைத்தான் நினைச்சேன்" என்று மெல்லிய குரலில் கூறினார் ராஜேந்திரன்.

"கடைக்காரன்கிட்டே சொல்லிப் பாருங்கப்பா. நூறுக்கோ இருநூறுக்கோ வித்துடச் சொல்லுங்க. இங்கே சும்மா இடத்தை அடைச்சுக்கிட்டு இருக்கு." என்றான் பெரியவன்.

"இ... இல்லைடா. நான் என் சம்பளத்துல கொஞ்ச கொஞ்சமா சேர்த்து வெச்சி வாங்கினது. சும்மா ஒ... ஒரு மூலையில இருந்துட்டுப் போகட்டும்" என்றார்.

"எவ்வளவுக்குத் தாத்தா வாங்கினீங்க?" என்று கேட்டான் பேரன்.

"இருநூத்தி ஐம்பதுடா."

"அவ்வளவுதானே... போனா போகுது விடு தாத்தா"என்றான் அலட்சியமாக.

"அடேய்! உன் தாத்தா இந்த ரேடியோவை வாங்கி வந்த நாள் என்னமா குதிச்சாரு தெரியுமா? என்னமோ ஏரோபிளேனே வாங்கி வந்த மாதிரி தினமும் அதைத் துடைக்கறதும் உன் அப்பா தொட்டா உடனே கத்தறதும்..." என்று மனைவி கிண்டலாகக் கூற, அனைவரும் சிரித்தார்கள்.

ராஜேந்திரனுக்கு உள்ளுக்குள் கோபமும் ஒரு வித வேதனையும் உண்டானது. ஆனாலும் அதை மறைத்துக் கொண்டு அவர்களோடு சேர்ந்து சிரிக்க முயற்சி செய்தார்.

அடுத்த நாள் ரேடியோவை அப்படியே வாங்கி வந்து அறையில் ஒரு மூலையில் வைத்தபோது, ஹாலில் மகனின் குரல்.

"டேய்... டேய்... சி.டி.பிளேயரை தொடாதேன்னு எத்தனை முறை சொல்றது. எதையாவது அமுக்கிக் கெடுத்துடப் போறே" என்று தன் மகனை அதட்டிக் கொண்டிருந்தான்.

ராஜேந்திரனுக்குள் ஒரு புன்னகை. 'இன்று ரேடியோ இருக்கு மிடத்தில் நாளை அந்த டீவியோ சி.டி.பிளேயரோ இருக்குமோ? என் இடத்தில் என் மகன்கள் இருப்பார்களோ?' மீண்டும் புன்னகை அரும்பியது அவர் முகத்தில். ○

ஓம் சாந்தி

# நமக்குள் இருக்கும் சிகிச்சை சக்திகள்



● நம்முடைய உடல், மனது அதனைச் சார்ந்த எண்ணங்களை போற்றி பாதுகாக்கும் சக்தி நமக்குள்ளேயே இருக்கிறது என்பதை எவ்வளவு பேர் அறிந்திருப்பீர்கள்! வாழ வைக்கும் உயிர் சக்தியுடன் இயங்கும் நம் உடலில், பேராற்றல் மிக்க பிரபஞ்ச அண்டத்தின் தெய்வீகமான ஆன்ம சக்தியை உள்கொணர்ந்து நமக்கு நாமே நோய்க்கான சிகிச்சை செய்து கொள்ள முடியும் என்பது நிரூபிக்கப்பட்ட உண்மை!

● நோய் எதுவாக இருந்தாலும் அதன் மூல காரணம் நமக்குள் இயங்கும் உயிர் சக்தியின் குறைபாடுகளே. இது போன்ற குறைபாடுகளை இங்கு குறிப்பிட்டுள்ளபடி ரேய்கி மற்றும் பலவகையான சிகிச்சை முறைகளை கற்று நம் சக்தியை அதிகரித்துக் கொள்வதன் மூலம் நம்முடைய நோய்களை நாமே போக்கிக் கொள்ள முடியும். கூடவே உடல் பலகீனம், டென்ஷன், மன அழுத்தம், தூக்கமின்மை, மறதி, தாழ்வு மனப்பான்மை போன்றவைகளும் தானாகவே நீங்கிவிடும்.

● மன அமைதி தரும் தியான பயிற்சிகள் ஜப்பானிய சிகிச்சை முறைகள் மற்றும் எல்லோருக்கும் மிகவும் தேவைப்படக்கூடிய பல பாதுகாப்பு முறைகளும் இவருடைய ரேய்கி வகுப்பில் கற்றுத்தரப்படும்.

● நாம் பெறும் சக்திகளை நம்முடைய சொந்த நலனிற்காக மட்டுமின்றி, கஷ்டப்படும் பிறருடைய நலனிற்காகவும் பயன்படுத்தும் பொழுது அதனால் கிடைக்கும் திருப்தியே அலாதி!

● ICRTயின் மெம்பரான இவர் பிரபல மாஸ்டர்களான William Rand, William Hauw, Paula Horan, Alton Kamadon, Gissele King போன்றவர்களிடம் நேரிடையாக பயின்றவர்.

● உள் நாட்டிலிருந்தும், வெளி நாட்டிலிருந்தும் வந்து இவரிடம் பயின்ற பலரும் இன்று நல்ல உடல், மன வலிமை பெற்று தங்கள் வாழ்க்கையில் பல வகையிலும் முன்னேற்றம் கண்டு வருகிறார்கள் என்பதே இவருடைய திறமைக்குச் சான்று

*பயிற்சி விவரங்கள்:*

- உசூயி ரேய்கி I, II & மாஸ்டர்ஷிப்
- கருணா ரேய்கி I, II & மாஸ்டர்ஷிப்
- Magnified Healing
- CORE ABUNDANCE through Reiki
- MELCHIZEDEK METHOD OF HEALING.
- PENDULUM DOWSING.

(ஆங்கிலம் மற்றும் தமிழில் பயிற்சி விளக்கம் பெறலாம். தபால் மூலம் பயிற்சி பெற முடியாது.)

ஆண், பெண் எந்த வயதினராக இருந்தாலும் கற்றுக் கொள்ளலாம். விருப்பமுள்ளவர்கள் அணுகவேண்டிய முகவரி:

**Mrs. LAKSHMI NARAAYAN**
**Reiki Grand Master**

37/1, இரண்டாவது மெயின் ரோடு,
கலைமகள் நகர், ஈக்காட்டுதாங்கல், (100 அடி ரோடு பிரிட்ஜ், அசோக் நகர் அருகில்)
சென்னை – 600 097. போன்: 2323066
Email: lakshmi_reiki@yahoo.com

பிரதி மாதமும் வகுப்புகள் இருக்கும்

# பெண்களுக்கு வேலைவாய்ப்பு தருகிறோம்!

சென்னையில் பெண்களின் முன்னேற்றத்திற்கு வழிகாட்டும் முன்னணி சமூக சேவை நிறுவனமான 'பெண்கள் நல முன்னேற்ற வழிகாட்டி மையத்தில்' வேலைவாய்ப்பில்லாத பெண்களுக்கு அவரவர் கல்வித் தகுதிக்கு ஏற்ப வேலைவாய்ப்பை ஏற்படுத்தித் தருகிறோம். ஆர்வம் உள்ளவர்கள் விண்ணப்பிக்கலாம். அல்லது நேரில் வரலாம்.

சமூகசேவையில் ஈடுபாடு உள்ளவர்களுக்கு முன்னுரிமை அளிக்கப்படும். சுயதொழில் செய்ய ஆர்வம் உள்ளவர்களும் தொடர்புகொள்ளலாம். ஏழைப்பெண்கள் பென்ஷன் வாங்க, இலவச தையல் மெஷின் பெற, குழந்தையைத் தத்தெடுக்க சட்ட ஆலோசனை, பியூட்டி பார்லர் நடத்த ஆலோசனை, விதவைத் திருமண அரசு உதவித் தொகையைப் பெற, ஆதரவற்றோர் முதியோர் இல்லங்களில் சேர ஆலோசனை. குழந்தை காப்பகம் நடத்துவதற்கான வழிகாட்டுதல், கிராமப்புற பெண்கள் சிறுதொழிலில் ஈடுபட ஆலோசனை வழங்குகிறோம்.

நேரிலோ, தபால்மூலமோ தொடர்புகொள்ள:

**பெண்கள் நல முன்னேற்ற வழிகாட்டி மையம்**

4, Appavoo Gramani 3rd Street, R.A.Puram, Chennai - 28.
Ph: 4618762, 4618763 Fax: (044) 4616311

## ஒரு டம்ளர் உண்மை!

"எங்கள் வீட்டில் உள்ள பழைய பொருள்களை நான் சுத்தம் செய்து கொண்டிருந்தேன். அப்போது ஓர் அங்குல உயரத்தில் ஒரு சிறிய டம்ளர் இருப்பதைப் பார்த்தேன். அதுகுறித்து எனது தாயாரிடம் கேட்டபோது அவர் பதில் சொல்லவில்லை.

எனது தந்தையிடம் சென்று அந்த வித்தியாசமான குட்டி டம்ளரை காட்டினேன். அவருக்கும் அது என்னவென்று தெரியவில்லை. உடனே அவர் எனது தாயார் லலிதாவை அழைத்து விவரம் கேட்டார்.

அப்போது என் தாய், "நீங்கள் விடுதலைப் போராட்டத்தில் சிறைக்குச் செல்லும்போது ஒரு முறை என்னிடம், 'உடல் நலன் கருதி தினமும் இரண்டு டம்ளர் பால் சாப்பிட வேண்டும்' என வாக்குறுதி வாங்கினீர்கள். ஆனால் இரண்டு டம்ளர் பால் வாங்கிக் குடிக்கும் அளவுக்கு அப்போது பணவசதியில்லை.

எனவே, பல்வேறு கடைகளுக்குச் சென்று சிறிய டம்ளர் விற்பனையாகிறதா எனத் தேடினேன். எங்கும் கிடைக்கவில்லை. ஒரு கட்டத்தில் எனது வளையலை விற்று இரண்டு சிறிய டம்ளர்களைச் செய்ய ஒரு கடைக்காரரை அணுகினேன். ஆனால், கடைக்காரர் அதை வாங்க மறுத்து, இலவசமாகவே இந்தச் சிறிய டம்ளரைச் செய்து கொடுத்தார். இதுதான் நான் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்ற உதவியது" எனத் தெரிவித்தார்.

எந்த சம்பவத்திற்கும் கண் கலங்காத எனது தந்தை அன்று தான் கண் கலங்கினார்!

*- தனது தந்தை முன்னாள் பிரதமர் லால்பகதூர் சாஸ்திரி பற்றி மதுரையில் நடந்த ஒரு கூட்டத்தில் சுனில் சாஸ்திரி பேசியது.*

**- கோவி. இராஜேந்திரன்**

## காஸ்ட்லி மறதி!

மும்பை முனிசிபல் கார்ப்பரேஷன் அதிகாரிகளின் 'சிறிய' மறதியால் 32 ஏழை மாணவர்கள், வெளிநாடு சென்று மேல் படிப்பு படிக்கும் வாய்ப்பை இழந்துள்ளனர். 1968ம் ஆண்டில், ஜெர்மனியிலுள்ள 'ஸ்டட்கார்ட்' நகர மேயர், ஆண்டு தோறும் திறமைமிக்க, ஆனால் ஏழ்மையில் வாடும் ஒரு மாணவருக்கு மேல் படிப்புக்காக, சுமார் 4.3 லட்ச ரூபாய் உதவி அளிப்பதாக அறிவித்தார். உலகின் பல நகரங்கள், தத்தமது நாடுகளின் நல்லுறவுக்காக இவ்வாறு செய்வது வழக்கம்.

இது சம்பந்தமான பழைய கோப்பு, தவறுதலாக எங்கோ வைக்கப்பட்டு, அதிகாரிகள் அதை மறந்தே போய்விட்டனர். 32 ஆண்டுகளுக்குப் பிறகு இப்போது அந்தக் கோப்பு கண்ணில்பட, செய்வதறியாது விழிக்கும் மும்பை கார்ப்பரேஷன் அதிகாரிகள் அதற்கு உயிரூட்ட முடியுமா? என்று யோசிக்கின்றனராம். ரொம்ப 'காஸ்ட்லி'யான மறதி!

*- ஆர். மார்க்கண்டன்*








## வியட்நாம் விந்தை!

உஹாத் மின் என்ற புத்த மத துறவியின் முது மக்கள் தாழி (மம்மி) வியட்நாம் நாட்டில் உள்ளது. வியட்நாம் விஞ்ஞானிகளின் கருத்துப்படி, உலகில் உள்ள முதுமக்கள் தாழிகளிலேயே இது அதிசயமானது. இதன் உடல் உறுப்புகள் அனைத்தும் (மூளை, இதயம், கல்லீரல்) முழுமையாக இன்று வரை உள்ளது ஆச்சர்யத்தைத் தருகிறது. உருவமும் சிதையாமல் அப்படியே இருக்கிறது.

- ஜெகநாதன், நெய்வேலி.

## 'பீடா' கடா!

ஆமதாபாத்தில் வஸ்த்ராபூர் என்ற இடத்தில் பஸ் நிலையம் அருகே ஒரு பான் பீடா கடை உள்ளது. இதன் அருகில் ஒரு பெரிய செம்மறி ஆட்டுக் கடா எப்பொழுதும் படுத்திருக்கும்.

ஒரு நாள் தற்செயலாக ஒருவர் கடைக்காரர் கொடுத்த பீடாவை வாங்கும்பொழுது, அது தவறுதலாகக் கீழே விழ, ஆட்டுக்கடா அதை ருசி பார்த்துவிட்டது. அன்று முதல் அந்த கடைக்குப் பீடா வாங்க வருபவர்களிடம் கொம்பால் உரசி தனக்கும் பீடா வாங்கிக் கொடுக்கும்படி சமிக்ஞையில் கேட்கிறது! ஒரு நாளைக்கு இந்த ஆடு எவ்வளவு பீடா சாப்பிடும் என்பதற்குக் கணக்கே கிடையாது.

ஆனால், இதுக்குப் பிடிக்காத ஒரு விஷயமும் உண்டு! யாராவது 'தண்ணி' போட்டுவிட்டுக் கடையருகில் வந்தால், இதற்குத் தெரிந்துவிடும்... அவர்களை அந்த 'ஏரியா'விலிருந்தே வெகு தூரம் கொம்பால் முட்டி முட்டி விரட்டிய பிறகே கடைக்குத் திரும்பும்!

- அகமதாபாத் பாண்டு

## நிஜமாகவா...?

நியூயார்க்கைச் சேர்ந்த டாக்டர் கோல்டு ''ஸ்ட்ரெயின் என்பவர் பொய் பற்றி ஆராய்ந்து கருத்து தெரிவித்துள்ளார். இக்காலத்தில் பொய் பேசாதவர்களே இல்லை. ஆனால் பெரும்பாலான பொய்கள் பிறரை மகிழ வைப்பதற்காகச் சொல்லப்படும் ஆபத்தற்ற பொய்களே'' என்கிறார் இவர். 'இன்றைய உலகில் அதிகம் பொய் பேசுகிறவர்கள் எழுத்தாளர்கள், கார் விற்பனையாளர்கள், நடிகர்கள், அரசியல்வாதிகள் ஆகியோர்தான். சிற்பிகள், என்ஜினியர்கள், விஞ்ஞானிகள் ஆகியோர் அபூர்வமாய்ப் பொய் பேசுகிறவர்கள்' என்கிறார்.

- கோபி. ஜி.கே.எஸ். மூர்த்தி



# நீங்கள் கேட்டவை - தராசு

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம் - 2

? விடுதலைச் சிறுத்தைகள் கிளர்ச்சியால் தமிழகத்தில் அறுபது பஸ்கள் உடைக்கப் பட்டது பற்றி...?

! வன்முறையால் பஸ்களை உடைக்கலாம், மனங்களைக் கவர முடியாது. மக்களைக் கவர பாலிடிவ் அணுகுமுறைதான் உதவும் என் பதைத் தலைமை புரிந்து கொண்டால்தான் எதையேனும் உருப்படியாகச் சாதிக்க முடியும்.

● கு. கணேசன், பனங்கோட்டூர்

? 'இந்தியா, பாகிஸ்தான், வங்கதேசம் ஆகிய மூன்று நாடுகளுமே ஒரே கருவறையில் உருவான குழந்தைகள். ஆகவே பாகிஸ்தான் நல்ல நிலையில், சீருடனும் சிறப்புடனும் திகழ வேண்டும் என்பதே எங்கள் விருப்பம்...' என்று ஜஸ்வந்த் சிங் கூறியிருப்பது பற்றி...?

! ஏற்கெனவே ஏற்படுத்திய ரணத்துக்கு இப்போது களிம்பு தடவுகிறார்.

● கருப்பம்புலம் சித்திரவேலு, நெய் விளக்கு

? சிறையிலுள்ள முஸ்லிம் தீவிரவாதிகளை சித்திரவதைக்குள்ளாக்கியதாகக் கூறும் குற்றச்சாட்டின் மூலம் கலைஞரை 'ஜெ' பழி வாங்கத் துடிப்பதாகக் குறை சொல்லி யிருக்கிறாரே சோ...?

! காலம் கடந்த ஞானோதயம்!

● மு. அப்துல் அஜீஸ், வானூர்

? கடற்கரையோரம் செல்லும்போது மனத்தில் பொதுவாக என்ன தோன்றும்...?

! அலைகள் மாதிரி முயற்சி செய்து கொண்டே இருக்கத் தோன்றும்.

● எஸ். கிருஷ்ணமூர்த்தி, சென்னை - 33

? மேயர் ஸ்டாலின் ஆணையை போலீஸ் காவலர்கள் அமுல்படுத்த மறுத்தார் களாமே..? இது எதைக் காட்டுகிறது?

! ரிமோட் இயங்குவதை!

● ஏ.எம்.பழனிசாமி, சிங்காநல்லூர்

? ஜனாதிபதி கையெழுத்து போடும் மசோதாவில் நாற்பது பிழைகள் இருந்ததற்கு யார் பொறுப்பு...?

! அரசாங்க காரியம் என்பதால் எல் லோருமே கை கழுவிக் கொள்ளலாம். ஆனால், பிழைகளோடு ஜனாதிபதி கையெழுத்திட்டு விட்டதால் திருத்த முடியாது என்கிற அபத்தத்தையாவது மாற்றி, திருத்தங்களை நிறைவேற்றட்டும்.

● எஸ்.ஈ.தாஸ், சென்னை - 12

? வெறும் விளம்பரங்களினால் மட்டும் பொருள் களின் விற்பனையை உயர்த்திவிட முடியுமா..?

! முடியும் - விளம் பரங்களே வித்தைகளாகி மூளைச் சலவை செய்கிறபோது!



• கன-நயம்!

● சு. கந்தையா, நாகர்கோயில்

? பாராட்டும்படி ஜெயலலிதா என்ன செய்துள்ளார்..?

! 'குப்புற விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை' என்று இருந்துவிடாமல் நாயுடு விடம் கிருஷ்ணா வாட்டர் கேட்க ஏற்பாடு செய்கிறாரே!...

● என். சம்பத், பொள்ளாச்சி - 2

? மறைந்த இசையமைப்பாளர் கே.வி. மகாதேவன் பற்றி..?

! கர்நாடக சங்கீத ராகங்களைப் பயன் படுத்தித் திரைப் பாடல்களுக்குக் கனமும் நயமும் சேர்த்தவர். உதாரணம் - 'மறைந் திருந்தே பார்க்கும்...' (ஷண்முகப்ரியா), 'அமுதும் தேனும் எதற்கு...' (கல்யாணி), 'ஏரிக் கரையின் மேலே...' (ஆரபி).

● கே.கே. ரவிகாந்த், காட்டுப்புத்தூர்

? தொட்டில் குழந்தை திட்டத்தின் அடிப் படை என்னவாக இருக்க முடியும்..?

! தும்பை விட்டுவிட்டு வாலைப் பிடிப்பது தான் அடிப்படை! திட்டத்துக்குத் தன்னார்வ அமைப்புகளிடையே வரவேற்பு இல்லை! பெண் சிசுக் கொலையை இத்திட்டத்தால் தடுக்கவோ குறைக்கவோ முடியாது என்பது ஏற்கெனவே நிரூபணமாகியுள்ளது. ஆறு - ஏழு ஆண்டுகளுக்கு முன் பேசியதையேதான் இன்றைக்கும் சேலம் பகுதி பெண்கள் சொல் கிறார்கள் : "ஒம்பது பிள்ளைகளை யமனுக்குக் கொடுத்தாலும் கொடுப்போமேயொழிய ஒரு குழந்தையைக்கூட தொட்டிலுக்குத் தர மாட்டோம்!"

● எஸ். மாலதி, முசிறி

? 'மூன்றாவது முழங்கால் இல்லாததால்

## பாராட்டும்படி என்ன செய்தார் ஜெ?

மூன்றாவது முறை வரமாட்டேன்' என்று பிரதமர் சிரிப்பு 'மூட்'டுகிறாரே?

! வேதனைக்கிடையிலும் நிஜமாகவே நல்ல ஜோக்.

● அ. ராஜா ரஹ்மான், கம்பம்

? ஆளுங்கட்சியினர் பேட்டிங் செய்யும் போது, எதிர்க்கட்சியினர் பௌலிங் செய்யாமல் பிட்சில் படுத்துக் கொள்ளக் கூடாது என்று ப. சிதம்பரம் அறிவித்துள்ளது குறித்து...?

❐ ரூ.50 பரிசு பெறுபவர் :
**ஆர்.ராமசுப்ரமணியன்,**
ராஜம்மாள் இல்லம்,
20, வி.என்.ஆர்.நகர், முதல் தெரு,
வடவள்ளி அஞ்சல் - 641 041.

★ ரூ.25 பரிசு பெறுபவர் :
**வத்சலா இளங்கோவன்,**
தேவதரிசனம் (அஞ்சல்),
இடையூர் (வழி), காளைக்காரன்வெளி,
நாகை மாவட்டம்.

• 'மூட்'டிய சிரிப்பு

• கிருஷ்ணா கிருஷ்ணா!

• டூ லேட்!

• 'பாக்' மருந்து!

• 'ஹௌ இஸ் தாட்!'

• எப்படி ஏற்பதாம்!

! ரொம்ப சரி. ஆனால் ஆளுங்கட்சியினர் பேட்டிங் செய்வதற்குப் பதில் பாக்ஸிங் அல்லவா செய்கிறார்கள்!

● ஆர்.ஆர். சாமி, திருவண்ணாமலை

? கவலைகள் தொலைய என்ன வழி...?

! கவலைகளைத் தொலைப்பது தான்!

● ஆர். ராமசுப்ரமணியன், வடவள்ளி ❐

? ஒரு புறம் முந்தைய ஆட்சியில் பணி அமர்த்தப்பட்ட நாட்டு நலப் பணியாளர்கள் உழவர் சந்தை ஊழியர்கள் முதலானோர் ஒட்டுமொத்தப் பணி நீக்கம். மறுபக்கம் தற்போதைய முதல்வரிடம் பெட்டிஷன் கொடுத்தவர்களுக்கு உடனடி வேலை (கணவன் மனைவி இருவருக்கும்!), தவிர 10,000 ரூபாய் நிவாரணம்... இது வேடிக்கையா? வேதனையா...?

! இது அரசியல், 'ஜெ' ஸ்டைல்! அதில் இதுபோன்ற எத்தனையோ வேடிக்கை கலந்த வேதனைகள்.

● வத்சலா இளங்கோவன், காளைக்காரன்வெளி ★

? அயல்நாட்டவரான அன்னை தெரசாவை ஏற்றுக் கொண்ட நாம் ஏன் சோனியா காந்தியைப் பிரதமராக்குவதற்கு யோசிக்கிறோம்...?

! அன்னை தெரஸாவின் தன்னலமற்ற பணிகளுக்காக அவரைப் போற்றி வணங்குகிறோம். ஆனால், பிரதமர் ஆக்கிவிடவில்லையே! அதேபோல் நேரு குடும்பத்து மருமகளாக வந்து சேர்ந்த சோனியாவுக்கு உரிய மதிப்பு கொடுக்கலாம், மரியாதை செலுத்தலாம், கட்சித் தலைவராகக்கூட ஏற்கலாம்... ஆனால், பிரதமராக...?

சாலை ஒன்றும் வெல்வெட்டாக இல்லை. இருக்கவும் வாய்ப்பில்லை. தண்ணீர் லாரிகள் செல்லும் பாதை என்றாலும் ராம்ஷேகரின் பண்பட்ட காரோட்டும் திறமையால் குறிப்பிடத்தக்க குலுக்கல்கள் எதுவுமின்றி வண்டி நகர்ந்து கொண்டிருந்தது. சாலையின் சோடியம் விளக்குகள் ஒப்புக்கு ஒளியை உமிழ்ந்து கொண்டிருந்தன. கடைகளில் சில இந்த நள்ளிரவு நேரத்திலும் மூடப்படாமல் இருந்ததால் மொத்தத்தில் வெளிச்சம் கிடைத்துக் கொண்டிருந்தது.

வழியில் ஒரு ஹோட்டல் வாசலில் காரை நிறுத்தினார் ராம்ஷேகர். "காப்பி குடிச்சுட்டுப் போகலாம் ப்ரியா" என்றபடி இறங்கினார்.

பத்தே நிமிடங்களில் வீடு வந்து விடும். நள்ளிரவானாலும் கணவரின் வருகைக்காகக் காத்திருக்கும் மாமி 'குடிக்க ஏதாவது தரட்டுமா?' என்ற கேள்வியைக் கேட்காமல் இருக்கப் போவதில்லை. தவிர காப்பி என்பது அவருக்கொன்றும் அத்தியாவசியமானதல்ல. இருந்தும் அவர் ஹோட்டலை நாடுகிறார் என்றால் அதற்கு வேறேதோ காரணம் இருக்க வேண்டும். சிவப்ரியா மறுவார்த்தை பேசாமல் அவரைத் தொடர்ந்தாள்.

காலை வேலைப்பாடு நிரம்பிய 'ட்ரே'வை மேஜையில் வைத்துவிட்டு நகர்ந்தார் பேரர். சூடு பறக்கும் பால் இரு கோப்பைகளிலும், எவர்சில்வர் ஜக்கில் டிகாக்ஷனும், சர்க்கரைக் கட்டிகள் ஒரு கிண்ணத்திலும் இருந்தன. சிவப்ரியா அவற்றை இருவருக்கும் தேவைப்பட்ட சரியான விகிதத்தில் கலக்கத் தொடங்கினாள்.

"அனு விஷயம் என்னை ரொம்ப

13

அருண் சரண்யா

அலைக்கழிக்குது ப்ரியா."

சிவப்ரியாவுக்குக் கவலை ஏற்பட்டது. "என்ன டாக்டர், அவளுக்குத் திரும்பவும் ஏதாவது?"

"இல்லை. இன்னைக்குக் கிளினிக்கிலே அதே வியாதி இருக்கிற ஒரு பெண் அட்மிட் ஆனாள். உடனே அனுவின் ஞாபகம் ரொம்ப வந்துடுச்சு."

பத்தாவது மாடியிலிருந்து கீழே விழுந்து மண்டை ஓடு வெடித்து ஒருவனை வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்த போது கூடச் சிறிதும் பதற்றப்படாமல், அதே சமயம் விரைவாக முதலுதவி செய்து அவனைப் பிழைக்க வைத்தவர்தான்... ஆனால் பெற்ற பெண்ணைப் பொறுத்தவரை, அவள் மீது தூசி படிந்தாலும் துடிப்பு ஏற்படுகிறது. பாசம்! ஒரே மகள். தாமதமான திருமணத்திற்குப் பிறகு தாமதமாகப் பிறந்தவள். தவிர அவள் மீது விழுந்திருப்பதும் தூசு அல்லவே!

'அனுவுக்கு இந்த விஷயத்தைச் சொல்விடறது நல்லது இல்லையா? உங்களுக்குச் சங்கடம்னா நான் வேணா பக்குவமா இதை எடுத்துச் சொல்லட்டுமா?'

'வேண்டாம். வெறிபிடிச்ச மாதிரி நடந்து ஊரைக் கூட்டிடுவா'' என்றபடி வாய்க்கருகே எடுத்துச் சென்ற கோப்பையைக் கீழே வைத்தார் ராம்ஷேகர்.

"சாரி டாக்டர். உங்க யூகம் தப்புன்னு தோணுது. அனு அந்த மாதிரி டைப் இல்லே."

"நான் அனுவைச் சொல்லல்லே. அவ அம்மாவைச் சொன்னேன்."

"யாரு மாமியா?" இப்போதும் சிவப்ரியாவின் குரலில் ஏற்றுக் கொள்ளாத தன்மை எட்டிப் பார்த்தது என்றாலும் அதற்கு மேல் அவள் அது குறித்து விவாதிக்கவில்லை.

"என்னுடைய கல்யாணத்தைப் பற்றி உனக்கு என்ன தெரியும்?"

"முதல்லே காப்பியைக் குடியுங்க டாக்டர். எதுக்கு கப்பை எடுத்து எடுத்துக் குடிக்காமயே வக்கறீங்க?" என்று இடைவெளி கொடுத்து, அவர் காப்பியை உறிஞ்சிய பிறகு பேச்சைத் தொடர்ந்தாள். ''அவங்க கல்யாணத்துக்கு முன்னேயே உங்களுக்கு உறவுன்னு தெரியும். பெரியவங்க பார்த்துக் கட்டாயப்படுத்தி நடத்தியிருக்கலாம்."

'கட்டாயப்படுத்தி' என்ற வார்த்தை தன்னையும் மீறி வெளிவந்தது குறித்து தன்னையே நொந்து கொண்டாள் சிவப்ரியா. அந்த வார்த்தை ராம்ஷேகரின் காதில் விழாது போயிருக்கக் கூடாதோ...

காதுகளில் மட்டுமல்ல, மனத்திலும் அந்த வார்த்தை ஆழமாகவே விழுந்ததற்கு உடனடி ஆதாரம் கிடைத்தது. "சொந்தத்திலே நடக்கும் கல்யாணங்கள்தான் பெரும்பாலும் காதல் கல்யாணமாக இருக்கும். சின்ன வயசிலேயிருந்தே காதலிச்சிருப்பாங்க. 'அனுவின் அம்மா ஸ்கூல் படிப்பைத் தாண்டாததாலே நான் அவளை விரும்பிக் கல்யாணம் செய்துக்கிட்டிருக்க மாட்டேன். வீட்டுப் பெரியவங்க அவளை என் தலை



யிலே கட்டியிருப்பாங்க'ன்னு நினைக்கிறே இல்லையா?"

சிவப்ரியா பதறினாள். "அப்படியில்லே..." சற்றே தயங்கிவிட்டு, தன் எண்ணத்தை வெளிப்படுத்தினாள். "ஒரு டாக்டரா இருக்கற உங்களுக்கு நெருங்கிய உறவிலே கல்யாணம் செய்துக்கக் கூடாதுன்னு தெரியாம இருக்காது. அப்படியும் செய்துக்கிட்டிருக்கீங்கன்னா அது வீட்டுப் பெரியவங்க பேச்சைத் தட்டக் கூடாதுன்றதாலே இருக்கலாம்னு நினைச்சேன்." பதிலளிக்கும் போதே இப்போது எதற்கு இந்தத் தேவையற்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறோம் என்ற ஆயாச வியப்பும் எழுந்தது.

ராம்ஷேகர் முகத்தில் புன்னகை விரிந்தது. "நீயும் ஒரு டாக்டர். உன் வாக்கியத்திலே அனுமானம் மட்டுமில்லே. குற்றச்சாட்டும் இருக்கு. குடும்ப நலத்துறை அமைச்சராக, சில சமயம் ஏழெட்டைப் பெத்தவங்க அமைவாங்களே, அந்த மாதிரி தான் நானும் இந்த விஷயத்திலே. ஆனா என்ன செய்ய? மருத்துவ அறிவை விட அவ என் மேலே வச்சிருந்த வெறித்தனமான காதல் எனக்கு வேறே சாய்ஸைக் கொடுக்காம போயிடுச்சு. எப்படியோ அவ காதல்

அரசியலைக்
குடைந்து கொண்டிருக்கிறது
அரிசியில் வண்டு.
— பொன். குமார்

● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ● ●

ஜெயிச்சுடுச்சு. இத்தனை வருஷ திருமண வாழ்க்கையிலே அவ வச்சிருக்கிற அதே பாசம் எனக்கும் அவ மேலே இருக்கு...''

திடீரென்று ராம்ஷேகர் எதையோ நினைத்துத் தடுமாறி வேகமாகத் தம் பேச்சை நிறுத்திக்கொண்டார். சிவப்ரியாவுக்குப் புரிந்தது. 'காதலில் தோல்வியைச் சந்தித்த இந்தப் பெண்ணிடம் போய் இதையெல்லாம் பேசுகிறோமே. அவள் மனது நோகக்கூடுமே' என்பதாகத்தான் இருக்க வேண்டும்.

''அனு விஷயத்திலே நான் என்ன நினைக்கிறேன்னா...'' ராம்ஷேகர் மேலும் தொடருவதற்குள் அவரது செல்போன் ஒலித்தது.

"நான்தான். அப்படியா? என் கூடத்தான் ப்ரியா இருக்கா. இதோ உடனே வரோம். சாப்பிடலேன்னா கட்டாயப்படுத்தாதே. வரும்போது நான் பழங்கள் வாங்கிட்டு வரேன். அதைத் தரலாம்.''

பேரரை அழைத்து 'பில்' என்றார். பிறகு "ப்ரியா, உங்கம்மா வந்திருக்காங்களாம்."

சிவப்ரியாவின் கண்கள் சட்டென்று நிறைந்தன. அம்மா! 'இனி உன் முகத்திலேயே முழிக்க மாட்டேன்' என்று கத்திய அம்மா, தான் அடுத்த நாளிலிருந்து க்ளினிக்கில் பணிபுரிய இருக்கும் வேளையில், ஆசியளிக்கும் விதத்தில் வந்து சேர்ந்திருக்கிறாள்.

'பில்'லுக்கான பணத்தைக் கொடுத்த பின்னும் பேரர் தயங்கி நின்று கொண்டிருந்தான். 'பாக்கியை நீயே வச்சுக்கப்பா' என்றார் ராம்ஷேகர். 'அதில்லீங்க, ஆட்டோகிராஃப் வேணும்' என்றவாறே தன் பாக்கெட்டிலிருந்த ஒரு கசங்கிய சிறு நோட்டுப் புத்தகத்தை எடுத்து நீட்டினான்.

"அட நம்ம நாட்டிலே டாக்டருங்களுக்கு இவ்வளவு செல்வாக்கு வந்துடுச்சா" என்று ராம்ஷேகர் வாய்விட்டுச் சிரித்தபடி தம் பேனாவை எடுக்க, நிஜத்தைப் புரிந்து கொண்ட சிவப்ரியா, பெரிதும் சங்கடப்பட்டாள்.

"அம்மாவோட கையெழுத்துங்க. ரொம்ப அருமையா நடிச்சிருந்தாங்க. முதல் படம்னே நம்ப முடியல்லீங்க."

நோட்டை அவள் புறமாக ராம்ஷேகர் நீட்ட, அதில் கையெழுத்திட்டபோது சிவப்ரியாவின் கைகள் நடுங்கின.

"இவ்வளவு நேரம் என் கூடத்தான் பேசிக்கிட்டிருந்தாங்க. இப்போ பின் போர்ஷனில் இருக்காங்க உங்கம்மா."

வேகமாகக் கிளம்பிய சிவப்ரியாவை அழைத்து "இதை உங்கம்மாவுக்குக் கொடு" என்று வழியில் வாங்கிய பழங்கள் அடங்கிய பையை நீட்டினார் ராம்ஷேகர்.

நடையை விட வேகமாக எண்ணங்கள். இப்போது கோபம் வடிந்திருக்குமா? வந்தது பாசத்தினாலா அல்லது வசவு வார்த்தைகள் மீதமுள்ளனவா?

'ஒருவேளை பல வருடங்களுக்கு முன் குடும்பத்தைத் துறந்து தலைமறைவான அப்பா வந்து விட்டாரோ?' என்ற யோசனை கூட எட்டிப் பார்க்க 'சே ஒரே ஒரு தமிழ் சினிமாவில் நடித்ததற்கே இப்படியெல்லாம் தோன்றுகிறதே' என்று அதை அழித்தாள்.

சிவப்ரியா உள்ளே நுழைந்த ஒலி கேட்டு அவள் அம்மா தலையை நிமிர்த்திப் பார்த்தாள்.

அம்மா ஒடுங்கிப் போயிருந்தாள். அறையிலிருந்த நாற்காலிகளையெல்லாம் விட்டு அவள் தரையில் அமர்ந்திருந்தாள். அதுவும் அறையின் மூலையில் சுவரில் சாய்ந்து அவள் உட்கார்ந்திருந்தது சட்டென்று பரிதாபத்தை வரவழைத்தது.

கைப்பையை நாற்காலி மீது வீசியெறிந்து விட்டு, சிவப்ரியா அவள் மடியில் சாய்ந்து கொண்டாள். ஆறுதலாக இருந்தது. அவள் ஏதோ குமுறி அழுவதாக எண்ணிக் கொண்டு, "இப்போ அழுது என்ன செய்ய? சரி விடு. சினிமா முடிஞ்சதா? இல்லை அடுத்தது அடுத்ததுன்னு அதையே நிரந்தரமாக்கிக்கப் போறியா?"

''ஒரே படம்தான்னு உன்கிட்டே சொன்னேனேம்மா. நாளையிலேயிருந்து...''

அவளை இடைமறித்தாள் அம்மா. ''நாளைக்குக் கார்த்தாலே என்னோட புறப்படு. நம்ம ஊருக்கே போய்ச் சேரலாம். நான் சில திட்டங்கள் வச்சிருக்கேன்'' என்றாள்.

(தொடரும்)




பெற்றோரில் ஒருவராவது படித்திருந்தால்தான் குழந்தைகளுக்கு அட்மிஷன் என்று ஏடாகூட ரூல்ஸ் வைத்திருக்கும் பள்ளிக்கூடங்களுக்கு, சவுக்கடி கொடுத்திருக்கிறார் இயக்குனர் சாய்சுரேஷ்.

ஜவுளிக்கடை ஊழியர் சத்யராஜும், அவரது ஆசை மனைவி ரம்பாவும் கைநாட்டு கப்பிள். மகனையாவது படிக்க வைத்து விட வேண்டும் என்று பகீரத முயற்சியில் இறங்கும் சத்யராஜ், பட்டதாரி கௌசல்யாவை, தம் மனைவியென்று பொய் சொல்லி, பையனுக்கு அட்மிஷன் வாங்கி விடுகிறார். இந்த நாடகம் அம்பலமாகி, ரம்பா, விவாகரத்துக்குப் போய்விட, கௌசல்யாவைக் காதலன் கைவிட, மண்டையைப் பிய்த்துக் கொள்ளும் சத்யராஜ் இந்தச் சிக்கல்களை எப்படிச் சமாளிக்கிறார் என்பதை, கலக்கலான காமெடியில் குழப்பமில்லாத திரைக்கதை மூலம் சொல்லியிருக்கிறார்கள்.

எப்படியாவது மகனைப் படிக்க வைத்து விட வேண்டும் என்று துடிப்பை வெளிப்படுத்தும் ஜவுளிக்கடை சத்யராஜ், கவுண்டமணியோடு கூட்டணி அமைத்து கலகலப்பூட்டும் காமெடி சத்யராஜ், படிக் காததால் சொத்துக்களைப் பறி கொடுத்துவிட்டு, பரிதாபத்தை அள்ளிக் கொள்ளும் குங்குமப் பொட்டு கவுண்டராக வரும் ப்ளாஷ்பேக் சத்யராஜ் என்று நடிப்பில் முப்பரிமாணம் காட்டும் சத்யராஜின் நடிப்பில் கோணங்கித்தனங்கள் குறைந்திருப்பது ஆறுதல்.





ஆனந்தம் படத்தைத் தொடர்ந்து கொஞ்சல், கோபம், துருதுருப்பு எல்லாம் கலந்த அசல் கிராமத்துப் பெண்ணாக ரம்பா ராஜ்யம் நடத்தியிருக்கிறார்.

சின்ன சாமியாக வந்து சிரிப்பு மூட்டும் கவுண்டமணியின் டயலாக் காமெடி நீண்ட இடைவெளிக்குப் பிறகு கலக்கல் ரகம். கரண், கௌசல்யா பாத்திரங்களுக்கு முக்கியத்துவம் இருந்தும், செயற்கையான சினிமாத் தனத்துக்குள் அவர்களை முடக்கி விடுகிறது, இடைவேளைக்குப் பிறகு வரும் செல்லரித்துப் போன சென்டிமெண்ட் ட்ரீட்மெண்ட்.

சிற்பியின் இசை, படத்திற்கு உபகாரமோ உபத்திரவமோ செய்யாத தூங்குமூஞ்சி ரகம். ஒரு சமூகப் பிரச்னையைக் காமெடி கலந்து சொன்னாலும் அதன் வீரியம் சிறிதும் குறையாமல் சொல்ல வேண்டும் என்ற முயற்சிக்கு ஐம்பது சதவிகிதம் வெற்றி.

● ஆவரேஜ்

— விஷ்வல்தாசன்

"எந்தக் காரியத்தையும் கால தாமதம் பண்ணாம சட்டுபுட்டுன்னு முடிக்கணும்னு பையனிடம் சொன்னது ரொம்ப தப்பாப் போச்சு."

"எப்படி?"

"காதலிச்ச பெண்ணை டபக்குனு திருமணம் செய்துகிட்டு வந்து ஆசீர்வாதம் செய்யுங்கன்னு கேட்கிறான்."

— இரா. கணேசன்



"வயித்தை வச்சு இடிக்கிறீங்களே, கொஞ்சம் தள்ளி நில்லுங்க!"

"ஹி . . . ஹி . . . 'தொந்தி'ரவுக்கு மன்னியுங்க ஸார்!"

— நெ. இராமன்



# 'தொந்தி'ரவுக்கு மன்னியுங்க!

*சித்ரகுப்தன்: ஓர்க்லோடு எக்கச்சக்கமா ஆகிப் போச்சு. ஏட்டுக் கணக்கு எல்லாம் இனி முடியாது. நல்ல கம்ப்யூட்டர் வாங்கி புரோக்கிராம் பண்ணுங்க!*

— *சோழபுரம் யாக்கோபு*





"இந்தக் காலத்துப் பையன் இல்லியா! அதான் தலைகால் புரியாம ஆடறான்."

— என். தாமோதரன்

"பொண்ணு, மாப்பிள்ளை ரெண்டு பேருமே எனக்குச் சொந்தம்."

"அதுக்காக ரெண்டு ஜோடி செருப்பு எடுக்கிறது ரொம்ப அநியாயம்ங்க!"

— சீர்காழி ரேவதி



"யோவ் 504... இந்த ஆளை ஏன்யா கைது செஞ்சு கூட்டியாந்திருக்கே...?"

"மெரினாவிலே நின்னு உதயசூரியனை ரசிச்சுக்கிட்டிருந்தார் சார்!"

— புளியரை கணேசன்



"நான் விரும்புற பெண்ணைக் கல்யாணம் செய்து வைக்கப் போறீங்களா இல்லையா?"

"போடா போ! பெரிய ராஜ பரம்பரைன்னு நினைப்போ!"

— எஸ். மோகன்

துரியோதனன், துச்சாதனன், கர்ணன், சகுனி - இவர்கள் நான்கு பேரும் துஷ்ட சதுஷ்டயர்கள்! சதுஷ்டயர்கள் என்றால் நான்கு பேர். அந்த நான்கு பேரும் ஹஸ்தினாபுரம் சபையிலே உட்கார்ந்திருக்கிறார்கள். ரொம்ப தீவிரம்! பகவான் கிருஷ்ணன் உள்ளே வரும்போது யாரும் எழுந்திருக்கக் கூடாது என்று பிடிவாதம்.

ஆனால், என்ன நடந்தது...?

பகவான் எழுந்தருள்கிறபோது அவனுடைய திவ்ய வடிவழகைப் பார்த்த மஹரிஷிகளெல்லாருமே 'ஸ்வாஹா' என்று ஆகுதி விடுவதற்குத் தூக்கிய கையை அப்படியே இறக்காமல் நிறுத்திவிட்டார்கள்!

வேறு சில பேர் ஜபம் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அந்த ஜபமும் அப்படியே நின்று போய்விட்டது.

பிரும்மத்தை அனுஷ்டானம் பண்ணுகிறார்கள் பலர். அதுவும் நின்று போய் விடுகிறது.

பகவானைப் பார்த்தவுடனே அத்தனையும் நின்று போய்விடுகிறது. மகான்களாலேயே எதையும் மேலே பண்ண முடியவில்லை.

யோசித்துப் பார்க்க வேண்டும். இதெல்லாம் எதற்காகப் பண்ணுகிறோம்...? பகவானுக்காகத்தானே?

சாத்தியமே கை புகுந்த பிறகு சாதனம் எதற்கு?!

சாதனத்தினாலே சாத்தியம் கிட்டுகிறது. சாதிக்கப்பட வேண்டிய விஷயம் என்பது தான் 'சாத்யம்' எனப்படுவது. அதனைப் பெற்றுத் தரும் வழி அல்லது கருவிதான் சாதனம்.

யக்ஞமோ, ஹோமமோ, ஜபமோ தபமோ... இதெல்லாம் சாதனங்கள். ஆனால் அவை அடைவிக்கின்ற சாத்தியமான பகவானே எதிரே வந்து நிற்கிறான். அப்படி அவன் வந்து நின்ற பிற்பாடு சாதனங்கள் எல்லாம் நழுவிப் போய்விடும்.

அதனால்தான், ஹஸ்தினாபுரத்தில் மற்ற ரிஷிகளெல்லாம் அப்படியப்படியே நின்று போய்விட்டார்கள்!

சபையிலேயிருந்தவர்களின் நிலை என்ன...? அத்தனை பேரும் பகவானைப் பார்த்ததும் எழுந்து நிற்கிறார்கள்! எழுந்து நின்று சகுனி கேட்கிறார்:

''துரியோதனா, ஏன் நிற்கிறாய்...? உட்காரு!'' என்கிறார்.

''நீங்களும் நின்று கொண்டுதானே இருக்கிறீர்கள்!'' என்கிறான் துரியோதனன்! அதற்குப் பிறகுதான் உணர்கிறார்கள் - அவரவர் எழுந்து நின்றதைக்கூட தாங்கள் உணரவேயில்லை என்று.

பகவானின் திருமுகமண்டலத்தில் அவ்வளவு தேஜஸ்! பகவத் தேஜஸ் என்றால் அது சும்மாவா...!

'ஜ்வலதே! ஜ்வலதே! ஜ்வலதே!' என்பது அவன் மந்திரம்.

ஜ்வலத் பாலக சங்காசம் என்றார் ஈச்வர சம்ஹிதையிலே... அப்படியென்றால் என்ன அர்த்தம்...?

உயர்ந்த ரீதியிலே ஆயிரம் கோடி சூரியர்கள் ஒரு தடவை உதித்தால் அது என்ன சோபாய மானமாக, தேஜஸோடு இருக்குமோ, அதைக் காட்டிலும் மேம்பட்டவன் பரமாத்மா.

பகவானுடைய தேஜஸ் எப்பேர்ப்பட்ட உயர்ந்த பிரும்ம தேஜஸ்...? அந்த தேஜஸைத் தன்னுள்ளே அடக்கி வைத்துக் கொண்டிருக்கிறது காயத்ரி மந்திரம். அதனால்தான் இதை ஜபிக்கக்கூடியவர்கள் முகத்திலே, திருமுக மண்டலத்திலே விசேஷமான தேஜஸ் காணப்படுகிறது.

# குறையொன்றுமில்லை

இன்னொரு இடத்திலே சொல்கிறபோது, நமக்கு ஓஜஸ்ஸைக் கொடுப்பது காயத்ரி என்கிறது வேதம்.

ஓஜஸ் என்றால் என்ன...? சரீர பலம், இந்த்ரிய பலம் - இது அத்தனையையும் பூரணமாகக் கொடுக்கக் கூடியது காயத்ரி மந்திரம்தான்.

120 வருடம் பூரணமாய் வாழ்ந்தார்; பாஷ்யக்காரர் ராமானுஜர். அவர், அந்திம காலத்திலே, எழுந்திருக்க முடியாத நிலையிலேகூட எழுந்து, அந்தக் காலத்திலேயும் சந்தியாவந்தனம் பண்ணி, உபஸ்தானங்களெல்லாம் பண்ணினார்.

# 19

# முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சாரியார்



மகான்களுடைய அனுஷ்டானத்தை நாம் பார்க்க வேண்டும். அந்தத் தள்ளாத வயதிலேயும் எழுந்திருக்க முடியாவிட்டாலும், சரீரம் தளர்ந்த பொழுதும் சந்தியா காலத்திலே விடாமல் அனுஷ்டானம் பண்ண வேண்டும் என்று உயர்ந்த ரீதியிலே சிரமப்பட்டு அவர்கள் பண்ணினார்கள் என்றால், அந்த அனுஷ்டானம் எவ்வளவு முக்கியம்!

இஞ்சிமேட்டு அழகிய சிங்கர் நாற்பத்திரண்டாவது பட்டத்துக்குரியவர் - அவரும் இதே மாதிரி அனுஷ்டான பலம் பொருந்தியவர்.

உத்திராட நட்சத்திரம் ஸ்ரீமத் அழகிய சிங்கருக்கு.

'ஊர் ஓரத்தில் ஒரு காணியும் உத்திராட நட்சத்திரத்தில் ஒரு பிள்ளையும் இருந்தால் போதும்' என்று வசனம் உலகத்திலே.

ஊர் ஓரத்தில் ஒரு காணி நிலம் இருந்

# அருள்வாக்கு



தியானம், ஜபம், பூஜை, யக்ஞம், க்ஷேத்திராடனம் ஆகியவற்றைப் போலவே நம் தேசத்தில் நீண்ட காலமாக பகவந் நாமாக்களைக் கோஷ்டியாகப் பாடி பஜனை செய்கிற பழக்கமும் இருந்து வந்திருக்கிறது. இந்த ஜீவாத்மாவானது பரமாத்மாவுடன் தொடர்பு கொள்வதற்கு ஒரு பெரிய உபாயமாக நாம பஜனை தொன்றுதொட்டு தேசத்தில் அநுஷ்டிக்கப்பட்டு வந்திருக்கிறது. அநேகமாகக் கிராமம், நகரம் எல்லாவற்றிலும் பஜனை மடம், அல்லது பஜனைக் கூடம் என்றே ஒன்று காணப்படுவதிலிருந்து பஜனை பத்ததி நம் நாட்டில் எவ்வளவு செழிப்பாக இருந்திருக்கிறது என்று ஊகிக்கலாம். இந்தப் பஜனை மடங்களில் சனிக்கிழமை தோறும், ஏகாதசி தோறும் ஜனங்கள் எல்லோரும் சேர்ந்து பஜனை செய்வார்கள்.

கோயில்களில் பூஜையைப் பார்க்கிறோம்; தெய்வத்தைத் தியானிக்கிறோம். பஜனையிலோ நாமே வாய் விட்டுத் தெய்வத்தின் நாமங்களையும், குணங்களையும், லீலைகளையும் பாடி சுகவரபரமாக மனசை ஈடு படுத்துகிறோம். பலர் சேர்ந்து கொண்டு சமுதாய வாழ்க்கை அடிப்படையில் பக்தி செய்கிற சிறப்பு, பஜனைக்கு உண்டு. அவரவரும் ஆத்ம க்ஷேமத்தை அடைந்து, அதனாலேயே ஜீவகோடிகளுக்கு க்ஷேமத்தைத் தர வேண்டும் என்று, தனி மனிதர் அடிப்படையிலேயே ஹிந்து மதம் முக்கியமாக அமைந்திருந்தாலும் கோயில், உத்ஸவம், பஜனை இவற்றில் கூட்டு வழிபாட்டு முறையும் இருக்கிறது.

இன்னிசையுடனும், வாத்திய கோஷத்துடனும் செய்கிற பஜனை எல்லா உள்ளங்களையும் சுலபமாக இழுத்து பகவத் ஸ்மரணத்தில் செலுத்துகிறது. 'ரகுபதி ராகவ

தால்கூட போதுமாம்... அந்த ஊரை விட்டுப் புறப்படவே தோன்றாதாம் – இது பெரியவர்கள் வாக்கு.

யக்ஷ பிரச்னத்திலேகூட இதைக் காணலாம் – "எவனொருவன் சந்தோஷமாக இருக்கிறான்... சந்தோஷம் யாருக்கு...?" என்று தர்மபுத்திரரைப் பார்த்து யக்ஷன் கேட்கிறான். அதற்கு தர்மபுத்ரர் ரொம்ப அழகாக பதில் சொல்கிறார்.

**அப்ரவாஸி அன்ருணி**

தன் ஊரைவிட்டு எவன் ஒருவன் வெளியே போகாதவனோ, அவன் சந்தோஷமானவன்.

'அப்ரவாஸி' என்றால் வெளியூரில் போய் வாஸம் பண்ணுதல். அப்படிப் போகாமல் ஒருவன் தன்னுடைய கிராமத்திலேயே இருக்க வேண்டும். மத்தியானம் ஒரு மணிக்கு, கீரையைச் சுண்டி எளிமையாய்ச் சாப்பிடக் கூடியவன்தான் சந்தோஷமாயிருக்கக் கூடியவன். மீதி பேர் யாருக்குமே சந்தோஷமில்லை என்று சொல்லிவிட்டார் தர்மபுத்ரர்!

ஆனால் யக்ஷப்பிரச்னத்திலே சொல்லப்பட்ட பதில்படி நாம் வாழவில்லை; சிரமப்படுகிறோம். பூர்வத்திலே எல்லோருமே கிராமத்திலே இருந்தார்கள்; சந்தோஷமாக பூரணமாக இருந்தார்கள். இப்போது அதை விட்டுவிட்டு நாம் வெளியிலே வந்துவிட்டோம்; அதனால் எல்லாவற்றுக்குமே சிரமப்படுகிறோம்.

இந்த இஞ்சிமேட்டு அழகிய சிங்கர், அவ்வாறு எழுந்தருளியிருந்தார். உத்ராஷாடா நட்சத்திரத்தில் தோன்றிய மகான். உஞ்சவிருத்தி செய்து பிக்ஷாடனம் பண்ணினார். திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் அவரை ஆஸ்தான வித்வானாக இருக்கும்படி கேட்டார்கள்... அதை வேண்டாமென்று சொல்லிவிட்டு, ஸ்ரீமுஷ்ணம் என்கிற க்ஷேத்திரத்திலே அந்த பூவராக பெருமாள் சந்நிதியில் உஞ்சவிருத்தி

ராஜாராம்' 'ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே' என்பது போல் சுலபமான வார்த்தைகளை மதுரமான சங்கீதத்தோடு கலந்து செய்கிற பஜனையால் எளிதாகத் தெய்வத்தை நினைவு கொள்ள முடிகிறது.

பஜனைக் கூடம் என்ற ஓர் இடத்தில் அமர்ந்து பஜனை செய்வதோடு, நகர சங்கீர்த்தனம் செய்கிற பழக்கமும் உண்டு. வைகுண்ட ஏகாதசி போன்ற புண்ணிய காலங்களில் ஜனங்கள் எல்லோரும் பகவந்நாமாக்களைப் பஜனை செய்தபடி வீதி வீதியாகச் செல்வதுதான் நகர சங்கீர்த்தனம் எனப்படுவது. விசேஷமாக மார்கழி மாதத்தில் தினந்தோறும் அதி காலையில் இப்படி வீதி வீதியாகப் பஜனை செய்து ஊர் முழுதும் திவ்விய நாமங்களைப் பரப்புவதுண்டு.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

பண்ணினார். பீடாதிபதியாகி பல உயர்ந்த காரியங்களெல்லாமும் பண்ணினார்.

அப்பேர்ப்பட்ட மகானுடைய தேஜஸ், அவனுடைய அனுஷ்டானங்களையெல்லாம் நாம் பார்க்க வேண்டும். பக்கத்திலிருந்து பார்த்த மகான்கள் சிலரும் உண்டு. இப்போது எழுந்தருளியிருக்கும்படியான அழகிய சிங்கர், அவர் கூடவே இருந்து சகலமும் பண்ணினார்; அனுஷ்டானங்களை யெல்லாம் அவரிடம் கற்றார்.

ஆசமனீயம் பண்ணுகிறோம்... உளுந்து அளவு ஜலத்தைத்தான் உத்திரிணியிலே எடுக்கலாம்... நிறைய ஜலத்தை எடுக்கக் கூடாது. இது தவிர, குளிர் காலமாக இருக்கிறதே என்று வெந்நீரை வைத்துக் கொண்டு ஆசமனீயம் பண்ணக்கூடாது! அது மட்டுமல்ல; கை நிறைய, வழிய வழிய வழிய ஜலத்தை எடுத்துக் கொள்ளக்கூடாது. ஒரு உளுந்து தானியத்தைப் போட்டால் அது முழுகுகிற அளவுக்குத்தான் தீர்த்தத்தை எடுத்துக்கொள்ளலாம்.

கிழக்கைப் பார்த்தோ வடக்கைப் பார்த்தோதான் உட்கார்ந்து ஆசமனீயம் பண்ணலாமேயொழிய, மேற்கு - தெற்கு பார்த்துப் பண்ணக்கூடாது. உட்கார்ந்த வாக்கில்தான் பண்ணலாமேயொழிய நின்று கொண்டே பண்ணக்கூடாது.

நின்று கொண்டே பண்ணினால், அடுத்த ஜன்மத்திலே முதலையாகப் பிறப்பான் என்று சொல்லுவார்கள்!

உதட்டிலே கைபடாமல் தீர்த்தத்தை உள்ளே அனுப்ப வேண்டும். அதற்கு ரொம்ப சாமர்த்தியம் வேண்டும். உதட்டிலே பட்டால் எச்சிலாகி விடுகிறதல்லவா...! ஆதலால் ரொம்ப ஜாக்கிரதையாக மகான்கள் பண்ணுவார்கள்.

உறிஞ்சி உறிஞ்சி ஆசமனீயம் பண்ணக் கூடாது. ஆசமனீயமே பிரளயமாக இருப்பதா...? இருக்கலாமா! ஆதலால் உறிஞ்சக் கூடாது. சாப்பிடுகிறபோதுகூட உறிஞ்சக் கூடாது; ஆசமனீயம் பண்ணுகிறபோது உறிஞ்சவே கூடாது.

இந்த அனுஷ்டானத்தோடு இஞ்சிமேட்டு அழகிய சிங்கர் சின்ன வயதிலே ஆரம்பித்தார். திருவள்ளூரில் எழுபத்தினாலாவது வயதில் பரமபதிக்கிறபோதும் அதே மாதிரி அவ்வளவு நிதானம் தவறாமல் அவற்றைத் தொடர்ந்தார்.

(வளரும்)

# விழா வாசகர் திட்டம் - 1

வானதி, குந்தவை, பூங்குழலி, வந்தியத்தேவன், தாரிணி, சிவகாமி... போன்ற பெயர்களை நீங்கள் சூடியிருந்தாலும், உங்களுக்குத் தெரிந்தவர்கள் வைத்துக் கொண்டிருந்தாலும், தகுந்த ஆதாரங்களோடு எங்களுக்கு அனுப்பி வைத்தால், அந்த 'வாழும் கல்கி கதாபாத்திரங்களை' 'கல்கி'யில் அறிமுகப்படுத்த ஆவலாக இருக்கிறோம்.

ரிமோட்

அலட்டிக் கொள்ள வேண்டிய அவசியமில்லாத லைட் மியூசிக் ரோலில் சத்யராஜ் அசத்திவிடுவார் என்பதற்கு 'அசத்த'லே சாட்சி. அர்த்தமில்லாத, அபத்தமான, செயற்கையான காட்சிகள்தான். Neither here, nor there என்னும்படியான பாத்திரம். இருந்தாலும் கூட்டாளிகள் வடிவேலு, ரமேஷ் கண்ணாவுடன் சேர்ந்து அவர் அடிக்கும் கூத்து எரிச்சலும் ஏற்படுத்தி, சிரிப்பும் வரவழைக்கிறது. ('திரைச்சித்திரம்')

பசுமாட்டைப் பார்ப்பதற்காக இவர் போக, பெண் பார்க்க வந்திருப்பதாக அவர்கள் நினைக்க, இரண்டுக்கும் பொருந்தும்படியான வசனத்தில் குழப்பம் கும்மாளமடிக்கிறது. Sure, it is good laugh.

சுத்தமான உச்சரிப்புக்கும் சுயமான வாக்கியங்களுக்கும் சுகமான குரலுக்கும் புகழ் பெற்ற அப்துல் ஹமீது ஜெயாவில் 'ஆனந்த ராகம்' நடத்துகிறார். அதில் –

பின்னணிப் பாடகி ஹரிணி 'நிலாக் காயுதே' பாட்டில் ஆரம்பித்தார். கர்னாடக சங்கீதத்திலும் தமக்குத் தேர்ச்சி உண்டு என்பதை நிரூபிக்கும் வகையில் 'பாவயாமி கோபாலபாலம்' உருக்கமாகப் பாடினார்.

'பாட்டின் நடுவில் எப்படிச் சிரிக்க முடிகிறது?' என்று ஹமீது கேட்டதற்கு, பாட்டைத் தனியாகப் பாடி, சிரிப்பைத் தனியே சிரித்து, பிறகு இரண்டையும் இணைக்கிறார்கள் என்ற தகவலைத் தெரிவித்தார்.

ஏ.ஆர். ரஹ்மானின் இசையமைப்பில் சுமார் பதினைந்து பாட்டுப் பாடியிருப்பதால் சிறப்பானது எது என்று குறிப்பாகச் சொல்ல முடியவில்லை என்றவர், பொதுவாக ஒரு பாட்டைப் பதிவு செய்ய இரண்டு மணி நேரம் பிடிக்கும் என்றால், ரஹ்மான் எத்தனை மணி நேரம் (அல்லது எத்தனை நாள்) பிடித்தாலும், திருப்தியாக வரும் வரை விடுவதில்லை என்றார். சில பாட்டைப் பிரமாதமாய்ப் பாடியும் காட்டினார். They held your undivided attention.

இனிமையானக் குரலில் அற்புதமாய்ப் பாட வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும் என்று ஹமீதும் கேட்கவில்லை. ஹரிணியும் சொல்லவில்லை. ஆனால் உதட்டுக்கும் புருவத்துக்கும் ஓவராக மேக்கப் செய்து கொண்டால் சிறப்பாகப் பாட வரும் என்ற ரகசியம் புரிந்தது.



சினிமாப் பாட்டும் சமையல் குறிப்பும் போல ரெகுலர் ஐட்டமாகி விட்டன வைத்திய ஆலோசனைகள். மூளை ஆப



ரேஷன் முதல் கால் ஆணி வரை சகலத்துக்கும் சிகிச்சை முறைகள் கிடைக்கின்றன.

சன்னில் என். விஜயா என்ற ஃபிஸியோ தெரபிஸ்ட் சுளுக்கு விழுந்தால் என்ன செய்ய வேண்டும் என்று சொல்லித் தந்தார். (விழுந்தால்தானே சுளுக்கு?)

1. வென்னீர் ஒத்தடம் கூடாது. 2. ஐஸ் தண்ணீரில் ஒத்தடம் தரலாம். – இரண்டு மூன்று நிமிடம் மட்டுமே. 3. சுளுக்கு விழுந்த இடத்துக்கு ரெஸ்ட் தர வேண்டும்.

**வினோத்**



# எரிச்சலோடு சிரிப்பும் சேர்த்தி!

4. ஆயிண்ட்மெண்ட் எதுவும் தடவக் கூடாது.

அருமையான டிப்ஸ். அரசியல்வாதிகளும் அமைச்சர்களும் உபயோகப்படுத்திக் கொள்வார்களாக. நெப்போலியன் சொன்னது போல, In politics there is no heart, only head. அதை ஆட்டிக் கொண்டேயிருப்பதால் சுளுக்கில் சிக்குவது சகஜம்.

'**வ**டுகப்பட்டி மாப்பிள்ளை' (வந்து விட்டதா, வரப் போகிறதா?) சொல்கிறார்: 'என் பொண்டாட்டியும் என் அம்மாவும் வீட்டில் செய்கிற ரகளை பொறுக்க முடியலே. ரெண்டு பேரையும் கடத்திட்டுப் போய் ஒரு தீவிலே விட்டு விட்டு வந்திடலாம்னு நினைக்கிறேன்.'

விகவின் அறிவுரை: ''ஐயையோ! இரண்டு பேரையும் ஒரே தீவிலே கொண்டு போய் விட்டால் அந்தத் தீவு என்ன ஆகிறது? அதனாலே, பெண்டாட்டியை ஒரு தீவிலும், அம்மாவை இன்னொரு தீவிலும் தனித்தனியே கொண்டு போய் விட்டு விட்டு வா''

பெண்ணுக்குப் பெண்ணே எதிரி என்பதெல்லாம் ஆணாதிக்கக்காரர்களின் கட்டுக் கதை என்று முற்போக்கு மாதர்கள் சொல்லி வரும் காலம் இது. ஜாக்கிரதை விக! No one delights more in vengeance than a woman என்று அறிஞரொருவர் பகன்றிருக்கிறார்.

**த**ண்ணீர் என்றால் என்னவென்று கேட்கும் காலிக் குடங்களுடன் தெருத் தெருவாகக் கூடி நிற்கும் மக்களையும் அவர்களுடைய அவதிகளையும் ஜெயா ஒன்றுதான் காட்டுவதில்லை. (சென்னை மக்கள், வெள்ளத்தில் தவிக்கிறார்கள் என்று அவர்கள் எண்ணமாக இருக்கலாம்.)

மற்றபடி, சன், விஜய், ராஜ், பாரதி எல்லாரும் வரலாறு காணாத வறட்சியைப் படம் பிடித்துக் காட்டுகிறார்கள். தண்ணீர் லாரி வருவதேயில்லை, வந்தாலும் நள்ளிரவில் தான் வருகிறது என்றெல்லாம் பேட்டி காணுகிறார்கள். இது ஒரு negative approach என்று தோன்றுகிறது.

மாறாக, செப்டம்பர் வரை தண்ணீர்ப் பஞ்சம் வராது என்று சத்தியம் பண்ணிக் கொண்டிருந்த மெட்ரோ வாட்டர் அதிகாரிகளை ஒரு பிடி பிடிப்பதற்கென்ன? நீங்கள் இன்று சொல்லும் தீர்வு என்ன என்று கேட்டாலென்ன? Be eager to light a candle rather than curse the darkness.

"தொண்டர்கள் விருப்பத்துக்கு மாறாக, அ.தி.மு.க. கூட்டணியிலிருந்து விலகி உள்ளாட்சித் தேர்தலில் தனித்துப் போட்டியிட திட்டம் போடுகிறார் டாக்டர் ராமதாஸ். அந்தப் போக்கு பிடிக்காமல் பா.ம.க. பொருளாளர் பதவியிலிருந்து விலகுகிறேன். கணக்கு வழக்குகளையெல்லாம் கோர்ட்டில் ஒப்படைப்பேன்" என்ற அதிரடி அறிக்கை விட்டுவிட்டு, 'புரட்சி பாட்டாளி மக்கள் கட்சி'யை ஆரம்பித்திருக்கிறார் பா.ம.க. பொருளாளர் ஆபிரகாம் ராயன். "அவர் கட்சி நிதியை மோசடி செய்து விட்டார். எனவே அவரை அடிப்படை உறுப்பினர் பதவியிலிருந்து விலக்குகிறேன். அவர் மீது தக்க நடவடிக்கை எடுக்கப்படும்" என்று பதில் அறிக்கை விட்டிருக்கிறார் கட்சியின் தலைவர் ஜி.கே. மணி. இதன் மூலமாக பா.ம.க.வில் உள்ள புகைச்சல் வெளியே தெரியத் துவங்கிவிட்டது. ராயனின் அதிரடி அறிக்கைக்கு என்ன காரணம்? விசாரித்தோம்:

# உடைகிறது

நடைபெற்ற சட்டமன்றத் தேர்தலுக்குப் பிறகு ஒவ்வொரு மாவட்டத்தைச் சேர்ந்த பிரமுகர்களையும் அழைத்து தமது தைலாபுரம் தோட்டத்தில் ஆலோசனை நடத்தி வருகிறார் டாக்டர். சமீபத்தில் தென் மாவட்டங்களைச் சேர்ந்தவர்கள் டாக்டரைச் சந்தித்தார்கள். அதற்குச் சில நாட்கள் முன்புதான் அம்மாவை கோட்டையில் சந்தித்தார் டாக்டர். முதலில் பேசத் துவங்கிய ஜி.கே. மணி, "முதல்வர் ஜெயலலிதா டாக்டரை கொஞ்சமும் மதிக்கவில்லை; தமது சபதத்தை மீறி கோட்டைக்குச் சென்ற டாக்டரை ஒன்றரை மணி நேரம் காக்க வைத்து விட்டார். ஆனால் கி. வீரமணி, இரண்டு நிமிடம் கூட காத்திராமல் முதல்வரைச் சந்தித்துவிட்டார். ஜெயலலிதாவை விட கருணாநிதி மரியாதைக் கொடுப்பதில் எவ்வளவோ மேல்" என்று பரபரப்போடுத் துவங்கி வைத்தார். கடைசியாகப் பேசிய டாக்டர், "அதிமுகவுடன் கூட்டணி முடிந்து விட்டது; உள்ளாட்சித் தேர்தலில் தனித்துதான் போட்டி" என்று சொல்லிவிட, கூட்டம் ஆச்சர்யப் பட்டுப் போனது. "அன்புச் சகோதரி என்று பாசம் பொங்க



முதல்வரை அழைத்து வந்த ராமதாஸ் இவ்வளவு விரைவில் இப்படி முடிவெடுப்பார் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. அன்று மாலையே சென்னை வந்த

பொருளாளர் ஆபிரகாம் ராயன் டாக்டருக்கு அதிர்ச்சி தரத்தக்க அளவில் அறிக்கை கொடுத்து விட்டார். இந்தக் கூட்டணி விவகாரம் தவிர, டாக்டர் மீது ஏற்கெனவே கோபத்தில் இருந்தார் ராயன்.

**நா**கர்கோவிலைச் சேர்ந்தவர் வழக்கறிஞர் ராயன். பா.ம.க. நடைமுறைப்படி மைனாரிட்டி வகுப்பைச் சேர்ந்தவர்களுக்குத்தான் பொருளாளர் பதவி கொடுக்கப்படும். அப்படித் தேர்ந்தெடுக்கப்பட்டவர்தான் ராயன். சென்னை தேனாம் பேட்டையில் உள்ள கட்சி அலுவலகத்தில் 24 மணி நேரமும் இருந்து வந்தவர். அந்த அர்ப்பணிப்பு உணர்வு காரணமாக டாக்டரிடம் நல்ல பெயர் வாங்கியவர். ஆனால் இப்போதைய எம்.பி. ஒருவரின் துர்போதனை காரணமாக தேர்தலுக்கு முன்பே ராயன் குறிவைக்கப்பட்டார். "லட்சக்கணக்கில் ரூபாய் கையாடி விட்டார்" என்று அவர்மீது புகார் கூறப்பட்டது. ஒரு 'கும்பலால்' தாக்கவும் பட்டார். அவரை ஒரு சிறைக் கைதி போல கட்சி அலுவலகத்தில் வைத்திருந்தார்களாம். அவர் எங்கு சென்றாலும் கூடவே நான்கு பேர் (பாதுகாப்புக்காக?) சென்றார்கள். பா.ம.க. பொருளாளராக இருந்தாலும் மாநாடு, பொதுக் கூட்டங்களில் கூட ராயன் மேடைக்கு வர மாட்டார். கடைசியில் கணக்கு வழக்கு சோதிக்கப்பட்டு, ராயன் தவறு ஏதும் செய்யவில்லை என்பது டாக்டருக்குப் புரிந்தது. ஆனால் இந்த சம்பவங்கள் ராயனுக்குப் பெரிய மன உளைச்சலை ஏற்படுத்தி விட்டன. ஊழியர்கள் கூட்டத்தில் ராமதாஸ் பேச்சு எரிச்சலை ஏற்படுத்தவே, எல்லாம் சேர்ந்து வெடித்து விட்டது.

"சமீப காலமாகவே டாக்டரின் நடவடிக்கைகள் கொஞ்சமும் சரியல்ல. தன் மகனுக்கு ராஜ்ய சபை உறுப்பினர் பதவி பெற்று, பா.ஜ.க.விடம் கெஞ்சி அவரை மத்திய அமைச்சராக்கும் முயற்சியில் டாக்டர் இறங்கிவிட்டார். கட்சியைப் பொறுத்த மட்டில் இனி பட்டாபிஷேகம்தான் பாக்கி. அந்த நிலையில் கட்சி செங்குத்தாக உடையும்" என்று நம்மிடம் சொன்னார் முக்கியப் பிரமுகர் ஒருவர்.

சமீபத்தில் ஜெயலலிதாவை டாக்டர் சந்தித்தபோது அவர் ராஜ்ய சபை தேர்தலில் அன்புமணிக்கு ஆதரவு கொடுப்பது குறித்து உறுதிமொழி ஏதும் கொடுக்காததும் டாக்டரின் கோபத்துக்குக் காரணம். ஒரு வழக்கு தொடர்பாக பா.ம.க. பிரமுகர்களுக்கு நெருக்கமான பங்க் குமாரை போலீஸ் கைது செய்யாமல் தயங்கி நிற்கிறது. டாக்டரின் நிலை மாறியிருப்பதால் இனி டாக்டருக்கு எதிரான நடவடிக்கைகளில் ஆளும் கட்சி இறங்குவதற்கான வாய்ப்பு இருக்கிறது.

பா.ம.க?

புலனாய்வு போலீஸ் பல தகவல்களைத் திரட்டியிருக்கிறது. அம்மாவுடன் உள்ள உறவு அறுபடும் சூழலில் தி.மு.க. ஆட்சியின்போது பதிவு செய்யப்பட்ட சில வழக்குகள் தூசி தட்டப்படலாம்.

**எம்.**ஜி.ஆர். கழகப் பொதுச் செயலாளர் ஜெகத்ரட்சகன், மாவட்டம் தோறும் 'வீரவன்னியவர் பேரவை' என்ற பெயரில் கூட்டங்கள் நடத்தி வருகிறார். பா.ம.க.வினர் அந்த பேரவைக்குச் சென்றுவிடப் போகிறார்கள் என்ற பயத்தில் சமீபத்தில் ஜெகத்ரட்சகன் 'சிலரால்' மிரட்டப்பட்டிருக்கிறார். பல சுயநிதி கல்லூரிகளை நடத்தி வரும் ஜெகத்ரட்சகன் கல்வியாண்டின் துவக்கத்தில் பிரச்னைகள் வேண்டாம் என்று சற்று ஒதுங்கி இருக்கிறார்.

திரைமறைவில் நடக்கும் வேறு பல விவகாரங்களையும் பார்க்கும்போது பா.ம.க.வில் இப்போதுள்ள புகைச்சல் நெருப்பாக கொழுந்துவிட்டு எரியும் காலம் தூரத்திலில்லை என்பது மட்டும் தெளிவாகத் தெரிகிறது.

— **தில்லப்பா**



• கலாட்டா



• உத்சவரின் உவப்பு

குடிசைப் பகுதிகளில் கிரிமினல்கள் முகிழ்வது போய், இன்று எஸ்எஸ்சி(SSC)யில் 'டாப்'பர்கள் மலர்வது, மழைக்கால கிளுகிளுப்பில் போனஸாக ஒரு சிலிர்ப்பை ஏற்படுத்தியுள்ளது. அதுவும் முலுண்டிலுள்ள ஹனுமந்த் பாடா குடிசைப் பகுதி, "மெரிட் லிஸ்டர்கள்" விளையும் பூமியாகவே மாறிவிட்டது. இந்த வருட எஸ்எஸ்சியில், மும்பையின் முதல் மாணவனான சேகர் குராவைத் தன் கையகல குடியிருப்புகள் ஒன்றில் அடக்கிக்

# 'கத்தார்' ரகளை!

கொண்டு, கிரீடமே சூட்டிக் கொண்டுவிட்டது! புத்தகங்களை வைத்துக் கொள்ளக்கூட இடமில்லாமல் தவித்த சேகருக்கு, குவியும் மலர் கொத்துக்களையும் பரிசுப் பொருள்களையும் எங்கே வைப்பதென்றே தெரியவில்லை! மும்பை கார்ப்பரேஷனில் காவலாளியாகப் பணிபுரியும் தந்தைக்கு, மகன் ஆற்றிய உதவியால், தனி ஃப்ளாட் ஒதுக்கப்பட்டிருக்கிறது; ஆனால் இந்தக் கௌரவத்தை ஏற்கவில்லை மகன்; "அக்கம் பக்கத்தில் என் நண்பர்கள் குடிசைகளெல்லாம் இடிக்கப்படும்போது, நான் மட்டும் எப்படி ஃப்ளாட்டில் சந்தோஷிக்க முடியும்?" என்கிறான். இத்தனை வறுமையிலும், புத்திசாலித்தனத்துடன் மனிதாபிமானமும் சேர்ந்த இளைஞனுக்குக் கோயிலே கட்ட வேண்டும் போல் தோன்றவில்லை?

ஆனால் நம் புத்தி நம்மை விட்டுப் போகுமா? இவர்களுக்கெல்லாம் கோயில் கட்ட நாம் என்ன முட்டாள்களா? குஷ்புவுக்கு வேண்டுமானால் கட்டுவோம்... அடுத்து அமிதாப்புக்கு! லண்டனிலேயே அவருக்குச் சிலை வைக்கும்போது, நாம் ஒரு படி மேலே போக வேண்டாமா? கோல்கத்தாவில் சிலை வைத்து, பூஜையும் செய்வோ

## திடீர்ப் பரிசுப் போட்டி முடிவு — 11



'பஸார்' கமெண்ட்' கேட்டிருந்தோம். வந்து விழுந்த குவியல்களில் ரூ.100 பரிசு பெற்ற கமெண்ட் வந்தவாசி வாசகர் பா. ஜெயகுமார் எழுதியது:

"அம்மா, தாயே! இனிமே நீ மெகா தொடர் பார்க்கும் போது நான் தொந்தரவு செய்ய மாட்டேன்..."



• சிவ - சங்கரா!

மாக்கும்! இது பற்றி, மும்பையிலிருக்கும் 'angry old (young?) man' கொதிப்படைகிறாரா? சீச்சீ... நாடெங்கிலுமுள்ள ரசிகர்களின் அன்புக்கு மதிப்பு கொடுத்து, தலை வணங்குகிறாராம்! ஏற்கெனவே, இவர் அடிபட்டு ஆஸ்பத்திரியில் இருந்த போது, பரோடா விலிருந்து பின்புறமாகவே 400 கி.மீ நடந்து வந்து, இவரிடம் பிரசாதத்தைக் கொடுத்து விட்டு, அப்படியே பரோடா திரும்பி, மொத்தம் 800 கி.மீ பேக்-வாக் செய்து சாதனை படைத்திருக்கிறராம் ஒரு விசிறி! பிரிதொரு ராஜஸ்தானி, இவர் தம் வீட்டுக்கு வர வேண்டுமென்று வாரம், ஒரு நாள் விரதமிருக்கிறாராம்! ஹூம்... 'ரீல் லைஃபை' 'ரியல் லைஃப்புடன் நம்மவர்கள் குழப்பிக் கொண்டிருக்கும் வரை, பைத்தியக்காரச் செய்கைகளுக்கு எல்லைதான் எது?



• 'மணம்' பரப்பும் குராவ்

இப்படித்தான்... சன்னி தியோலின் 'கத்தார்' ரிலீசாகி ஒரு வாரமாகவில்லை; அதற்குள் ஒரு கலாட்டா; படத்தில், ஸகீனா என்ற பெண், ஒரு சீக்கிய இளைஞனைக் கைப்பிடித்து, காதலுக்காக இஸ்லாமைத் துறக்கிறாளாம்... 'ஸகீனா என்பது தேவதூதன் முகமதுடைய பெண்ணின் பெயர்; வேண்டுமென்றே இஸ்லாமை அவமதிக்கிறார்கள்' என்று கூக்குரல்! போபாலில் ஆரம்பித்து, அகமதாபாத்துக்குச் சென்று விட்டு இப்போது மும்பையில் இறக்குமதியாகியிருக்கிறது ரகளை... 'யா அல்லா!'' இந்த 'மதம்' பிடித்தவர்களைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்!

தேசியவாத காங்கிரஸ் கட்சியின் அமைச்சர் விமல் முந்தாதா 13 வயது சிறுமியின் திருமணத்தில் பங்கு கொண்டு வாழ்த்திய செய்தியைத் தினசரிகளில் பார்த்து சிவசேனைக்காரர்கள் கொதித்தார்கள். 'பெண்கள் குழந்தைகள் நல அமைச்சராக இருந்துகொண்டு, எப்படி பால்ய விவாஹத்தை ஆதரிக்கப் போவது?' என்று தர்ணாவும் செய்தார்கள். உடனடியாக ராஜினாமா செய்யச் சொன்னார்கள். அதற்கு கட்சி மேலிடம் ''13 வயசா? பார்த்தா அப்படித் தெரியவில்லையே? அழைத்தவர்களும் சொல்லவில்லையே? இதற்கெல்லாம் ராஜினாமாவா?' என்று மறுதளித்துவிட்டு ஆனாலும் 'வி வில் லுக் இன் டு த மாட்டர்' என்றிருக்கிறது!

இப்படிப்பட்ட நம் சமூகத்தைக் காப்பாற்ற பகவானால்தான் முடியும் என்று முடிவு கட்டி விட்டதால், இப்போது மும்பையில் ஒரே ஆன்மிக அலை! அனில் அம்பானி - மன்வி டீனா, ஆதி காத்ரெஜ் - மனைவி பரமேஸ்வர்... இன்ன பிற இண்டஸ்ட்ரியலிஸ்டுகளே மானசரோவர் யாத்திரை கிளம்பி விட்டனர்.

ம்ம்... சங்கரா... 'சிவ' சங்கரா... (பக்கத்திலுள்ள படத்தைப் பார்த்து விட்டீர்களா?)

— ஜெயஸ்ரீ ராஜ்



**மேஷம்:** மாருதி கார் விற்பனை உயர்ந்திருப்பது போல, உங்கள் மதிப்பு, நிர்வாகத் திறமை, பொருளாதாரம் போன்றவை உயரும். அரசியல்வாதிகளுக்கு அம்புட்டும் ஆதாயம்! வியாபாரம், ஆபீஸ், உத்தியோகம்னு ரோலர்ஸ் கட்டிக்கிட்டு ஸ்கேட்டிங் பண்ணினது போதும். கொஞ்சம் குடும்பத்தையும் கவனியுங்க. குறிப்பா, குழந்தைங்க படிப்புல அக்கறை காட்டுங்க. உ.பி.ச.களால் தொல்லைகள் எல்லை மீறும். கபர்தார்!



**ரிஷபம்:** குரு, சுக்ரன் இரண்டு பேருமே நல்ல குஷியான மூடில், டேக் ஆஃப் ஆகியிருக்காங்க. அப்புறமென்ன... ஒன்றுக்கு மேற்பட்ட இனங்களில் வருவாய் கிடைக்கப் போகுது. வீட்டுலே ஃபோன் இருக்கா...? பக்கத்துலேயே உட்கார்ந்திடுங்க... எதிர்பார்த்த நல்ல தகவல் வந்துக்கிட்டேயிருக்கு... அடிக்கடி மெரினா, கோவளம்னு பீச்சு பக்கமா காத்து வாங்கப் போகாதவங்களுக்குக் கூட, கடல் வாணிபம் லாபம் கொண்டு வரும். உங்க வாழ்க்கையில் குடும்பம், குழந்தைனு நிறைய நல்ல திட்டங்கள் வகுக்க நேரம் கூடி வந்திருக்கு. கிளப்புங்க தலைவா!



**மிதுனம்:** பிளாஸ்டிக் குடங்களோடு சாலை மறியல் செய்யும் பெண்களைப் போல, ஜென்ம ராசியில் சூரியன், புதன், குரு, ராகு அமர்ந்து டென்ஷன் செய்து கொண்டிருக்கிறார்கள். இதனால் அலைச்சல் அதிகரிக்கும். உஷ்ண சம்பந்தமான பாதிப்பு வரும். காரியத் தடங்கல் வரும். எதிலும் நிதானமாக இருந்து, அமைதியாக செயல்பட்டால், ஓரளவு சமாளிக்கலாம். உடன் பிறந்தவர்கள் லிமிட்டா உதவுவாங்க. பிரார்த்தனை பண்ணுங்க. 'திக்கற்றவருக்குத் தெய்வமே துணை'னு பெரியவங்க சொல்லியிருக்காங்களே!



**கடகம்:** எதிர்ப்புகள் குறையும். சமுதாய நற்பணிகளில் ஈடுபாடு இருக்கறவங்களுக்கு, புகழ் ஃபோகஸ் கிடைக்கும். குஜராத்தில் மீண்டும் நில நடுக்கம் ஏற்பட்டது போல, அரசாங்க உத்தியோகஸ்தர்கள் வாழ்வில் அவ்வப்போது, நடுக்கம் ஏற்படும். ஈனோ சால்ட், ஜெலூசில் போன்றவற்றை ஸ்டாக் வெச்சிருங்க. வயிற்று உபாதை வந்து படுத்தலாம். போட்டி, பந்தயம், லாட்டரி.... பைசா பிரயோஜனமில்லை. எச்சரிக்கை...



**சிம்மம்:** உங்களை நீங்களே தன்னம்பிக்கையோடு பளிச்சிட வைக்கப் போகும் காலம் ஆகயா! ராசிநாதன் 11ம் இடத்தில் செட்டில் ஆகியிருக்கிறாரே, இது போதாதா! கலைத் துறை, சினிமா, நாட்டியம், சங்கீதம், சிற்பம் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு அதிர்ஷ்டம் ஆரத்தி எடுத்து வரவேற்கப் போகுது. தொழிலாளர்கள், அரசுப் பணியாளர்கள் நிலை உயரும். பெண்களுக்கு மனத்திற்கினிய சம்பவங்கள் நடக்கும். கேதுவிற்குப் ப்ரீதி செய்து வருவது சகல நன்மைகளையும்

# நடக்குமென்பார்

சட்டுபுட்னு தந்து சந்தோஷப்படுத்தும்.



**கன்னி:** வெள்ளி விலை சரிஞ்சா, சரிஞ்சுக்கிட்டுப் போகட்டுங்க! உங்க மதிப்பும், செல்வாக்கும் 'மளமள'னு உயரப் போகுதே! 'நல்லதா நாலு காரியம் பண்ணி, புண்ணியம் சேர்த்துக்கலாம்னா, வேளை வரமாட்டேங்குதே'னு புலம்பிக்கிட்டிருந்தீங்க இல்லியா? இதோ, புனிதப் பணிகளில் பங்கு கொள்ள நல்ல சந்தர்ப்பம் வாய்க்கப் போகுது. கெட்டியாப் பிடிச்சுக்கோங்க! நவீன விஞ்ஞானம், கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக்ஸ் துறைக்காரர்கள், வெற்றி நடை போடுவாங்க. வாரப் பின் பகுதியில் எதிர்பாராத செலவுகள் வந்து சேரும்.



**துலாம்:** 'சமையல் எரிவாயு, கெரசின் விலை உயராது' என்று திட்டவட்டமாக அறிவித்து நடுத்தர மக்களின் வயிற்றில் ஐஸ் வாட்டர் வார்த்திருப்பதைப் போல, உங்கள் எண்ணங்களும் ஈடேறி குதூகலமடைவீர்கள். அந்த

எண்ணங்களை நிறைவேற்ற வி.ஐ.பிகள் உதவுவார்கள். நின்று போயிருந்த தெய்வப் பிரார்த்தனை இப்போது நிறைவேறும். கல்யாணம் கெட்டி மேளம் கொட்டும் மனத்தில் மகிழ்ச்சி அலை பரவும். பெண்களுக்குச் சின்ன சின்ன பிரச்னை ஏற்பட்டு, உடனேயே விலகி விடும். சனி கிரகப் ப்ரீதி செய்வது நலம் தரும்.



**விருச்சிகம்:** ஆரம்பத்துலேயே சொல்லிடறோம். முக்கியமான கிரக சஞ்சாரம் அனுகூலமாக உலவாததால், எந்தக் காரியத்திலும் நிதானம் தேவை. விம்பிள்டனில் ஹிங்கிஸ் அடைந்த தோல்வி அளவுக்கு அதிர்ச்சி இல்லாவிட்டாலும், சிறு சிறு ஏமாற்றங்கள் நேரவே செய்யும். ஆதாம்களுக்கு ஏவாள்களால் மன அமைதி குறையும். கேளிக்கை, விளையாட்டு, உல்லாசங்களைக் குறைத்துக் கொள்வது ரொம்ப அவசியம். தான, தருமம்னு ஏதாவது செஞ்சு வையுங்க. புண்ணியமாப் போகும்.

# நடக்கும்!



மகர ராசிக்காரரான மாது பாலாஜிக்கு இந்த வாரம் அமர்க்கள வாரமாம்!



**தனுசு:** 'ஜெ'யிடம் மனு கொடுக்க மோதும் பெண்கள் அலை போல, உங்கள் செயலிலும் நம்பிக்கை அலை மோதும் துணிச்சல் ஏற்படும். 'முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படலாமா?' என்றெல்லாம் பத்தாம் பசலித்தனமாய் யோசிக்காம, 'புதிய முயற்சிகளில் சடுகுடு ஆடுவீங்க. வாழ்க்கைத் துணையால் நன்மை ஏற்படும். பம்பர் குலுக்கலில் பரிசு, ஜாக்பாட் பண மழைனு ஏதேதோ சொல்றாங்களே! ட்ரை பண்ணிப் பாருங்க... ஒரு வேளை அதிர்ஷ்ட தேவதை உங்க பேரை 'லாக்' பண்ணலாம்.



**மகரம்:** புதிய பொருள் சேர்க்கை, ஆடை அணிமணி, விருந்து, உபசாரம்னு ஆரம்பமே அசத்தலா எழுத வேண்டியிருக்கு. வாழ்த்துக்கள். சூரியன், செவ்வாய், புதன், சுக்ரன், ராகு... அஞ்சு பேருமே உங்க சைடுதான். அதான் இந்த அமர்க்களம். நெருப்பு, எரிபொருள், வெடிமருந்து சம்பந்தப்பட்ட பிசினெஸ் பணம் பூக்கும். பெண்கள் நினைச்சதை சாதிப்பாங்க. கெட்ட சகவாசத்தை விட்டு, நல்ல விஷயங்கள்ல மனத்தைச் செலுத்துங்க. கல்யாண யோசனை இருந்தா வாய்தா கேட்டுத் தள்ளிப் போடுங்க.



**கும்பம்:** பணிவுக்கும் விசுவாசத்துக்கும் ஏற்ற பதவியை ஜெ கொடுப்பது போல உங்க உழைப்புக்கும் முயற்சிகளுக்கும் ஏற்ப பலன் கிடைக்கும். கணிதம், எழுத்து, பத்திரிகைத் துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு ஜக்கம்மா பாணியில் குறி சொல்லுவதானால், நல்ல காலம் பொறக்குது' சுப பலத்தின் காரணமாக நல்ல காரியங்கள் நடக்க சந்தர்ப்பம் காத்திருக்கு. நீண்ட நாள் குழந்தை இல்லாதவர்களுக்குத் தொட்டில் கட்ட நேரம் கனிஞ்சிருக்கு. பெரியவர்களின் அட்வைஸ் படி நடந்துக்கிட்டா பிரச்னையாவது ஒண்ணாவது.



**மீனம்:** மீன ராசிக்கார அன்பர்களே என்று அன்பாக விளித்து அயலான பலன்கள் சொல்ல நேர்ந்தமைக்கு உங்கள் கிரக சஞ்சாரத்திற்கு நன்றி சொல்லி ஈ-மெயில் அனுப்பிடுங்க. கம்மிங் டு தி பாயிண்ட், வசீகர சக்தி கூடும். குடும்பத்துல குதூகலம் நிறையும். புத்திசாலித்தனம் 'நான் இங்கே இருக்கேன்'னு தண்டோரா போடும். இரும்பு, எஃகு, எண்ணெய் வகையறாக்கள் லாபம் பெருகும். வாகன வகையில எதிர்பாராத செலவுகள் ஏற்படும். பேசாம, பொடி நடையா நடந்தே போயிடுங்க!

**அக்னிசர்மா பக்கம்**

**ஜூலை 4 முதல் 10 வரை**



# நில், கவனி, வெற்றிகொள்!

**வீ**டு, குடும்பம் என்பதெல்லாம் வெறும் செங்கல், சிமெண்ட் விஷயமல்ல. உயிரைத் திரித்து பாச தீபம் ஏற்றும் அன்புக் கோயில். ஆனால் இப்போதுள்ள பரபரப்பான வாழ்க்கைச் சூழலில், எல்லா உறவுகளுமே பொருளாதாரச் சங்கிலியால் பின்னப்பட்டு, இயந்திரத்தனமாகிவிட்டன. விவாகரத்துகளும், முதியோர் இல்லங்களும் பெருகிவிட்டன. விருந்தாளிகள் வரவு குறைந்தேவிட்டது. குழந்தைகள் தனித்தீவுகளில் வசிக்கிறார்கள்.

இந்த நிலையை மாற்ற வேண்டாமா? குடும்பம் சிறந்தால்தானே நாடு உயரும்? சிந்தனை முத்துக்களைச் சிந்த வருகிறார்கள் இரண்டு பிரமுகர்கள்.

தலைப்பு : **அன்பெனும் கூட்டினிலே...**

நாள் : 8.7.2001 ஞாயிறு

இடம் : நாரதகான சபா, சென்னை - 18

நேரம் : மாலை 6.30 மணி

(சென்ற இதழில் அறிவித்ததுபோல் மாலை 6 மணி அல்ல)

தலைமையுரை : **சுகி.சிவம்**

சிறப்புரை : **சிவசங்கரி**

**குடும்பத்தோட வாங்க!**

**குதூகலமாத் திரும்புங்க!**

**அனுமதி இலவசம்.**

**கல்கி**

**ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்®**

இணைந்து வழங்கும் இளைஞர் திருவிழா!

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi

Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.

Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.

Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)

Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

